பிஸ்மில்லாஹி.

குணங்குடி

மஸ்தான்சாகிபவர்கள்

திருவாய்மலர்ந்தருளிய

# திருப்பாடற்றிரட்டு.

கோட்டாறு.

கா. ப. ஷெய்குத்தம்பிப்பாவலரவர்கள்

முன்னிலையில்பரிசோதித்ததை,



சென்னை

வித்தியாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

விலை ] 1917. [ரூபா—

இலாஹி

குணங்குடி

# மஸ்தான்சாகிபு அவர்கள்பேரில்

மகாவித்வான் திருத்தணிகைச்

சரவணப் பெருமாளையரவர்கள் பாடிய

# நான்மணிமாலை.



காப்பு.

நேரிசை வெண்பா.

எண்சீர் குணங்குடியா னென்னுங் குருமணிமேல்
வண்சீர்த் தமிழ்நான் மணிமாலை—பண்சீர்கொள்
கற்பனைசேர் பொற்பினவில் கைக்குப் பலவகையாங்
கற்பனைதீர் சிற்பரன்றாள் காப்பு.

நூல்.

நேரிசை வெண்பா.

பொன்னாதி யும்பொய்ப் பொருளினூறு புன்சுகத்தை
மின்னுமென் றெள்ளா விரகிலிகே—ளின்னே
குணங்குடியா னஞ்செய் குறிவாளி நல்க
வணங்குடியா னஞ்செய் வழுத்து. 1

கட்டளைக் கலித்துறை.

வழுத்துந்தொழும்படையன்பமைந்தோர்தமைமாநிலருள்
பழுத்துங்குணங்குடியான்கரைகாண்டகுபண்புடைத்தாய்
முழுத்தும்பவக்கடலைக்கடப்பித்திசைமுற்றுறவே
யழுத்தும்கரைபெறலில்லாதவானந்தமாங்கடலே. 2

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

கடல்சூழ் புவியி லுளத்திருளைக்
கருணை யொளியி னறக்களைந்து
விடல்சூழ் பவரிற் குணங்குடியான்
மிக்கோ னெனற்கோர் தடையுளதோ
மிடல்சூழ் புறத்தின் விழிமறைத்து
மேவு மிருளை விரிகதிரா
லடல்சூழ் பொருள்கள் பலவுறினு
மலரி யுயர்வாய்த் தோன்றுறுமே. 3

நேரிசை யாசிரியப்பா.

தோன்றுபல் பாரத் தொகுதியா மைந்தரை
யீன்று வளர்க்குமா னென்னுமிக் கலிதனிற்
காட்சியிற் புலப்படாக் கடவுளுண் டெனலு
மாட்சியி னவனை யா மருவலுண் டெனலு
முடலமீ தன்றிவே றுயிருள தெனலுந
துயிலுண வொழித்துத் தொடர்புல னடக்கிப்
பயிலு மனனலயம் பண்ணலுண் டெனலுங
கண்டவர் யாரிவை கட்டுரை யாமெனக்
கொண்டரு நூலையுங் குருவையும் பழித்துத்
தவத்தொழில் சிறிதுந் தழுவாது கைவிட்
டவதொழின் முழுவது மஞ்சாது புரியுங்
கொடியவர் கெட்டொழ குலைந்துடல் விதிர்ப்ப
வொடிவரு பத்தியி னுற்றவர் தமக்கெலாங்
கடவுளை யவனடி காணடகு திறத்தினைச்
சடமுறு முயிரவன் றன்னின்வே றன்மையை
வியத்தகு மைம்புலன் வென்றுமன் னடக்குறு
நயத்தகு மியோகமெஞ் ஞானநல் வியல்பினை

னையந் திரிபற வருளினு னுள்ளங்
கையுறு நெல்லிக் கனியென வுணர்த்து
மிணங்கு மெய்ப் புகழொடு மிசைந்தான்
குணங்குடி யானெனக் குலவு மாதவனே. 4

நேரிசை வெண்பா.

மாதவஞ்சேர் மேலோர் வழுத்துங் குணங்குடியான்
றீதவஞ்சேர் நம்மவித்தை தீர்க்குமெனக்—காதல்
விரைந்துபுகழ்ந் தோரிகழ்ந்தோர் மேவுவர்மெய்ப் போதம்
வ[illegible]ாது பிழைக்கும் வழி. 5

கட்டளைக் கலித்துறை.

வழிசேர் குணங்குடி யானெனு மாரியன் மல்கருள்கூர்
விழிசேர் திருமுகத் திங்கள்கண் டார்க்கன்றி மேவலுண்டோ
பழிசேர் மனவிந்து காந்த முறுகுறும் பண்பினொடு
மொழிசே ரஞ்ஞான மெனுமிரு ணீங்கு முறைமையுமே. 6

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

முறைமுறைவந் தரசரெல்லாம் வணங்கச் சீர்சான்
முடிபுனைந்து புடவிமுழு தாளும் பேறு
மறைதருமோர் வீட்டினுக்கே யவாவுண் மேவி
யரைக்கருங்கோர் சிகமொழித்துக் கந்தை சூழ்ந்து
பொறையுறுநின் றிருவருள்பெற் றையு மேற்றுண்
புண்ணியரா லொருபொருளென் றெண்ணற்காமோ
குறைவறுநற் புகழ்பரம யோகி யென்னுங்
குணங்குடியா னேவிளங்கக் கூறு வாயே. 7

நேரிசை யாசிரியப்பா.

வாயினுற் பலநூல் வகைதெரிந் துரைத்துங்
காயமேல் வெண்பொடி கவினுறப் பூசியுஞ்

செய்யகல் வாடையைத் திகழ்ந்திட வுடுத்துந்
துய்ய சடைமுடி துலைதரா முடித்துந்
தண்டிகை மண்டலஞ் சால்புறத் தாங்கியு
மண்டல மிசைவிரி மான்றோலி னிருந்தும்
படர்புலச் சூறையிற் படுசிறு துரும்பென
விடர்கெழு மனத்தரா யிருக்கின் றனர் பலர்
நெளிதிரைக் கடல்சூழ் நெடும்பெரும் புவிமிசை
யளிவளர் குணங்குடி யானெனு மமல
சாற்று மச்சாதனந் தானென் றிலாமலும்
போற்று மூனதருள் பொருந்திய வொருசில
ரொருதன தியல்புணர்ந் திருவினை யகற்றி
மூவா சைத்திற மேவாது விடுத்து
நாற்கதி நணுகுறு மேற்கதி விரும்பி
யைம்பொறிக் கெதிர்வற வெம்புல னடக்கி
யறுசம யங்களி னெறிநிலை தேறி
யெழுபிறப் பிகந்ததென் விழுமிய செருக்கிற்
பத்தியாற் படரெலா மொருவி
நித்தியா நந்த நிலையரா யினரே. ௮

நேரிசை வெண்பா.

ஆயுங்காலன்பி னழியாத் துணையாகுவ
காயுங்கா லன்படர்ந்து காதவுடன்—மாயுங்கா
லீதிக்கும் போதயனை நேராங் குணங்குடியான்
போதிக்கும் போதப் பொருள். ௯

கட்டளைக் கலித்துறை.

பொருட்செல்வம் புல்லிய தென்றே விடுத்திந்தப் பூதலத்தி
னருட்செல்வ மெய்துங் குணங்குடி யானருளாத ரித்தோர்

தெருட்செல்வ நன்கெய்தி யைம்புலன் மாளச் செகுத்தினியா
மிருட்செல்வ மல்லமெனவே மகிழ்வுற் றிருப்பர்களே. 10

எண்சீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

கள்ளுண்டுங் கொலைபுரிந்துங் கபடஞ் செய்துங்
கணிகையர்தம் புணர்ப்பினுறு காம நோயா
லெள்ளுண்டுந் திரிகொடும்பா தகத்தோர் தாமு
மிணையில்குணங் குடியானே யிறைவா வுன்றன்
விள்ளுண்ட கமலவடி படுந்தூளொன்று
மேற்படப்பெற் றிடினவர்வெவ் வினைகளெல்லாந்
தள்ளுண்டு சிறுசிலையோன் றெடுத்து வீசத்
தருவிறைபுட் குழாமெனவே பறந்து போமே. 11

நேரிசை யாசிரியப்பா.

மேதகு நிலையினை மேவிவாழ் வித்தக
வோதக விருடனை யொழிக்கு மாமணியே
யன்பினர் மகிழ்கொள வருள்பொழி முகிலே
யின்பநன் குதவுறு மினியதெள் ளமுதே
துகளற வோங்கிய துறவினர்க் கரசே
திகழறந் தாங்குபு சேர்குணங் குடியாய்
நின்னை வணங்கினோர் நெஞ்சா லயந்தொறு
முன்னை யிருத்திவே றுறைகின் றனையா
லொருவனோ பலரோ வொருநீ
தெரிதரப் புகல்கநின் றிருவுள மகிழ்ந்தே. 12

நேரிசை வெண்பா.

தேவருக்கு மெய்தரிய சிற்சுகத்தைத் தற்புகழ்ந்தோர்
யாவருக்கும் பாரினொழி யாதெளிதி—னீவனயக்
தொப்பில் பெருந்தவத்தி னோங்கு குணங்குடியான்
செப்பும் வினையனைத்துந் தீர்த்து. 13

கட்டளைக் கலித்துறை.

துதியும பழியு மமுதமும் புற்கையுந் துப்புமப்பு
நிதியுஞ் சிலையுங் கலவையுஞ் சேறு நிகருறவே
வதியுந் திறத்திற் குணங்குடி யானருள் வாய்த்தவன்பாற்
பதியுங் கருத்துடை யார்கள் கருத்துடைப் பார்கண்மெய்யே. 14

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மெய்யுறுசீர்க் குணங்குடியா னெனும்பவனே யாரினிவ்
விரிநீர் வைப்பி
னய்யுறுபித் தொலைவாத மல்கியைய மேவிடினு
நாடி நோக்கி
யுய்யுறுநன் னிலைபெறவோர் மாத்திரைதன் னுளமிரங்கி
யுரைத்தல் செய்யும்
பொய்யுறுமிப் பவநோயை யொழித்திணையி லாதசுகம்
பொருத்து வாறே. 15

நேரிசை யாசிரியப்பா.

மாறுகொண் டென்மன மாகிய பரியை
வீறுகொண் டவாவெனும் வீரனிங் கொருவ
னழிக்கா றெனுங்கல் லணைமிசை யார்த்தாங்
கிழுக்கா றுடைசின மெனுங்கலி னஞ்சேர்த்
தளியறு செருக்குமிக் காகமே லிவர்ந்து
வளியெனும் வாதுவன் வாய்ந்துடன் றொடர்தரப்
பொறியெனுங் கொடுவழி புகுந்திடச் செய்தலு
நெறிபிறழ்ந் தப்பரி நீள்புலக் கான்புகுந்
தரிவையர் மயக்கெனு மூளற்றினுள் வீழ்ந்துந்
தெரிபொன் னெனும்வனத் தீமிதித் தழுங்கியும்
பகர்மண் ணெனுங்கொடும் பாறைதாக் குற்று

மிகுபெருந் துன்பொடு மெலிந்துழல் கின்றதா
லின்குணங் குடியா னெனுந்தவர்க் கரசே
நன்குமற் றதனை நீ நல்வழி திருப்பியே
யஃதெனும் வாளினவ் வீரனைத் துமித்துக்
கருதுமக் கல்லனை யாதிகள் களைந்தொழித்
தென்வச மாக்குவை யெனின்யா
னின்வச மாகுவ னினதியல் புகழ்ந்தே. 16

நேரிசை வெண்பா.

புகழ்ந்து குணங்குடியான் பொங்கிசையை நெஞ்சந்
திகழ்ந்துபுல வீர்பாடல் செய்யீ—னிகழ்ந்து
மலத்திருக்கை மாற்றிநிலை மாறுவின் பெய்தி
நலத்திருக்கை நல்கு நயந்து. 17

கட்டளைக் கலித்துறை.

நயமேவு கஞ்ச முகமுங் கருணை நயனமுஞ்சீர்
பயமேவு செம்பொ னுறம்மேனி யும்மெழிற் பாதுகைசேர்
சயமேவு தாளுந் தலைவிரி கோலமுஞ் சார்ந்தன்பரி
தயமேவு மென்றுங் குணங்குடி யானெனுஞ் சற்குருவே. 18

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

குருவா யடுத்தோர்க் கருள்சுரக்குங்
கோதில் குணஞ்சேர் குணங்குடியா
னுருவா யருவா யுபயமுமா
யொன்றாய்ப் பலவா யறிஞர்விழை
திருவாய் விளங்கும் பரநிலையைத்
தெரிக்கு மெனின்மற் றவன்பெருமை
யொருவா யுடையோ னும்புகழ்வே
ஞோரா யிரம்வா யுறினுருங்கே. 19

### நேரிசை யாசிரியப்பா.

ஒருங்கிய மனத்தொடு மொருகாசு மிலனாய்க்
கருங்கடற் புவிமிசைக் காகன் மீதூர
வழுத்தி யன்புடை வந்திறக் கின்றவ
னெழிற்குணங் குடியா னெனுமருட் செல்வ
தன்னையு மிழப்ப தல்லா
லென்னை யவன்பெற வியம்பருள் சுரந்தே. 20

### நேரிசை வெண்பா.

சுரக்குமணற் கேணியினீர் தோண்டுந் தொறுமைந்
தரக்குங் குணங்குடியா னன்பர்க்—கிரக்கமொடு
னானந்தத் தேறல் வரப்புகல்வ தால்தோறு
மானந்தத் தேறல் சுரப்பாம். 21

### கட்டளைக் கலித்துறை.

ஆந்துணை நாடிற் குணங்குடி யானென் றறிந்தவன்பாற்
போந்துணை யோடன்பு செய்தவர் செய்தவர் பூதலத்திற்
சாந்துணை யுங்கை வருடிச்செவ் வாய்ச்சியர் தாட்கமலப்
பூந்துணை யூட லொழித்தாங்கு புல்லினர் புல்லினரே. 22

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

புல்லியு மல்லி சேர்ந்து பொலிவுறு மணத்த தாடிந்
தொல்லியல்வழுவாவண்மை தொடர்குணங் குடியானென்னு
நல்லியன் ஞான மூர்த்தி நாமமுற் றிடுதலாலே
சொல்லிய வெனது சொல்லுந் தோன்றுறுஞ் சிறப்பினுற்றே. 23

### நேரிசை யாசிரியப்பா.

உற்றிளங் கெழுமிய நற்றிற வன்பொடுங்
குணங்குடி யானருட் கிணங்கினோ ரியார்க்கும்

பகைமையுங் கேண்மையும் புகனிலை யெனலென்
னெடுங்கா லந்தமை நீங்காது பழகிய
கொடுங்கேண் மாயையைக் கொல்பெரும் பகைவராய்க்
கதுவிய கேண்மையிற் கலப்பர்
புதிதெனை வெய்திய போதந் தனக்கே. 24

நேரிசை வெண்பா.

தனக்குத்தா னேநிகராந் தத்வத் துவனு
மினக்குத்தா னன்றியெவர்க் குண்டு—நினைக்குங்காற்
கூறு மனிசேர் குணங்குடியா னேவிமலா
தேறுதவ யோகமுயல் சீர். 25

கட்டளைக் கலித்துறை.

சீரை விரும்பினர்க் கின்றமு லோபமெய் சேருநசை
போரை விரும்பினர்க் கின்று மனநிலை பூவையர்தம்
மோரை விரும்பினர்க் கின்றுங் குணங்குடியா னிடஞ்செய்
நாரை விரும்பினர்க் கின்று முலகர் நவிலவரே. 26

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

நவிலுமிள மையுமதனை யுறுமுடலு மதனெரிள
நயந்து காக்கக்
குவிபொருளும் புனற்குமிழி போலநிலை யல்லவெனுங்
குணத்தை யோர்ந்து
புவிபுகழு மெய்ஞ்ஞானக் குணங்குடியான் றிருவருளைப்
பொருந்தக் கொண்ணார்
தவலறுசீ சகண்டபரி பூரணமாஞ் சிற்பரன்றாள்
சார்த லுண்டே. 26

நேரிசை யாசிரியப்பா.

உண்டு முடித்து முறுபொரு ளீட்டியு
மெண்டகு வாழ்நா ளியாவையுங் கழித்தே
யணைதகுசெய் வினைமுய லசடருக் கறிவருங்
குணங்குடி யானருட் குரிசி லிசையிசை
நாவாய் நாவா யாகு
மேவாப் பவக்கட லொழிந்து கரைபெறற்கே. 28

நேரிசை வெண்பா.

பெறற்கரும்பே றென்றுளதோ பேருலகில் யார்க்குந்
தெறற்கருமா யைக்கழிவு செய்யும்—விறற்கிசைந்த
மன்னருளங் கொண்டு மதிக்குங் குணங்குடியான்
றன்னருளங் குற்றூர் தமக்கு. 29

கட்டளைக் கலித்துறை.

குவலைய மெங்கு மொருசாண் வயிற்றின் குழிநிறைப்பக்
கவலை யடைந்திரைக் கேயுழல் வீர்பயன் கண்டதுண்டோ
நுவலைய நீக்குங் குணங்குடி யானரு ளேக்கிவிழித்
திவலைய ருவன்பிற் சேரினுண் டாங்கடைதீர் சிறப்பே. 30

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சிறக்கும் புகழு மடுத்தோங்குஞ் செறிதீ வினைகளெலாம் விடுத்தும், பறக்கும் வித்தை யிருணீங்கும் பக்தி யுளத்தின் மேன்மேலும், பிறக்கு மதிதப் பெருவாழ்வு பெருகு முலகிற் பேதமிலே, துறக்கு முறவோன் குணங்குடியான் சொல்லுநெறியைத் துன்னினர்க்கே. 31

நேரிசை யாசிரியப்பா.

துன்னுறு திரைக்கடல் சூழ்பெரும் புவியிசை
பன்னுறு நிலைகெழு பலசம யங்களு

ளெச்சம யத்தவ ரெவ்வா றுகருதினு
மச்சம யத்தவர்க் கவ்வா றிருந்தருள்
பலவடி வங்களும் பலநா மங்களு
நலமுற மருவிய நாயக னாகியு
முருவும் பெயருமொன் றுறா துவே றாகிச்
செருவளர் சமயா தீதமுற் றொளிருஞ்
சிற்பரம் பொருளினைத் தெரிக்கு
நற்குணங் குடியா னெனுநா யகனே. 32

நேரிசை வெண்பா.

நாயகனார் நல்லரவை நாடெங் குலமகள்போற்
றூயகமாந் தற்பரனைத் தாங்காண—நேயமுள
கொண்டோர்க் கலது குணங்குடியான் கண்ணருட்பே
றுண்டோவிப் பூதலத்தினுள். 33

கட்டளைக் கலித்துறை.

உள்ளினுங் கண்மு னெழுதினுங் காதி னொருவர்சொலக்
கொள்ளினு நாவினிற் கூறினு மின்பங் கொளிக்குமுன்பேர்
கள்ளினு நெஞ்சை யழிக்கின்ற காமக் கரிசிலரைத
தள்ளினுஞ் சூழுங் குணங்குடி யாயெனுந் தற்பரவே. 34

கலி விருத்தம்.

பரம யோகியைப் பற்றொன் றிலான்றனைக்
கரவி லாத கருணைக் கடலினைக்
குரவ னாகுங் குணங்குடி யான்றனைப்
பரவி னார்க்குப் பவப்பிணி யில்லையே. 35

நிலமண்டில வாசிரியப்பா.

இல்லையோ வுளதோ விடையென மருண்டு
முல்லையி னரும்பே முறுவலென் றுரைத்துங்

கொங்கையைச் செம்பொனிற் குடமென வியந்துஞ்
செங்கையைக் காந்தட் செழுமல ரென்றும்
விழியைக் கூர்நெடு வேற்படை யென்று
மொழியை நறுஞ்சுவை முதிரமிழ் தென்று
மிதழினைக் கொவ்வையி னெழிற்கனி யென்று
நுதலினைப் பிள்ளைப் பிறையென நுவன்றும்
வனிதையர் மயக்கிடை மயங்கிவீழ்ந் தழுதுந்
துனியுறு வோர்மனச் சோர்வினை யொழித்திட
மறைபுகன் ஞான வளமினி தருளுங்
குறைவரு நற்குணங் குடிகொண் டிருத்தலா
லுன்பெயர்க் காரணத் துறுபொரு ளுணர்ந்தனங்
கொன்பெறு புகழ்வளர் குணங்குடி யானே. 36

நேரிசை வெண்பா.

யானென தென்னுஞ் செருக்கற் றியாவுமொரு
தானெனவே கொள்ளுந் தகையாகு—நானிலத்திற்
கூருங் கருணைக் குணங்குடியான் சந்நிதியி
னேருங் கருத்தோர் நிலை. 37

கட்டளைக் கலித்துறை.

நிலையுறு சத்துச்சித் தாநந்த மாக நிறைபொருளைக்
கலையுறு மாட்சியிற் றுனுற்றி யாரையுங் காட்டவல்லோன்
புலையுறு மியாக்கை வருந்துற நோக்கும் புனிதர்புகழ்
தலையுறு சீர்கொள் குணங்குடி யானெனுஞ் சற்குணனே. 38

கலி விருத்தம்.

குணங்குடி யானருள் கூடி னலத்தி
னிணங்கிய சிந்தைய ரேத மகற்றி

யணங்கறு மின்பி னமர்ந்துல கத்தோர்
வணங்கி வழுத்துறு மாண்பொடு வாழ்வார். 39

நிலமண்டில வாசிரியப்பா.

வார்தருங் கூந்தலார் வரிவிழிக் கணையு
மோர்தரு மதனவே ளெறிமலர்க் கணையு
மூறு செயப்பெறா தொளிர்திரு மேனியோய்
கூறுபல் புகழ்வளர் குணங்குடி யானே
இயலுறு மன்புகொண் டெய்தினோ ரியார்க்கும்
யாவரு மதிநிலை யருள்செய நின்று
மண்ணுல கந்தனில் வழங்குகின் றனைநீ
விண்ணுல கந்தனில் விளங்குபொன் னெனவே. 40

முற்றிற்று.



இஃரு

குணங்குடி மஸ்தான் சாகிபு அவர்கள் மீது
மேற்படியார் மாணாக்கராகிய சிவயோகி

## ஐயாசுவாமி முதலியாரவர்கள் பாடிய

# தோத்திரப்பா.



எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தண்ணுத கத்தின் குணமழ லவிக்குந்
தன்மையா யிருந்துமோர் கடத்தி
னண்ணிய போத வழலினாற் கொதித்து
நலிவுறு நியாயம்போ லுடலில்
பண்ணிய வான்மா பொருந்தி யிந்திரியத்தாற்
பன்மையாய விளங்குவ தல்லா
லெண்ணிய பந்த மாதிய வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே.

மதிதன துருவிற் களங்கமில் லாமல்
வான்மிசை வயங்குறப் புவியின்
விதமுறு சாயை யாற்களங் குளதாய்
விளங்குறுந் தகைமைபோ லான்மா
சதிசெயு மனதால் விகற்பசங் கற்பத்
தன்மைகொண் டியங்குவ தல்லா
லிதமகி தத்துட் சார்வன வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே.

மன்னிய படிக நிட்களங் கமதாய்
வயங்கினுஞ் சகசமாய்த் தோன்றுந்
தன்னிழற் சாயை யாற்கறுப் புளதாயத்
தயங்குறுந் தன்மைபோ லான்மா

துன்னுமா ணவத்தி னலமி மாணச்
சுழலினின் றியங்குவ தல்லா
லின்னல்செய் துவித பேதம துளவோ
வியம்பிடாய குணங்குடி வாழ்வே. 3

மாசிலா தொளிரும் பெருவெளி யாய
வானிடை நீனிற மதுதா
னேசுறு மித்தியா ரோபமாய்த் தோன்றி
யிலகுறு முறைமைபோ லாணமா
வாசுறு மவித்தியா மலசகி தத்தா
லவத்தையிற் றியங்குவ தல்லா
லீசனுய்ச சீவ னுயிரண் டுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 4

வானிடை யொளியைப் பரப்புமோ பரிதி
மன்னிய சலததினுட் டோன்றி
லானதி னுருவ மச்சல மசையி
னசைவுறுஞ் செய்கைபோ லான்மா
கானலை நிகர்தத புனலிடை யந்தக்
கரணமோ டிலங்குவ தல்லா
லீனமாந் தனுவா தியபல வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 5

பகாரும் புனறன் னிறம்வெளுப் புடைய
பான்மையோ டிருக்கினும் பார்க்கிற்
சகசமாய்க் கரிய நிறமுற விளங்கு
தன்மைபோ னித்திய வான்மா
தகையுறு மாயா மயக்கொடு தியங்கித்
தனைமறந் துறங்குவ தல்லா

விகழுறு மமதை யகந்தைக ளுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 6

அழிவுறும் பிருதி வேகமா யிருந்து
மசலமே முதலிய பலநல்
லெழிலுறு முருக்க டோன்றிநின் றிலங்கு
மியற்கைபோ னித்திய வான்மா
வொழிவுறு நாளு விதமுறு நாம
ரூபமோ டுறைகுவ தல்லா
விழிவுறுஞ் சிருட்டி யாதிய வுளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 7

வெள்ளைவா கனத்தின் விளங்குவெண் மதிதன்
மேற்பரந் தோடுதன் முகிலென்
றுள்ளுறத் தெளியா தொளிர்மதி யோடு
தெனச் சொலு முவமைபோ லான்மா
கள்ளவஞ் ஞான மாதிய வவத்தை
களுக்குள்ளாய்க் கலங்குவ தல்லா
லெள்ளுறுங் கொடிய சஞ்சல முளவோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 8

எஙகணு மாகா யம்விபு வாகி
யிருந்துமண் ணுதிய பலவின்
சங்கமாய் மறைபட் டதினதி னுருவாய்த்
தடித்தொளிர் தன்மைபோ லான்மா
பொங்கிய தாதான் மியத்திரை யதனுட்
பொருந்திநின் றிலங்குவ தல்லா
லிங்குள தங்கே யிலையென லாமோ
வியம்பிடாய் குணங்குடி வாழ்வே. 9

ஊடரில கியசெந் தீப்புகை யின்றிச்
சொலுமபிர காசமோ டிருந்து
மடருறும விறகாற் புகையுள தாகி
யவிர்தரும் பான்மையோ லான்மா
மடமையஞ் ஞான விருததிபே தத்தான்
மாசடைந் திலஙகுவ தல்லா
லிடர்பகை யுறவா தியதுய ருளவோ
வியம்பிடாய குணஙகுடி வாழ்வே. 10

விந்தைசெய் மாயை யெனுஙகரு வியினு
னிகழ்தரும் ப்ரபஞ்சபேத காதி
நந்தூறு நானு விதமுறு ரூப
நண்ணிய நாமமா திகளை
மூந்துறக் கான னீரெனச சிருட்டி
முதலிய தொழிற்பரப் பியது
னிந்திர சால மல்லவோ வுளவோ
வியம்பிடாய குணங்குடி வாழ்வே. 11



என்னகத் திருக்கு மெனக்குனீ யுனக்கு
னிருந்ததும் யானெனை மறந்தே
யென்னகத் திருக்கு மெனையன்றித் தேடி
யெங்கெங்கு மோடியா னிளைத்தே
னென்னகத் திருக்கு மெனையன்றி யாவு
மிலையிலை யிலையென வறிந்தே
னென்னகத் திருந்து மெனக்கொளித் ததுவென்
னியம்பிடாய் குணங்குடி வாழ்வே. I



மாசிலா மணியே முனிவர்க ளிறையே
வள்ளலாய் வந்தகண் மணியே
தேசிக னாகத் திரண்டுரு வெடுத்த
சித்தனே யொளிர் சிந்தா மணியே
ஈசனே தேசோ மயந்தந்தாட் கொண்ட
வென்னுயிர்க் குயிர்தாந் துணையே
போசனே வாழி குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 1

இகபர மிரண்டி னுயிரினுக் குயிரா
யியங்கிய வாசியா மலரை
முகந்தக மகிழ்ந்து நாதகீ தங்கண்
முழங்கிய பேரின்ப வீட்டிற்
சுகமுறச் சும்மா விருக்கவா வெனவென்
றுயர்பவக் கடல்கடப் பித்தாய்
புகழ்பிர காசக் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 2

பெருகுமட் டாங்க யோகமெய்ஞ் ஞானப்
பேரின்பக் கடலமு தூட்டிக்
குருமணி யணிந்த மார்பினி லணைத்துக
கொண்டபின் முத்திதந் துவப்பாய்
மருவியென் றனக்கு ளிருந்தெனக் களித்த
வாதியாம் வந்திரு கலையின்
புரிமயச் சுடராங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 3

மூலத்து ளெழுந்த நாடிமூன் றுடனே
முயங்கிய நாதவா யுவினுட்

சீலமா முக்கண் குவித்தகக் கண்ணைத்
திறந்தொளிர் வாசியை நோக்கி
மேலுமே னடனச சிலம்பொலி காண
விளக்கியெற் கின்னமு தளித்தாய்
போலுறு தடருங குணஙகுடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 4

கதிரில கியதூண் டாமணி விளக்கின்
கதிர்தரு மண்டப மதனுட்
டெதியுற விருத்தி யின்னமு தளித்துத்
துன்னுமேழ் பலத்தொடர் பகற்றித்
ததும்புறு தென்னைத் தயவுதந் தாண்டாய்
சசசிதா நந்ததற் பரமாம்
பொதுமையா மின்பக் குணஙகுடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 5

குறிகுணு நீக வகண்டிதா காரங்
கொண்டொளங கனிந்தமு தொழுகிச
செறிமணி நாத விளககினுல் விளக்குந
திகழ்சுழு முனையெனு மனைநின்
னெறிநிலை நிறுத்தி யென்னையாட் கொண்டாய்
நித்தனே நின்மலா னந்தப்
பொறிபொறித் துயருங குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 6

நண்ணிய சுவாச மெனும்பொரு ளதனை
நாளுக்கு நாட்குறைந் திட வென்
றெண்ணியே கொள்ளைக் களவுசெய் கள்வ
ரென்னுநால் வரையுமே பிடித்துத்

திண்ணூறும் வாசி நூல்விலங் களித்துச்
சிக்கெனச் சிறையினி லடைத்தாய்
புண்ணியனென்னுங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 7

உடலுயிர்க் குயிரா யுறைந்ததே பொருளென்
றுரையுவ மையுமிலா திறையைத்
திடமுறக் கரத லாமல கம்போற்
றெளிவறத் தெளிந்தெனுட் காட்டிச்
சடமகித் தியம்பொய் பொயயெனத் தேறுந்
தரமளித் தாயிரு வினையைப்
பொடிபொடி யாக்குங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 8

சுத்தவட் டாங்க யோகமே காட்டிச
சூடரினைத் துலங்கிடக் கூட்டிச
சித்தசாஞ் சல்ய மின்றியுண் ணூட்டித்
திகழ்தரத் தெளித்தரு ளூட்டி
வத்துதா னென்னு நிலையினிற் பூட்டி
வருமம தைகளற வோட்டும்
புத்திதந் தாண்டாய் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 9

எந்தனு லறியப் படும்பொரு ளியாவு
மெனக்கநித் தியமென விசைத்து
மந்திர வைம்பத் தோரெழுத் ததனின்
மருவியா னினைவையு மறக்கத்
தந்திர மாக வோர்மொழி மொழிந்தாய்
தற்பரா நந்தமெய் யோகம்

புந்தியி னொளிருங் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 10

பிறிவிலா முகந்தர்ப் பணத்திரு கையினைப்
பெற்றுமோர் முகமெனு மதுபோற்
குறியிலாப் பரமே சிவனாய் விளங்கு
கொள்கைமீ திரண்டல வெனவென்
னறிவினை விளக்கி யகண்டமாய் விளங்கு
மநநெறி நெறியென நிறுத்தாய்
பொறுமைசே ரின்பக் குணங்குடி வாழும்
பூரண மௌனதே சிகனே. 11

சணங்குடி நேய தந்தைதன் தாயார்
தன்மக்க ளொடுமனை வியினாற்
பணங்கொடு தேடும் பவக்கட னீந்திப்
பரவெளி யெனுமுப்பாழ் கடந்து
பிணங்கிடா திணங்கும் பின்னொடு முன்னிற்
பேரின்ப வீட்டினைக் காட்டுங்
குணங்குடி வாழு மௌனதே சிகவெங்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். 13



# கீர்த்தனம்.

இராகம்-சௌராஷ்டிரம்-ஆதிதாளம்.

பல்லவி.

அவனன்றி யோரணுவு மசையாதென்ப
தறியாயோ நெஞ்சமே.

அநுபல்லவி.

தவனின் ருெளிருமறந் தாங்கி வளருமோன
தற்பர நித்யசிற் போதன்-மகி
ழற்புத மானவி நோதன்-என்று
செப்புங் குணங்குடி நாதன். (அவனன்றி)

சரணங்கள்.

1 ஈயெறும் பாதி தொடாமலெந் நேரமு
மேதுக்கிவ் வாக்கையை நாடி-யதில்
நேய மதாகவே நீயபி மானித்து
நின்றனை யேநிதந் தேடி-சுடு
தீயஞ்சும் வெஞ்சொல் லெனும்பொய் யுரைத்துத்
தியக்குறும் புன்னிதிக் கோடி-சற்று
தூயதொன் றின்றிப் புவியிலை நின்றமு
வாசையற் றேய்ந்துமெய் வாடி-யுழல்
மாய மொழிந்திடக் கூடி-யரு
ளீயுங் குணங்குடி நாதன். (அவனன்றி)

2 நன்மைவந் துற்றாலுந் தின்மைவந் துற்றாலு
நானென்று நின்றுகொள் ளாமல்-நாளும்
புன்மை நிறைந்திடும் வாரியில் மூழ்கிப்
புதைந்தனை யேஞெதள் ளாமல்-புகல்

இம்மை மறுமை யிரண்டற வொன்றுள
தென்றதை யின்றேவிள் ளாமல்-இகழ்
மன்னுந தொழிற்செய நேர்ந்தனையோ கெடு
வாழ்விதென் றெண்ணியெள் ளாமல்-நின்ற
தன்னைக் கடிந்துஇள் ளாமல்-நின்ற
தென்னே குணங்குடி நாதன். (அவனன்றி)

3 பொறியும் புலனைந்து பூதமும் பேதமும்
புகல்கர ணங்கடந் தோனே-மலஞ்
செறியுஞ்சஞ் சலமென்னும் பொருளும் வினையிரண்டுஞ்
செய்யுக தொழிலுமிடந் தோனே-நல்ல
நெறியும் பலசமயக் குறியு நாதாந்தத் துண்
ணினையு நனவும்படர்ந் தோனே-யோகத்
தறியுங் குறியுநதுண் ணிறையும் பரவெளியென்
றடருங் கடலில்நடந் தோனே-விட்டுப்
பிறியாத வருள்தொடர்ந் தோனே-எனக்
கறிவான குணங்குடி நாதன். (அவனன்றி)

முற்றிற்று.



மஸ்தான்சாகிபு அவர்கள்மீது

# வேங்கடராயப்பிள்ளைக்கவிராயரவர்கள்பாடிய

# தோத்திரப்பா.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

எல்லா மறிந்து மனமிலையோ
விரக்க மிலையோ வுன்னெஞ்சங்
கல்லா வுரைக்க வாயிலையோ
காண வருத்தங் கண்ணிலையோ
பொல்லா ரெனினு மடிமையென்று
புகுந்த வடியார் தமைக்காக்க
வல்லா யலவோ குணஙகுடியாய்
வாழு மமுதே மகதேவே. 1

மாவே தனையி லடியார்கள்
வருந்தப் பார்த்து மனமிரஙகாக்
கோவே நினக்கு மெவர்கள் குணங
குடியா னெனவும் பெயர்கொடுத்தார்
பூவே மணமே யுன்றுமம்
பொருந்தும் வகைநீபுரியாயே
னீவே றெனவு முலகமெலா
நிந்தை கூறு மிதுநிசமே. 2

வேத னிலையோ வரியிலையோ
வேணி யரனு மிலையோ வோர்
நாத னிலையோ பலகோடி
நாமம் படைத்த தேவர்களும்
போத விலையோ முறையிடிற்கேட்
போரு மிலையோ பொருளிலையோ

நீதமிலையோ குணங் குடியாய்
நீயு மிலையோ புகலாயோ. 3

தருண மறிந்துங் காவாய்நீ
தரணி மிசைநின் னடியார்க்குக்
கருணை புரியுங் குணங்குடியாங்
கடவு ளென்ப தழகேயோ
பெருகு மிலவு காத்தகிளி
பெறும்பே றலதென் பயன்கொளுவா
ரருமை யொடுநின் பதம்பரவி
யழுது கனியுந் தொண்டர்களே. 4

ஏச மனமும் வரவிலையே
யீயார் புகழ்பே சாதுன்புகழ்
பேச மனமும் வரவிலையே
பெருகு பசிக்கு மோய்விலையே
வாச மிலகு குணங்குடியாய்
வருத்து மிவையெல் லாமறக்கப்
பாச நமனும் வரவிலையே
பாவி யடியேன் படுவதென்னே. 5

கல்லா ருறவும் பெரும்பசியுங்
கழிந்து போகும் வகையுரைத்து
நல்லா ருறவு நின்பதமு
நாயே னடையும் படிபுரிவா
யெல்லா ராலுமறிய வொண்ணு
விறைவா விந்த வேழையொடு
மல்லா டுவதென் குணங்குடியாய்
வாழு மமுதே மகதேவே. 6

அடியே னிங்ஙா னுரைத்தவண்ண
மாக விதையு மெண்ணியிருந்
திடிலார் கதிசொல் குணங்குடியா
யெல்லாங் கடவு ளறியாதோ
கொடியா ரிடத்திற் சென்றுமணங்
கூடிக் கைகாலலைந் தலைந்து
மடியாப் பிணம்போன் மடிவதற்கோ
வகுத்தா னென்னைநான் முகத்தோனே. 7

செய்யும் வகையுந் தெரியவில்லை
தேவர் மனமுந் தெரியவில்லை
வையு மடையர் தமையடுத்து
வாழ்த்தித் துதித்துப் பற்காட்டிக்
கையு மேற்க மனமுமில்லை
கருத்து நிலையா நிற்கவில்லை
பெயயுங் கருணைக் குணங்குடியாய்
பேதை யேற்கோர் வழியருளே. 4

சொந்த மில்லையோ பன்னாளுந்
தொழுத தில்லையோ வடிமையெனும்
பந்த மில்லையோ பிள்ளைகளைப்
படைத்த திலையோ வருந்துமவர்
சிந்தை யறியுஞ் செயலில்லையோ
தேவா வாழுங் குணங்குடியாய்
முந்த வினைக ளெதகெக்க
முதல்வா வேண்டுந் தருணமிதே. 9

பெரியோ ரெவரும் புகழ்ந்தேத்தும்
பெரிய வுனையிப் பேதையனுந்

தெரியா வறிஞனே தேதோ
   திகைத்துக் கவியாற் சொன்னவெலாஞ்
சரியா யுரைக்குந் துதி யெனவே
   தங்கு முனது மனங்கொண்டு
பரிவா யருளக குணங்குடியாய்
   பல்கா லுன்னைப் பணிவேனே. 10

நீயே யீன்ற தாய்தந்தை
   நீயே குருவி னொடுதெய்வ
நீயே யடியார்க குதவுபொரு
   ணீயே சமயமறியும் வஸ்து
நீயே ஞான நெறிவிளக்க
   நீயே விளங்குங் குணக்குன்ற
நீயே யெங்குங் குணங்குடியாய்
   நிறைந்திவ் வடியைக் காப்பதுவே. 11

முற்றிற்று.



மஸ்தான் சாஹிபு அவர்கள்மீது

கோவளம் அருணாசல முதலியாரவர்கள் குமாரர்

# சபாபதி முதலியாரவர்கள் பாடிய பஞ்சரத்னம்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஏர்பூத்த நயமுகமு மருள்பூத்த விருவிழியு
மெழிற்செவ் வாயும்
தார்பூத்த மணிமார்பு மடியாரைப் பரிந்தணைத்துத்
தாங்குங் கையு
நீர்பூத்த மலர்த்தாளுங் கண்டடியேன் றொழுவதென்றோ
நிகழ்த்தல் வேண்டுஞ்
சீர்பூத்த சென்னையில்வாழ் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 1

வையமதி லெனக்கெனவந் திடும்பாழாங் கொடிய விருண்
மாயை நீங்கத்
துய்யநின தருணோக்கே விளக்கெனவந் தடுத்தினியுன்
றுணைத்தா ணல்காய்
மெய்யடியா ருளத்தின்முளைத் திடுகரும்பே மதுரமெல்லாம்
விளைந்த தேனே
செய்யமணிச செழுஞ்சுடரே குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 2

பாவநெறிக் குடன்படுத்து மடமாதர் மயக்கில்விழும்
பதக னேனை
வாவெனநின் றிருநோக்கா லழைத்திடுத லெந்நாளோ
வழுத்தல் வேண்டு
மாவலுறும் பழவடியா ருன்னுகின்ற பொருளனைத்து
மளிக்க நாளுந்

தேவதரு வாயவிளங்குங் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 3

பருதிதேர்ப் பாகனைவந் திருளனுகு மோகினது
பதுமத் தாளைக்
கருதுமடி யவர்கள்குழாத் திருக்குமெனை யஞ்ஞானங்
கலப்ப துண்டோ
சுருதிகளு முணர்வரிய பரம்பொருளே யேழுவகைத்
தோற்றத் திற்குந்
திருதியாய நின்றளிக்குங் குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 4

தொலவினையாந திரையெறியும் பவக்கடலிற் சுழலுகின்ற
துரும்ப னேற்குக்
கல்வியினைத் தநதரிய ஞானவழி காட்டலுன்றன்
கடமை யையா
பல்வளஞ்சேர் சென்னைநக ருறைவாழ்வே பேரின்பப்
பரமா நந்தச்
செல்வமே தவப்பேறே குணங்குடியே மெய்ஞ்ஞான
தேவ தேவே. 5

முற்றிற்று.



மஸ்தான் சாகிபு அவர்கள் மீது

காயற்பட்டணம்.

# செய்கப்துல் காதிர் நயினார் லெப்பை

ஆலிம்புலவ ரவர்கள் பாடிய

# ஒருபாவொருபஃது.

பதினான்குசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அருவுருவ முருவுருவ மிருவுருவ முடனமையு
மடலுலவை யெரிய முலுமேல்
அறைபுனலும் விரிமணனி மறைவெளியு மெனவிவைகள்
அணுவினணு வினும ளவிலா
மருவுருவ மலைகடலு மெறும்புடவி படர்ககனு
மதியினொடு கதிர்ப ரிதியும
மணியினிதி யுலகுமெரி நரகுமவண் முயலமரர்
வகையுமிவை நனிபல னுறாஉம்
ஒருவுருவ மனுவுமெதிர் பகையுருவ கணமுமமை
ஒருவனருள் பெருகு நபிகள்
உரையொழுகி வருமுதிய வறிஞரினு முயர்பதவி
யொலிகளென நிலைமை புரிவீர்
வெருவுருவ முளமுடைய நமதடியர் துயரகல
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னோதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 1

கானாத நீர்கான லானாகு மாறாய
காலோக மாமா யையும்
காயாது பூவாது தானேக மாயோடு
காலேற வாவா னதும்

நாணாது கோணாது நானேய லாதேதெ
ணாவாணு வாகா ரமும்
நாடாதபாலோடி யூடாடு நீவேக
நாயோடு பேயா னதும்
தோணாது பாழாக மேலேகு மான்மாசு
ரூபாகி சாலோ கமெய்
சூழாத சாமீப சாரூப மாய்வாழி
தூய்தான மேல்மாழ் குவீர்
வீணா வீணாள ராகாம னோராக
விழிகருணை யானைக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
விநோதா புரந்த ருள்கவே. 2
துதிமொழிக ளோயாது மனவுறுதி சாயாது
தொழுகைநிலை மாயா துசீர்
தொடர்நியம மாடாது விரதமுறை கோடாது
சுருதிநயம் வாடா துமேல்
குதிகொள் வினை காணாது கசடுபல பூணாது
கொடுமைவலி வேணா துவீண்
குலவுநடை பாவாது பலபொருளின் மேவாது
கொலைகளவு தாவா துநேர்
அதிககுண மாயோக தவமுயலு மேலோர்க
ளருமையொடு மாறா துநம்
அடியிணைக ளேசூடி யினியபல பேறான
தணிபவர்க ளேகோ டியே
விதிமறையி னுலாளு மொருவனரு டாளனை
விழிகருணை யானைக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
விநோதா புரந்த ருள்கவே. 3

மனுநீதி யுணராத பெருமூடர் மூதியோர்கள்
மரியாதை தெரியா தவர்
மதிவேறு மொழிவேறு பொருள்வேறு படுவார்கள்
மலிகோர நிறைநா வினர்
சினமூறு மனமாய மறியார்கள் குறியாத
சிறியோர்கள் வெறியாள் பவர்
திருமாது பகையாளர் மலர்மாது வசையாளர்
திறமாது மறமாள் பவர்
துனிசேரு நடையாளர் பெரியோர்க ளடையாளர்
துயர்வாழு மிடையா ளர்கள்
தொழுதாலு மகலாத கெடுபாவ முடையார்கள்
சுகமேது பெறுவார்க ளோ
வினவாத வினையாவு மொருபோது மணுகாமல்
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னுதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 4
பேராத வன்புடைய தாய்தந்தை தந்துணைவர்
பேராசை தந்த மனையார்
பேறான மைந்தர்புடை சூழ்சால் பெருங்கிளைஞர்
பேரா நிறைந்த வுறவார்
ஆரா ரிருந்திடினு மாராரு வந்திடினும்
ஆதார மொன்று மிலையால்
ஆகாத வன்செயலி னாலே யெதிர்ந்தவினை
யாடாத கன்றொ ழியமேற்
சாராது வெம்பவ மெலாமோட வெங்கணிலை
தாழாதி கம்ப ரமூநீர்
தாமாக நின்றருளி னுள்வீர்க ளென்றுமது
சார்பா யடைந்த வெளியேம்

வேராதி கொண்டமணை மார்பா விரிந்தமலர்
விழிகருணை யானைக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 5
சுற்றிப் பிடித்தகொடி யொத்துப் பெருத்தபல
சுற்றத்தார் மற்று ளர்களும்
துக்கச் சுகித்துடை யுடுக்கத் தரிக்கநகை
சுட்டுத் தடுத்தி டுதலால்
பற்றித் தொடத்தொடரு னெய்த்துப் பசப்புமெழில்
பச்சைக் கிளிக்கு தலையார்
பட்சத் திடத்துயிர்த் திகைப்பச் செறுத்தறிவு
பட்டுப் புறப்ப டுதலால்
எற்றித் தவத்தினைமு றித்துக் கருத்தினை
யெடுத்துக் குலப்ப கையையமேல்
எட்டிப் பிடிக்கமதி யற்றுப் பவத்தொழி
லிழைத்துப் பிழைத்து ழல்வரே
வெற்றிக் குணக்குரிசி லெத்திக்கு மெய்ப்பவிறை
விழிகருணை யானைக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 6
முன்பொன்றி நின்றுறுதி யின்சிந்தை விந்தையின்
மொழிந்தண்டு கின்ற முதியோர்
மூங்கும் பெருந்துறையி ருந்தங் கெழும்புகழ்
முகந்திய கிதம்பொ ழியவே
அன்பொன்று கின்றபல னன்றன் றுவந்துமகிழ்
வங்கம் பெருந்த கையுளார்
ஆந்தந்த மன்பதைக ளும்பந்த மூங்குளிர்
அகங்கொண்டு வந்து தொழவே

என்பொன்று மின்பனிலை கண்கண் டிழிந்தகுண
    மெங்குங் கடிந்த ரசர்கள்
எம்பந்த மெம்பொருள்கள் றுந்தஞ்ச மென்றடியி
    னென்றுஞ் சரண்பு குதவே
மின்பொன் றுலங்குகுண நன்கின் றருங்குரிசில்
    விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
    வினோதா புரந்த ருள்கவே. 7
பாற்றேட்டைத் தேத்திரளை மாச்சோற்றைத் தீக்கனிகள்
    பாற்சோற்றைத் தேட்ட மதுபோல்
பார்த்தூட்டற் கேயப்பவறி வாற்றேககித தேற்றநெறி
    பாற்சேர்த்துக் காததிடு தலால
காற்றோட்டக் கேதிரமெய் மேறபோக்குக் கீழ்க்கழிவு
    காற்பாச்சற் பூட்டி நவிற்
காப்பாக்கக் கோட்டைவெளி கூத்தாட்டுக் கோட்டைநனி
    காப்பாற்றிக் காட்டு தலினால்
தோற்றாட்சிக் காக்கியது பார்பபோர்க்குப் பார்க்கரிய
    தோப்பாய்க்கத் தாதத கையதாயத்
தூர்த்தாக்கிற் பூந்தனி காய்த்தாக்கத் தாற்குலவு
    சூழ்ப்பேட்டைப் போக்கி டுதலால்
வேற்றாட்டத் தோற்றாவு சீத்தோட்டிப் போற்றிசெய
    விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
    வினோதா புரந்த ருள்கவே. 8
வையமொரு கையினாற மெய்யியல்கள் பொய்யினாற
    மையல்வலை பெய்யு மடவார்
வள்ளியிடை விள்ளுமுரை வெள்ளைவிழி துள்ளவரு
    வள்ளமுறு கள்ளை விடலால்

பையமதி தொய்யவறி வுய்யவுணர் வையவெறி
பையிலிடு கையத னினால்
பள்ளமிகு வெள்ளமிசை தள்ளவிழு முள்ளறிகொள்
பள்ளையர் தமுள்ள நிலையாத்
துய்யமகள் செய்யமகள் மெய்யின்மகள் கையின்மகள்
தொய்யிலணி வையமகளும்
துள்ளிமல ரள்ளியெதிர் கொள்ளுமது பள்ளியிடை
துள்ளலிசை தெள்ளியுறலால்
வெய்யவினை நையவருள் செய்யுமென வையநிறை
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 9

கண்ணுமதி யுண்ணினைவி னண்ணுமன வெண்ணமது
கண்ணுடயி லொண்ணு பொழுதும்
கன்னன்மொழி யன்னநடை மின்னினிடை யொன்னனையர்
கன்னிநல மன்னு பொழுதும்
ஒண்ணிதிக ளுணணுதொழில் பண்ணுபொழு தன்னமுத
னுண்ணலொடு தின்னு பொழுதும்
உம்மையல திம்மையுள ஓதம்முலைவும் வெம்மையற
வும்மருவல் பழமு பொழுதும்
தண்மையொடு மெண்மையொடு பெண்மையொடு மொண்மைய
தன்மையொடு திண்மை கொளலால் [ழி
தன்மகிமை யின்மைபெற வன்மையற நின்மையொடு
தன்மைபுரி சொன்மை யருள்வீர்
விண்ணுலகு மண்ணுலகு மெண்ணவரு மண்ணல்நிறை
விழிகருணை யானோக் கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
வினோதா புரந்த ருள்கவே. 10

வண்டனைச் சண்டனைக் கொடியனைக் கடியனை
    வாதாடு மொழிகேடனை
வஞ்சனைப் புஞ்சனைக் கோபியைப் பாபியை
    மாபாதகத்தொழிலனை
மிண்டனைக் கண்டனைக் கதியனைக் கொதியனை
    வீணான வீணாளனை
வெஞ்சனைக் கொஞ்சனைக் கொலையனைப் புலையனை
    வேகா வருங்கண்ணனை
அண்டனைக் கண்டனைத் தண்டனைத் தொண்டனை
    யாகாத புன்செயலனை
ஆதியினிடத்திரந் தன்பினொடு மென்பிழை
    யகன்றொழிய வருள்புரிகுவீர்
விண்டலமு மண்டலமு மெண்டிசையு மண்டுபுகழ்
    விழிகருணை யானோக்கியே
வேதா குணங்குடியி னாதா வருந்தவ
    வினோதா புரந்தருள்கவே. 11



இதுவுமப் புலவர்பாடிய

# தோத்திரப்பா.



ஆதியொரு வன்கருணை யக்கட லிடைப்படிந்
தாவியுட லின்செ யலெலா
மமையுமுறை போனிறீஇ யெழுவகைத் தோற்றத்தி
னுடமெழு பண்பி னியல்பே
நீதியொடு மொருமைப் படக்கண்டு முருவங்க
ணிலைபெறு தலைமா றிடா
நீடொளிவி னுதயநில னென்றுகொண் டும்பொருளை
நிசசயித் தொன்று படவே
சோதியுள நினைவி னுலம்பூத வியல்பையுஞ்
சோரவிட் டும்பெறு குணந்
தோன்றலான் முழுமையு மாய்நதுசுய வஸ்துவாய்த்
தூய்மைபெற நின்ற வொலியே
போதிய குணஙகுடிக் குரிமைபூண் டியர்சென்னை
புரமீ தமர்ந்து கொணடீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 1

குவியுமுய ரறிவி னுற்பலவாக நினைவினைக்
கும்பித்து வாயு வுடனே
குறிபெற நிறுத்தியுள் ளெழுநாத விசையினிற்
கூர்ந்துடலி னியல்பொ ழித்துச்
செவியொலி யொதுக்கிவிழி தெரியா தடக்கிவரு
தேகபரி சந்த கைத்துத்
தேற்றுறு வாசனைக ளோர்சுவையு மேற்றுறு
ஏகதையா நந்த முறவே

கவினிரவு பகலற்று நிற்குநிலை நின்றுயிர்
      கலந்திடத் தபசு செய்நீர்
காளையம் பருவத்தி னுலகந் துறந்தவெகு
      காரணம் விளைத்த வொலியே
புவிபுகழு நற்குணங் குடிகொண்ட பின்சென்னை
      புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
      புகழுமஸ் தான்சா கிபே. 2
கருதரிய வஸ்துவாய் நின்றவொரு வன்கருணை
      கனிதர வெழுந்த கடலிற்
கதிர்பல விரித்தமுத் தாகிவரு நபிநாதர்
      கதிபெற வளித்த நெறியிற்
பெரிதுதவு முறையெலாங் கண்டுகண் டுலகத்னி
      பிரசித்தி நிற்க வகையாய்ப்
பிரிவிலா தறிவொடு புகட்டுவித் திருமையது
      பேற்றினை யெடுத்த ருள்செயு
மரியமன நிறையன்பு மாதரவு மோர்மையுமெய்
      யணியுமுறு தித்த குதியு
மலரவர்க டஞ்சிந்தை தன்னிலே தோற்றவெளி
      யாகுநடை கொண்ட முகிலே
பொருவரிய நற்குணங் குடிகொண் டருஞ்சென்னை
      புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
      புகழுமஸ் தான்சா கிபே. 3
வன்மைதரு மொழிவிட்டு மனவாஞ்சை மதிவிட்டும்
      வார்மையொடு சீர்மை விட்டு
மருவுசுவை யிணைவிட்டு நல்லுடைக டொடர்விட்டு
      மணமோங்கு பொருள்கள் விட்டும்

பன்மைதரு தொழில்விட்டு நன்மைகொளு முறைவிட்டும்
படரிருமை பாசம் விட்டும்
பற்றுடைய வினைவிட்டும் வித்தைகொளு முறைவிட்டும்
பண்ணிசையி னினையும் விட்டு
மின்மையடு குணம்விட்டு மன்னெறிகண் மதம்விட்டு
மிருமைதரு வகைகள் விட்டு
மேற்குமுட வினைவிட்டு நோக்குவன பலவிட்டு
மேகநிலை விட்டி டாமற்
புன்மையடர் நற்குணங் குடிவிட்டி டாசசென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 4

எங்கினு மிருந்துவரு வார்மனமு மேததுத
லெடுத்துவரு வார்க டொழிலு
மிகலுநி மதித்துவரு வார்குணமு நன்மையி
னியைந்துவரு வார்க ணெறியு
மங்கமணி கோலமிக வேய்ந்துவரு வார்நிலையு
மண்டிவரு வார்க ணடையு
மறிவின்முறை கொண்டுவரு வார்திறமு மற்றுலக
மகலவரு வார்கள் விதமு
மிங்கித முடன்றெரிந் தந்தந்த நிலைகளுக்
கிசைகின்ற துறைக ணோக்கி
யின்பத்தி ஞர்வமொடு கண்டித்து மேலேறி
யியல்போடு நிற்கு மறிவே
புங்கநிலை பொங்குநற் குடிகுணங் கொடுசென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 5

சொல்லினு லறிவுமுது பொருளினு னயமுமதி
தொடர்பினு லுயர்ஞா னமுந்
துதியினு லொருமையெழு நினைவினு லிறுதியுந்
துறவினு னனிவாழ்க் கையு
மல்லினற் றனிமையும் பகலினற் கவலலும்
மருளினு லிகப ரமுமே
யன்பினுற் பேறுமடு துன்பினுற் சுகமுமற்
ருவியால் யோக நிலையு
மல்லினுற் கொண்டோங்கு மாதவர்க் கொருமா
மணிச்சுட ரெனத் திகழுவே
மகிமையொடு செய்தவப் புஞ்சமே யஞ்சுமன
மருளற்ற தெளிவ ருளுவீர்
புல்லினுற் பெருகுசுக நற்குணங் குடிசென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே.
கோவைதரு சொற்ருெடரி ஞற்கவிதை யுஞ்சீர்மை
கொண்டிடமு ஞஜாத் துநாட்
கொளுவார மோதிடுது வாயுமிறை யோனருள்
குலாவிதிக் கும்ப லபலத்
தேவுக ளொடெங்கிவந் தடிதொழச் செயுமறைத்
திருவாக்கி யத்தி சுமுமே
சேருமடி யார்க்காக வற்பினுற் செய்துமித்
தேசத்த ருந்த மிழினுற்
பாவகை யனந்தமு மியற்றிவளர் நல்வழி
பயிற்றிமுறை யாலுல கெலாம்
படர்கீர்த்தி யறிவிநெடு துறவுமா யொன்றுபோற்
பரிவுற் றெழுந்த வொலியே

பூவுலகி லுயர்குணங் குடிபெற்ற பின்சென்னை
　　புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
　　புகழுமஸ் தான்சா கிபே. 7
எந்தெந்தத் திசைதோறு முறுஞான யோகிக
　　ளியைந்தபடி பணிந்து நெறியி
னியல்புநடை யொழுகுமதன் வகையுமிக விவரமா
　　யெப்போது முற்ற றிந்து
சந்தந்த ருஞ்சிந்தை யானந்த வாரியிற்
　　றோழ்ந்துவந் தினிது போற்றுந்
தக்கவர் செறிந்தவனு மந்தக்குடிக்குள் வளர்
　　தருசெய்கு சாகிப் பேரா
வந்தநத சமயமுற் றினுமுள்ள சூட்சிக
　　ளனைத்துமொரு மதிம திக்க
வறிவா ளொதுக்கிவிட் டொருசார மும்பற்றி
　　யடராது கண்டித் துமேற்
பொங்கென்று நற்குணங் குடிகொண்ட பின்சென்னை
　　புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
　　புகழுமஸ் தான்சா கிபே. 8
மகிழோங்க வுள்ளமறி வுகளோங்க நன்னிலையின்
　　வழியோங்க மொழியு மோங்க
மறையோங்க வுண்மையது றையோங்க
　　வகையோங்க மிகையு மோங்க
விகழோங்கு தீவினையி விகழோங்கு முலகநடை
　　யெதிரோங்கி டாம லுடலி
னியல்போங்கு மைம்பொறிக ளயர்போங்க விட்டுறுதி
　　யிகமோங்க மகமோங்கு வீர்

அகமோங்கு பாவிமன முகிழோங்கு பன்னினைவி
னடலோங்க விடமாறி னின்
றகமோங்க வெந்துயரி னகையோங்கி டக்குழறி
யழூதோங்கன் முறையா குமோ
புகழோங்கு நற்குணங் குடியோங்க வுஞ்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 9

நலனார்ந்த முகிலினிறை கடனினுங் காட்டினுயிர்
நனிதுன்று கிரிக டமினும்
நான்செயகதிர் மதியினுந் தாரகை கணத்தினும்
நகுமணிகொள் பொற் பதியினும்
வலனார்ந்த மற்றுள்ள செல்வத்தி னும்பேற்றின்
வகையினும் பலபேத மாய்
வழிகின்ற வோரொளியை வெளிகின்ற வறிவது
வரம்பினாற் றடை படுத்திப்
பவனார்ந்த செய்குசுல்த் தானப்துல் காதிர்லெப்
பையாலீ மென்ற புகழைப்
பல்லோர்க ளும்பித்தன் மஸ்தா னெனப்புவி
பயிற்சிகொளு மாநா தரே
புலனார்ந்த நற்குணங் குடிகொண் டருஞ்சென்னை
புரமீ தமர்ந்து கொண்டீர்
போற்றுமெளி யோர்க்குதவி யாற்றுமிறை யோன்றன்மை
புகழுமஸ் தான்சா கிபே. 10



ஷை புலவர் பாடிய

# வாயுறைவாழ்த்து.



நேரிசை யாசிரியப்பா.

நார்நனி விசும்புங் கதிரு மதியு
நீர்நனி கடலு நிலனு மலையு
மைமபெரும் பூதமு மவற்று ளெங்குந
தம்பெருங் குணமுந தழூஉஞ்சர மசரமுஞ்
சென்ற வாணையிற் சிதையா நிலையிலு
நின்ற முறையே நிகழதலி னாலு
மேறுமா றாகா வேறுவே றாக
மாறுகூ றாகா மன்னுரை யாலுஞ்
சாதியுந தொழிலுந தககண பணபும்
பேதியா தியஙகும பெறுமுறை யாலுங
கோனமையிற் பாகங் கொள்ளுங கூட்டின்
பான்மையொன் றில்லா வல்லபத தாலே
யொன்றே யனைத்தனையு முடையவுண மைப்பொரு
ளொன்றே மறைவிலா தியங்குகின் றதை
விதிபடு திரைகளால் விளங்கா தாய்ந்துங
கதிபடு மனத்தாற் கலங்கு மக்கா
ணேர்வழி முயல்வா னிலைத்து சிநதையி
ளோர்வழி முயல்வா னுணரு மக்காள்
பதையா திருக்கும் பண்புடைச சான்றீ
ரிதையா சனஞ்சீத் திலங்கிய சான்றீர
நற்கருத் துடையீர் நனியறி வுடையீ
ரேற்கருத் தியம்புவ னினிதிற் கேண்மின்
பதியிற் சிறந்த பதியா மதுரைப்
பதியிற் பிரபல மநேகம் படைத்தவ

ராருங்கலைக் கடலை யகமெனுங் கலத்தா
லொருங்களந் தறியா வுயர்கரை கண்டவ
ராலயக் கபாடத் தலைதா டிறக்க
மேலவர் துதிதரப் பாடிய வென்றிய
ரலைவா யுடமருண் டரித்தவ ரியினை
யுலைவாய்ப் பொய்யா தொருபுறம் பெயயுந
தங்கையைக் கண்டு தகாதென யாரொடு
சவுத முயற்சியைத் தகர்தலுவிட் டெறிந்தவ
ருயர்நபி நயினு ரோதிய வொசிய்யத்
தியாற வெவர்க்கு மியற்றமிழ் செயதவர்
நூவலரு மின்னு நூறுத் தீனென்
றெவரு மேத்து மிருந்தவ மேலவர்
பயனுர் மரபிற் பலன்கொள வந்த
நயினுர் முகம்மது சாகிபு நாத
ரருளிய சுல்த்தான் அகுமது சாகிபு
தருசேய் செய்கு மீரான் சாகிபு
செய்யுந் தவமு நேர்மையுந் திரண்டு
வையம் விளங்க வருமொரு மாதவ
ரில்லறந் துறவற மிருவகை யொழுங்கு
நல்லற மாக நடக்கு நடக்கையர்
மலையும் வனமு மறைபடு தலமும்
நிலையு முணர்வா னிட்டை யோகம்
வணக்கங் காட்சி வகைபல கொண்டு
முணக்கு முடலோ டொருமுகந் தொடர்ந்து
மிருபத் தைந்தாண் டிதுசஞ் சாரந
தருபத் தியினுர் தந்நிலை விளங்குங்
காரண வொலியாய்க் கமல கொண்டானிற்
பூரண மடைந்த புண்ணிய மூர்த்தி

நன்றிசால் செய்கு லினார் முகம்மது
வென்றிசா லரும்பயன் விளங்கவந்த
நற்குணங் குடிகொ ணயினார் முகம்மது
இக்குணங் குடியி லிருந்தவக் குன்றாய்
நலம்பெற வுதித்த நன்மக வானோர்
தவம்பெறு முறமையைச் சாற்றக் கேண்மின்
சிறுபரு வத்தே தெளிதரு வேதத்
துருபய னெல்லா மோதி யுணர்ந்து
மரபி னிலக்கணத் தாவன வெவையு
மறுவறத் தேறு மதியின ராகி
யொப்பில் குணத்தி னோங்கிய சுல்த்தான்
அப்துல் காதிரி லெப்பை யாலீம்
எனப்பெயர் விளக்க மெழுந்து வருகையில்
வனப்புறூஉம் வாலை வயதுபதி னேழிற்
றந்தைதா டொழுது தருங்கரம் பற்றி
முந்த வுபதேச மொழிநலம் பெற்றுத்
தன்னிலை திரியாத் தவத்திய லெடுத்து
மன்னிலை கொள்ளு மனத்தினானே
தவத்தின தியல்புந் தாபத ரியல்பு
நலத்துறை யுணர்த்து நன்னூற் பலவுங்
கைதருங் கீழக் கரைதனில் வாழுஞ்
செய்கப்பதுல் காதிரி லெப்பை
யாலீ மிடத்தி லருளினோ டோதிச்
சாலவுந் தேறித் தாபத முறைகொண்
டருணபி கிசுறத் தாயிரத் திருநூற்
றிருபதோ டிருநான் காண்டினி லுலக
முற்றுந் துறந்து முறைபல கடிந்து
பற்றற் றெவையும் பயன்படவொழுகித்

தேங்கமழ் சோலைத் திரிசிற புரத்தி
லோங்கிய வறிவா னுயர்ந்த ஆலிம்
தன்னிலை யுணருந் தன்மையுங் குணமு
முன்னிலை யியல்பு முழுதும் பதிந்து
பூமியி லெவர்க்கும் பொருளா மௌலடி
சாம் சாகிபு தம்மைத் தொடர்ந்து
மாட்சிமை தருநெறி வகைநலந் துலங்கத்
தீட்சை பெற்றுச் சிறந்தன பெற்றுத்
தனிநிலை யொருமையைத் தாங்கி யிருவினைத்
துணியினை யொருவி மும்மலந் தொலைத்து
நாற்குணந் தெரிவுற் றைம்புல னடக்கி
யேற்கு முட்பகை யாறையு மெறிந்து
பாதக மேழையும் பசையறப் பறிந்து
மேதகு தவதது றுப் பெட்பையு மேவி
யிரக மொன்பதி னெடுப்பன வெடுத்து
விரதம் பத்தென விளங்கிய துறவே
பொருளாக் கொண்டு பொருந்தி வருகையில்
இருளாப் பகலா விதுவே நோக்கமாய்ப்
பகலெலா நோன்பு மிரவெலாந் தொழுகையு
மகலா நன்முறை யாகவுஞ் சிலநா
ணீர்நசை யூணசை நீங்கியு மாக்கைக்
கோர் நசையுங்கொடா தோர்ப்புந் தாங்கி
வாய்வா ளாமையா வருநாட் கிடையினிற்
போயொருக் கொருங்கு புகுந்தொழிந் திருப்பச்
சிந்தையிற் றுணிந்து சிக்கந்த ரடங்கிய
மந்திர மருங்கின் மண்பல மொன்று
மறந்தாங்கி யூர்ப்புத் தடுக்கல கத்துந்
திறந்தாங்கி யோரறு திங்களுந் தொண்டியின்

 

## வாயுறைவாழ்த்து.

மாதுல ரடங்கிய வாழைத் தோப்பினு
மேதமொன் றனுகா தீரிரு திங்களு
மரைக்கா ளுழியி னமிழ்தா னென்பா
யுரைக்காது கல்வதி யோகத்திருந்தன
ருள்ளிருந் தொருங்கு காணுங் காட்சியும்
வெள்ளிடை விரிநது பரந்த காட்சியும்
தள்ளா தேகமாத் தன்னை யமிழ்த்தலின்
விள்ளா துணர்வினு மெய்ம்மைவினேதமே
காணுவ கருத்தரா மௌனகண் டிதரா
நாணும் பிதர்போற் றன்னடை கொண்டு
இளர்நதெழு சதுர கிரியிலும் புருக்கி
வளர்ந்த மலையினு நாக மலையினும்
யானை மலையினு மிருங்குகை செறிந்த
வேனை மலையினு மிருளடை வனத்தும்
பல்லிலங் காடிய பணமரப் பொதும்பு
நல்லிலங் காடிய மொழினதிக் கரையினு
மறிமட மசுதா பாகத திருநதுஞ்
செறிமட யோகியர் சேகரநீத்துஞ்
சருகுங் கிழஙகுந் தழையுங் குழையுங்
கருகுங் கனியுங் காயும் புசித்து
மாசன`விகற்பத் தாகிய யோகமும்
போசன மறியாப் பொழுதொடு நேமமு
மேலாங் காலுங் கீழாந் தலையும்
பாலா முடலுமாப் பல்பட வணங்கியு
மொருபக லன்றிப் பல்பகல் விரதமும்
பலவிரவன்றி யோரிரா வொழிபு
யாக்கிய முகியித்தீ ஞண்டவர் பேர்க்கொரு
தேக்கருமபாத்திகாச சிறப்பிற் செய்தார்

நாடின பேர்க்கரு ணயன நோட்டங
கூடின பேர்க்குளக் கருணை நல்கியு
நினைத்த காரியம் நிறைவேறப் படுத்தியுந்
தனைத்தொடர் பவர்க்கா வனமுறை தொகுத்துஞ்
சிலபக லியாருந் தெரிய விருந்துஞ்
சிலபக லெறிந்துந் தெரியா திருந்தும்
பின்னர் தம்மிடம் பிடித்தநோன் புடனே
நன்னர் பயப்ப நயந்தடைந் தனராற்
கண்டகண் டிதமாய் நாளினைக் கணித்துங்
கொண்டகண் டிதமெய் யோகங்கொண் டுந
துண்டிடு கண்டுந தாய்பாற் சிறிதுங
கொண்ட பொழுதுங் கொள்ளாது மிகுதியு
மொருவர்க்குங் காணு வொதுக்கமும் பதுக்கமு
மிருவர்க்கே காணு மேகமு மாகத்
தூங்காது தூஙகிச சுகத்தொடு தன்னிலை
நீங்கா திருந்த நிலைமையென் சொல்வேன்
பதையா திம்முறை பன்னிரண் டாண்டுஞ்
சிதையா திருந்த செய்கையென் சொல்வே
னரிதரி தம்ம வகமொரு நிலைபட
வரிதரி தம்ம வருமையென் சொல்வேன்
பேரின்ப வெள்ளப் பெருக்கி லழுந்தியு
மாரின்ப மீறிய தான்றென் றுதியிற்
றொடருயிர் காந்தத் தொடரய மென்னப்
படர்தரு மாசைப் பற்றங் கிழுப்பத்
தழல்படு கரிய தழலா யினும்பெயர்
கழல்பட விலையாற் கழன்று லன்றி
யொன்று காவென் றுரைக்கு முறைபோல
வென்றுள் கடத்தை விடுத்து நீங்கி

யிருவகை யிறப்பு மிறந்துப்பு மப்பு
மொருவகை சுடரு மொளியும் போலக்
காரண மெவையுங் கலவ ததன்ற
பூரணத் தொடுபரி பூரண மடைந்தா
ரேற்படு குறைமுடி வெய்த மாவயது
நாற்பது மேழு நிறைய நடந்ததே
யித்தகைத் தவத்தி னேறிய தாபர்
பதியிற் பயின்று பல்பல முயற்சி
கொண்டு வருநாட் டன்னிற் குமிழி
மண்டுமா நந்த வெள்ள மல்கிப்
பொங்கி வழிந்து புறம்பொழி வதுபோ
லிங்கித நாவி னெழுந்தசில் கவிக
ணயம்பெறு மவற்றை நால்வரு முணர்ந்து
பயன்பெற வசசிற் பதிப்பிக்க நாடி
முடையா னுடையதோர் சம்மதத் துணர்வி
னடையா னன்றித் தண்ணடை யின்றியு
மறையாக் கருத்துங் குறையா வறிவி
னிறையான் மாய்ந்த காய நிலையைக்
குணங்குடி மஸ்தா னெனக்குறி யிட்டும்
பிணங்கா திணங்கா தொருபெயர் தரித்து
மிப்பெய ராற்பல புதுமை யியற்றியு
மப்பெய ரான்மனத் தெருணிலை யமைத்து
மளவிலாக் காரண மவரவர் காணக்
களவிலா மெய்ந்நிலைப் பயனது கனிந்து
மிவ்வண மேழாண் டாமவித் திசைதிரிந்
தவ்வண நிலையான் வடதிசைக் கடந்து
கண்டா ரெவருங் களிகூர்ந் துள்ளங்
தொண்டாய்த் தொழுதிடத் தோற்றுமா தவராய்ப்

பன்னு டவரும் பலன்பெறத் தரிசனந்
தன்னு லுயர்தவந் தாஙகுறு வினயராய
மன்னுணர் வினுஞ்சில வதியுணர் வினுஞ்சில
தன்னுணர் வினுஞ்சில நடைபயில் கையராய
நேர்மையி னுள்ள நேர்ந்தவ ரெவர்க்கு
மோர்மை புரியு முயர் தேசிகராயப்
பொன்னேமா நிதியைப் போற்றலிற் போற்றுஞ்
சென்னேமா நகரஞ் சிறப்பொடு புகுநதார்
முன்னேய நினேவினும் புறவுணர் புனேத்துந்
தன்னய முறைபோற் றடைபடா துலவியுஞ்
சிலபகல் வெளிப்படத திருநது மறைபடச
சிலபக லடஙகியு மௌனமாயத திரிநதுஞ்
சுட்டிக்காட்டியு மெணணிற் றெருகுதது
மெட்டிக் காட்டியு மெழுதிக் காட்டியு
மியல்பின் வேண்டுவ வெவையும விளககியும்
பயிலுஞ் சிலநாள பலன்பெற யாருமே
பாவா லெப்பை யெனும்பிர பலவான்
காவாந் தோட்டத்திற் கதிநலம் பெறுவான்
மக்க ளுவநது மனப்பொருத் தங்கொண்
டெக்காலும் புகழ்பெற வினிதி னல்கிய
தலத்தினே த தைக்கா வாகத் தகைத்து
நலத்தொடு கல்வத்து நாடிப் புகுந்தா
ரயன மொருமுன்று மதனுட் டனித்துப்
பயனுறு மியோகப் பண்பி னிருந்தா
ராவ முதலா வூர்வன வடைபட்
டொரக ளுணரா துணர்வினி னின்ற
நிலேயே புதுமை நிரம்ப விளக்கக்
கலேயே கலேயாக் கண்ணெடு வெளிவந்

தூங்குமுரீதி னுயர்வழி யவாது
தாஙகுங காதி ரிய்யாத் தன்னை
கண்ணோட்ட மிட்டரு டருகெனக் கனிந்து
வெண்ணோட்ட நன்மையே யியைந்த கருத்தின
ரவர்களுக் குரிய வன்புறு பத்தரி
லெவர்களு மதிப்ப விளங்கு நேர்மைய
ரிருபோது மவர்பெய ரேத்தி யேத்தி
யொருபோது மறவா வுறுதிச் சிந்தையர்
மருவளர் பூவன மல்க மல்கிய
திருவளர் செழுந்தடச் சீயமங்கலப்
பதிவளர் செல்வப் பதியரு ணாசல
முதலியா ரினிய முயன்று கேட்ப
வுலக முற்றுந் துறந்த வுள்ளமு
முலக மணுவுந் துறவா வுள்ளமு
மொருவகை யானு மொன்ற தாபோ
லிருவகைப் பட்ட விதய ரையினும்
வரதனின ரருணலம வருவழி யென்றே
கிரதனினி ணேர்ந்து ளுவந்து துணிந்தனன்
சொல்லு மதுவே பொருளு மதுவே
புல்லுந் தொகையும் புணர்ப்பு மதுவே
யன்றி யொன்று மமைந்தே னல்ல.
னன்றி யொன்று நடைகொ ளடியி
னின்ற கிடரினைப் பெயர்த்தலு நிரைபடச
சென்ற வெழுத்தினைச் சேர்த்தலும் வழுவா
வழிபோன் மாறி நிறுத்தலும் வழக்க
மொழிபோற் பதித்தலு முற்றப் படுத்தலுங்
குறிப்பிற் றுறையுங் கோத்த வதிகாரமும்
பெறப்படச் செய்தலும் பின்முன் கவிகளை

மாலை புணர்க்க மாட்டலுங் குறைந்த
காலை கிலைக்கக் கட்டலும் வெறாத
பாலும்பழமுந் தேனும் பருகுதல்
போலுஞ் சேரப் பொருத்தலுந் திருத்தலும்
பார்ப்போர் பாரக்கப் பயன்படு முறையுஞ்
சேர்ப்போ ருள்ளஞ் சிறக்கு முறையுங்
கொண்டொழு கினனாற் களிகூர்ந் துயர்ந்தோர்
கண்டொழு குவதே கடனா மன்னே
குணங்குடி யார்சொற் குணங்குடித் திடுமின்
மணங்குடி திருமனை வாழிவாழ்ந் திடுக
வறந்தாங்கி யார்சொ லறந்தாங் கிடுமின்
சிறந்தாங் குயர்பதம் வாழிசேர்ந் திடுக
வொருமை படுத்த லுண்டா முண்டா
மிருமைப் படுத்த லின்றா மின்றாம்
பொய்ம்மைத் தொடர்வினை போகும் போகு
மெய்ம்மைத் தொடர்வினை மேவும் மேவும்
புறத்தும் வையாளி போடும் போடு
மறத்திரை யுள்ளு மாடும் மாடும்
விண்ணு மண்ணும விரியும் விரியுஞ்
செண்ணாந திண்ணாந திரியுந் திரியுந்
துவித மலவத் துவித மென்றே
யெவிதத் தாலு மிதயந் தெளியுமே
தொட்டுந் தொடாதுஞ் சொற்றவை யுணர்ந்தார்
கிட்டு மொருமை கிருபையி னறிக
வென்னிய லுணர்வா னிதய முளதே
லந்நிலை யுரைப்ப னருளீர் கேணமி
னரும்பதி காய லறிவா ளரினுயர்
பெரும்பதி மானுப் பிள்ளையி லப்பை

யாலீ முதவிய வருண்மணி பலகலை
நூலி னணிமுறை நோற்றனு பவித்த
வேதாந் தக்கடன் மெய்ஞ்ஞா னப்பொரு
ளோதாந் தச்சுடர் நலமிகப் பொதிந்த
சித்த ராகு மன்றியுஞ் சீவன்
முத்தர் கபீபு முகம்மதி லப்பை
செய்தவத் துதித்த செல்வன் குணங்குடி
மெய்தவத் தினர்க்கு வித்தையிற் றேழன்
பயன்பெறு புராணமும் பலபிர பந்தமு
நயன் பெறப் புனையு நாவல னெவர்க்கு
முண்மைப் பொருள்வழு வோம்புந் தேசிகன்
வண்மைக் கரத்துடை வள்ள லிறசூல்
செப்பிய வழிபுனை செய்கு
அப்துல் காதிரி லெப்பையா லீமே.

முற்றிற்று.

---

# தொகைச்சொல் விளக்கம்.

ஒருமை-ஒன்றுபடுந் தன்மையாதல், அது இறைவுணர்வு, இருவினை-நல்வினை, தீவினை, மும்மலம்-ஆணவம், மாயை,காமியம், நாற்குணம்-அறிவு, நிறை, ஓர்ப்பு, கடைப்பிடி, ஐம்புலம், சுவை, ஒளி-ஊறு, ஓசை, நாற்றம், உட்பகையாறு-காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம், பாதகமேழு, அகங்காரம்,உலோபம், காமம், பகை, போசனப்பிரியம், காய்தல், சோம்பல், தவத்துறுப்பெட்டு ஊணசை யின்மை-நீர் நசையின்மை, வெப்பம் பொறுதல் தட்பம்பொறுத்தல்-இடம் வரையறுத்தல், ஆசனம்வரையறுத்தல், இடையிட்டுமொழிதல்- வாய்வாளாமை, இரதமொன்பது-சிங்காரம், வீரியம், பெருநகை, கருணை, இரௌத்திரம், குற்சை, சாந்தம், அற்புதம், பயம், விரதம் பத்துறுப்பினது துறவு-யாக்கைக்கு மாவிக்கும் வேண்டியபொருள்களில் விதித்தனகொள்ளல், விலக்கியன நீக்கிவிடுதல் இறைவன்பாற் பற்றுநிலைத்தல், மாயமருளின் மயக்கறுத்தல், அவனையேவிசுவசித்தல், வேறுமியல்புகளை யொதுக்குவித்தல், தன்னியல்பை நினைந்தெப்போதுஞ் சஞ்சலம் பதித்தல், தன்பிழை பொறுக்குந் தகைமைதேடல். அவனதுவல்லபத்திற்குத் தன்னேலாமையை நோக்கி யிரங்கல்.

நேரிசை வெண்பா.

பெரியோர் கருத்தைப் பெயர்த்தறிய லாக
வுரியோ ரெவைக்கு முரியோர்-பெரியோர்க்குச்
சொல்லும் பொருளுந் தொடரா திரண்டாகும்
புல்லும் பொழுதிற் பொருள்.

பிசுமில்லாகிவொகிபிஸ்தகீன்

குணங்குடி

# மஸ்தான்சாகிபு

# அவர்கள் பாடல்.

## பிசுமில்லாகி அலாகியத்து சுல்த்தான்

அப்துல்காதிர் முயித்தீன்

**திருவணக்கம்.**

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இணங்குமெய்ஞ் ஞானப் பேரின்பக் கடலி
னின்னமு தெடுத்தெமக் களிப்போன்
பிணங்கிய கோச பாசமா மாயைப்
பின்னலைப் பேர்த்தெறிந் திடுவோன்
வணங்கிய தவத்தி ஞேர்க்கருள் புரிய
வள்ளலாய வந்தமா தவத்தோன்
குணங்குடிவாழு முகியித்தீ ைமென்
குருபதஞ் சிரதின்மேற் கொள்வாம்.

---

வஸ்துதயத்திறைந்தம்.

ஆசிரியவிருத்தம்.

மருவியத் தானதாத் தூல்கிபுரி யாவில்
மறைந்தகன் சுல்ம குபியாம்
மஸ்கூத்து அன்குல்க நீமூல் அமாவான
மவுஜூது தெனுஞ்சி ருபுலே
அகதியத் துகதாதி வாகிதிய் யத்தான
ஆலம்அறு வாகா னதில்

ஆலம்மி தாலாகி ஆலம்அ ஹி சாமான
ஆலம்இன் சானு னபின்
பகுதியத் தில்லா ஜலாலொடு ஜமாலும்
பதிகுல்க மாலு மாகி
பகுதகபு லற்றலா கூத்துஜப றூத்தில்
பகாவான குவியத் தினுல்
கருசியத் தற்றுமுன் ருளினிழல் பெற்றடிமை
நானினைவு மற்றுய் வனே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷாவான குரு
நாதன் முகியித் தீனே. 1

வஸ்துதய நிலத்திருநந்தம்.

பறுதானி யத்திலோ சுபு கானி யத்தெனப்
பகர்பரா பரம தனிலோ
பற்பல விதங்கொண்ட அகியானி யத்திலோ
பரிபூர ணநதன் னிலோ
அரிதான தாத்திலோ அலிபெனுஞ் சுகவாரி
யாகும்நுக் தாப தனிலோ
அகுலம்உ லாவான ஆலமலக் கூத்திலோ
ஆலம்அசு பல்தன் னிலோ
குறிகுணு தீதவட் டாஙகயோ கத்திலோ
கோடானு கோடி மறையாற்
கூறரிய சிவராச யோகத்தி லோவருட்
குறையாப் பெருங் கடலிலோ
நாலெங்க ளருளாள னேநீ யிருப்பதிங்
நாயினேற் கருள்செய் குவாய்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 2

விளையாட்டிருநந்தம்.

அண்டகோ டிகளுமோர் பந்தெனக் கைக்குள்
அடக்கிவிளை யாட வல்லீர்
அகிலமோ ரேழினையு மாஙெங் கறங்குபோ
லாட்டிவிளை யாட வல்லீர்
மண்டலத் தண்டரை யழைத்தரு கிருத்தியே
வைத்துவிளை யாட வல்லீர்
மண்ணகமும் விண்ணகமு மணுவைத் தொளைத்ததின்
மாட்டிவிளை யாட வல்லீர்
சண்டித்த கடுகிலெழு கடலைப் புகட்டிக்
கலக்கிவிளை யாட வல்லீர்
கருதரிய சிததெலாம் வல்லநீ ரடிமையென்
கண்முன்வரு சித்தில் லையோ
நண்டளங் கிடொழி யாவனே தேவரீர்
நல்லடிக் காளாகியும்
நற்குணங் குடிகொண்ட பாத்துஷாவான குரு
நாதன் முகியித் தீனே. 3

தன்னியவிருநந்தம்.

ஐயோ வெனைப்போலு மாப்பெரும் பாவியிவ்
வகிலத்தி லெஙகு மிலையோ
அநியாய மநியாய மென்பெரும் பாதகம
தார்பா லெடுத்தோ துவேன்
மையான கண்ணியர் வலைக்குள் ளகப்பட்ட
மாபாவி தீபா வியான்
மருளுபு சுபுகானி யானவுமை நாடாத
மடமைகுடி கொண்ட பாவி

பொய்யான வாழ்வதனை மெய்யாக நம்பியுன்
பொன்னடி மறந்த பாவி
பொல்லார்க ணேசமே யல்லாது நல்லோர்
புறக்கணித் திட்ட பாவி
நையுமோர் பொய்யுலக ளுகியே யுமதடிமை
நாயினுங் கடையா வனே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 4

மகிமையிளுநந்தம்.

மாதவர்க் கரசான மன்னர்க்கு மன்னுக
வந்தமக ராஜ னீயே
மண்டிசையும் விண்டிசையு மெண்டிசையு நின்றசையும்
வாசனும் போஜ னீயே
ஆதிநீ மகுருக்கு றகுமானு நீயெனக்
கானமகு பூவு நீயே
அக்கா ணியத்திலே சொக்குமிறு சாதுந
தருள்செய்ய வந்த நீயே
வேதநீ வேதவே தாந்தநீ யெனையாளும்
வித்தகன் ளுனு நீயே
மெய்ஞ்ஞான வீடுநீ வீட்டின் விளக்குநீ
விரிகதிர்ச சுடருநீயே
நாதனீ நவநாத சித்தனீ முத்தனீ
நாதாந்த மூர்த்தி நீயே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 5

வலிமையிளுநந்தம்.

மன்னிய தவத்தினர்க் கருடந்த குருவுநீ
மாதா பிதாவு நீயே

மட்டறு பவக்கட லுறுலைக்குமொரு கவிழா
மரக்கலமு நீயல்லவோ
அநாதியம தானபிர பஞ்சமாம் பெருநெருப்
படக்கும் பெருமபா லமா
யன்புட னெனைப்பெற்ற வப்பனே யருடந்த
வாண்டவனு நீயல் லவோ
என்னையுனை யன்றியினி யாள்வரெவ ரையனே
யெநதையே யெம்பி ரானே
இகபர மிரண்டினுஞ் சுகதுக்க மற்றியா
னீடேற வருளபு ரியவே
நன்னிலைய மாகவென் முனனிலையில் வந்துமெந
நாளுமரட் சிததருள வையே
நற்குணங் குடிகொணட பாத துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 6

இரக்கதிறுநதம.

கல்லு மொருபோதிற் கரைந்துருகு மென்மனக்
கற்கரைவ திலையை யனே
கவலைகளை யிவளவென் றென்னுணை யென்றூற்
கணித்துமுடி கூடு திலையே
அல்லுபக லாகவென் னவதீர்த தி யவகீர்த்தி
யம்மம்ம வென்சொல் லுகேன்
ஆறனு மார்க்காக வடிமைகொண் டாயிந்த
வடியனே னுய்யும் வண்ணஞ்
சொல்லுமெய்ஞ் ஞானச் சுகக்கடலை யுணடியான்
சும்மா விருக்க வருள்வாய்
சுத்தபரி பூரணச் சுகவாரி தன்னிலோா
சொட்டாகி னுந்தொட்ட பேர்

நல்லவர்க ணல்லவர்க ணல்லவர்க ளென்றைக்கு
நானு நல் லவனுவனே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 7

பெருமையினுநந்தம்.

சொல்லான் முழக்கமிட் டோலமிடு வேதமுஞ்
சொன்னதுட னின்ன மின்னஞ்
சுருதிமுத லாகம புராணகலை யோதிய
சுலோகங்க ளென்சொல் லுகேன்
பல்லா யிரங்கோடி யண்டபகி ரண்டமுன்
பாதபங் கயமல் லவோ
பரிபூர ணானந்த மேயுனது முடியெனப்
பகர்வதும் பொய்யா குமோ
வல்லா னெனும்பெய ருனக்குள்ள தல்லாது
மற்றவர் தமக்கு முளதோ
வானவர் தினந்தினம் வந்துன் பதம்பணியு
மகிமைசொல வாயு முண்டோ
நல்லோர்தமக்கலா தெல்லார் தமக்குமுனை
நவிலுதற் கெளிதா குமோ
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
நாதன் முகியித் தீனே. 8

தன்னிலையினுநந்தம்.

சித்திரை தனிற்செத்த பொய்யான மெய்யுடலை
நிலையமென் றிடுவ தல்லால்
நிலையாத காயமென் றெண்ணுவோர் கனவினு
நிசமாக யான றிகிலேன்
எத்தனை விதங்கடான் கற்கினுங் கேட்கினு
மென்மன திணங்கு திலையே

எடுதன் றெடுத்துரைப் பேனெமக் கிறைவனே
　　யெஙகோ னெனும் பிரானே
மற்றவர்களைத் தனை யிருக்கினு மென்கொடிய
　　வல்வினை யகற்ற வசமோ
மலேயிலக் கெனநம்பி னேனம்பி னேனென்று
　　வநதெனுட் குடிகொள் வையே
நற்றவமு முதலியுஞ் சித்தம்வைத தருள்செய
　　நாட்செல்லு மோவ றிகிலேன்
நற்குணங குடிகொண்ட பாத்துஷா வானகுரு
　　நாதன் முகியித் தீனே.

காரணத்திஞெநந்தம்.

கடலிற் கவிழ்ந்ததோர் கப்பலா லாத்துடன்
　　கடுவர வேய ழைத்தீர்
கம்பமுட ஞெடியே வநததோர் கப்பலைக்
　　கடிபூனை யாகக வைத்தீர்
குடிகொண்டு கர்ப்பவறை யுள்ளிருக் கையிலுமைக்.
　　கொலேசெய்ய வந்த முனியைக்
குதிகொண்டு வெளிசென்று மிருதுண்டு கண்டுபின்
　　கூர்கர்ப்ப வறைபுகுநதீர்
பிடியிற் பிடித்துண்ட பிள்ளைகங் கியாசிகுடர்
　　பீறிவர வேய ழைத்தீர்
பிரியம்வைத் தெனையாள வென்னிடத் திந்தவிரு
　　பேரையுந் தூது விட்டீர்
நடனமிடு பாதார விந்தமென் சென்னியுற
　　நாட்சொல்லு மோசொல் லுமே
நற்குணங் குடிகொண்ட பாத்துஷா வானகுரு
　　நாதன் முகியித் தீனே. 10

ஆநநதமாகிய பேரின்ப வனுபோகநிலேயாற்கூறிய இப்பத்துக்
கவியுங் குருபரனை யொருபாஞகக் கொண்டாடித்
தோத்திரஞ் செய்தது
முற்றிற்று.



# முகியித்தீன் சதகம்.



ஏகவறிவாகிய வள்ளலிறசூலைத் தொடர்ந் தவரருட்பெறு
வான் பொருட்டாக முன்னிலைக் குருவாகிய முகி
யித்தீன் ஆண்டகையைத் தோத்திரஞ்செய்து
குறையிரந்துவந்து பாடியசதகம்.

திருவணக்கம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

உணர்ந்துதற பரமா யுரைக்ககோ சரமா
யுயிர்க்குயி ரானசா கரமாய்
இணங்குசிற் பரமா யணுக்கடா வரமா
யேகமா கியபரா பரமாய்
வணங்கிக பரமாயக கிளைதத நா றுமுகம்
மதுகிளை விளக்கொளி கொழிக்குங்
குணங்குடி வாழ் முகியித்தீ னெமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். 1

வணங்குவார்க் கிணங்கு பெரியபேரின்ப
வாரியிற் படிந்துவாய் மடுத்தே
உணர்ந்துணும் பொருட்டாய் வலியவந் தெனையாண்
டுவந்துளங் களித்தக மகிழ்ந்தே
அணைந்தணை தெடுக்குங் கருணைகொப் புளிக்கு
மலகிலா வருளடை கிடக்குங்
குணங்குடி வாழு முகியித்தீ னெமென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். 2

அணைந்துயிர்க் குயிரா யலர்மட லவிழ்ந்த
வகண்டிதா காரமா மலரின்

மணங்கமழ் நயினார் முகம்மத ரென்னு
மௌனதே சிகருட னெனையுந்
துணிந்துமா மாயைத் துணியெலாங் கிழித்துத்
துறவறந தாங்கிய ராக்குங
குணங்குடி வாழு முகிபிதநீ ரென்மென்
குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம். 3

நான்முகம்.

மாயா விநோத மெல்லா மறைந்து
தூயாதி யுணமைச சுயம்பிர காசிக்கக்
காரணக குருவின் கருணையந் தொடர்பால்
ஆரணக் குருவே யருள்கவென் றிரதல.

ஆசிரிய விருத்தம்.

ஆதிமுன் னிற்கவே யகதுகது வாகிதிய்
யத்தெனது முன்னிற்கவே
யத்துவித வஸ்துமுன் னிற்கவே யறிவகண்
டாகார முன்னிற் கவே
போதமுன் னிற்கவே போதமனு காதபரி
பூரணம் முன்னிற் கவே
பொங்குசிவ ஞானமுன் னிற்கவே வானுதி
பூதலய முன்னிற்கவே.
நாதமுன் னிற்கவே நாதனொளி பெற்றநபி
நாயகம் முன்னிற் கவே
நானுமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
னன்மைதந் தாளு தற்கே
மாதா வினுங்கருணை யுள்ளநீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகிபிதநீனே. 1

நீக்கமற வெங்கெங்கு நின்றுநிறை கின்றபொரு
ணேரிலென் முன்னிற் கவே
நிர்விஷய சுத்தமா சற்பர வெளியான
நிர்க்குணமென் முன்னிற்கவே
தாக்கிமா கோடிமறை வாக்கியம் பறையுமா
தத்வமென் முன்னிற் கவே
தத்துவா திகளற்ற முத்திக்கு வித்தான
சற்குருவென் முன்னிற் கவே
போக்குவர வற்றபரி பூரணா னந்தமெய்ப்
போதமென் முன்னிற் கவே
புன்மைகுடி யானவடி யேனுமுமை நம்பினேன்
பொய்ம்மைதீர்த் தாளு தற்கே
வாக்குமா றுதநாக் குள்ளநீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. 2
இகபர மிரண்டொன்று வகையுண்டு வெளிகண்ட
வீசனென் முன்னிற் கவே
ஏகமா கியபரா பரமெனது முன்னிற்க
வெப்பொருளு முன்னிற் கவே
வகைதொகுத் தோலமிடு மறைகண்முறா சறைகின்ற
வள்ளலென் முன்னிற் கவே
வானாதி பூதமுந் தானாகி நின்றபெரு
மானெனது முன்னிற் கவே
அகமகிழ வந்தகுடி கொண்டகுரு நாதனடி
யாருமென் முன்னிற் கவே
அன்றுமின் றென்றுமடி யேனுமுமை நம்பினே
னண்டிவந் தாளு தற்கே

மகிழ்துன்னு புன்னகைப் புள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வருகவே
வளருமரு ணிறைகுணங குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 3

நோக்குநோக் கொண்ணுத நோக்குநோக் காகின்ற
நோக்கெனது முன்னிற் கவே
நோக்கிப் புராதனப் பொருளான நுண்ணறிவி
னுட்பமென் முன்னிற் கவே
நீக்கமற வங்கிங் கெனுதுவெங் கெங்குமொரு
நிறைவெனது முன்னிற் கவே
நேசித்த நெஞ்சமே குடி கொண்ட வான்கருணை
நேயமென் முன்னிற் கவே
போக்கொடு வருதலொடு விகாரமது வாய்நின்ற
புநிதமென் முன்னிற் கவே
புல்லறிஞனுனவடி யேனுமுமை நம்பினேன்
போதுமென வாளுதறகே
வாக்குமன மொத்தமர புள்ளநீர் பின்றொடர
வள்ளலி றசூல்வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 4

எற்றுத மாயைதனை யெற்றுபே ரெற்றுபே
ரின்பமென் முன்னிற் கவே
ஏகமா யொருகால மழியாத வொளியான
வெம்பிரான் முன்னிற் கவே
புத்திக்கு மெட்டாத வட்டாங்க யோகமழை
பொழிவதென் முன்னிற் கவே
பூதமுத லுதமுட னேதுமது வானவான்
பொருளெனது முன்னிற் கவே

குற்றமின் னற்குணங் குடியா னெனுங்குணக்
குன்றெனது முன்னிற் கவே
கொடுமைகுடி கொண்டவடி யேனுமுமை நம்பினேன்
குறைவு தீர்த்தாளு தற்கே
வற்றா வருட்செல்வ முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வரு கவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண
மணியே முகிபித தீனே. 5

ஊரற்று நாமரூ பத்துடன் பற்றற்
றுயர்ந்ததெனை முன்னிற் கவே
ஒன்றற் றிரண்டற்று வாககற்று மனமற்
றுதித்ததென் முன்னிற் கவே
கூறுகுண மற்றுமொளி யற்றுமவெளி ததிக
குதித்ததென் முன்னிற கவே
குறியற்று மறிவற்று நிறைவுகுறை வற்றுங
குலாவியதென் முன்னிற கவே
ஈறுமுத லற்றுமின் றற்றுநா ளையுமற்
றிருப்பதென் முன்னிற் கவே
எதுமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
னின்பமுற் றாளு தற்கே
மாறிலா நற்கருணை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித தீனே. 6

தேடியே வந்தரு டந்தமை கொண்டவென்
றேசிகன் முனனிற் கவே
சிற்பர வெளிக்கொளி கொழுக்குமா கர்ப்பூர
தீபமென் முன்னிற் கவே

நாடரிய செஞ்சுடர் பரப்புகுரு நாதனெங்
    நாளுமென் முன்னிற் கவே
நாளு விதங்கொண்ட வாசாம கோசரா
    நாதமென் முன்னிற் கவே
ஈடுசோ டற்றசிற் சத்தியா மெம்பிரா
    னென்னெதிரின் முன்னிற் கவே
னெற்கைமுன் னிற்கவடி யேனுமுமை நம்பினே
    னிலகுவந தாளு தற்கே
வாடாத சமநிலைய முள்ளநீர் பின்றொடர
    வளவிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைதகுண வகுடிவாழு மென்னிருகண் 7
    மணியே முகியித் தினே.
அருளகண டாகார வானந்த பூர்த்தியெனு
    மாதார முன்னிற் கவே
அதிசொற்ப்ர காசவரு டேசோம யநந்த
    வாதிகக முன்னிற் கவே
குருநாத னேகமெயப் பிரணவ சொரூபக்
    கொழுந்தெனது முன்னிற் கவே
கூறரிய சாலமப ரகிதமா கியதிவ்ய
    குணசாந்த முன்னிற் கவே
நிருவிகா ரததுடன் றளதளென நின்றொளிர்
    நிராமயம முன்னிற் கவே
நிலையமுன் னிறகவடி யேனுமுமை நம்பினே
    னேயம்வைத தாளு தற்கே
மருமலர் மணகோல முள்ளநீர் பின்றொடர
    வளவிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைதகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தினே. 8

பலவுமா யொன்றுமா யென்றுமாய் நின்றதற்
பரமெனது முன்னிற் கவே
பரமான தெப்பொருளு மதுவாய் முளைத்துவிளை
பயிரெனது முன்னிற் கவே
நிலைசரமொ டிகபரமு முயிரினுக் குயிராகி
நின்றதென் முன்னிற் கவே
நேரிட்ட ஞானகு ரியனு யுதித்தநன்
னெறியெனது முன்னிற் கவே
அலையுலகு கானலின் னீரெனத் தோன்றுமெய
யறிவெனது முன்னிற் கவே
அயயனே யஞ்சியடி யேனும்முமை நம்பினே
னுதரித் தாளு தற்கே
மலையிலக் கானகுறி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 9
உடல்பொருளோ டாவியுங் கைப்பற்றி யெனையாளு
முத்தமன் முன்னிற் கவே
ஊனாகி யுயிராகி யூனுயிர்க் குயிரான
வுண்மையென் முன்னிற் கவே
திடமாயை தொடரா தடர்ந்தேறு மெய்ஞ்ஞான
தீரமென் முன்னிற் கவே
திவ்யகரு ணாகர முகம்மத ரெனும்மருட்
செல்வமென் முன்னிற் கவே
கொடியோடு கொழுகொம்ப தாகநீர் வந்துகுதி
கொண்டெனது முன்னிற் கவே
கொத்தடிமை யானவடி யேனுமுமை நம்பினேன்
கொண்டெனைத் தாளு தற்கே

வடிவிலகு நடனவடி வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 10

ஆகபாடல் – 24.



அப்பொரு டானே யெப்பொருட் குணமு
மொப்பியு மொப்பா தாகிய வுண்மையைப்
பிரியாது தெரிசிக்கப் பிரியமா யெனக்குங்
கருணைகூர்ந் தருள்கெனக் கனிந்துநின் றிரத்தல்.

ஆசிரியவிருத்தம்.

நித்தமாய் நன்னிருவி கற்பனிட் டாபரர்க
ணெற்றினே ரிட்ட பொருளை
நிச்சய வகோசரத் தாதார பேதநிலை
நின்றுநிறை கின்ற பொருளை
முத்திக்கு வித்தாய் முளைத்துவிளை பொருளையருண்
மொய்த்தசுட ருற்ற பொருளை
மும்மண்ட லங்களுங் கொண்டமூ லாதார
மோனவடி வான பொருளை
புத்திக்கு மெட்டாது புத்திக்கு ணின்றிலகு
போக்குவர வற்ற பொருளை
போதவருள் புரியவடி யேனுமுமை நம்பினேன்
புனிதமுட னுளதற்கே
மத்தமத யானைநிக ருள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 1

பெந்தமொடு மூத்திபு மகிழ்ச்சியு மிகழ்ச்சியும்
பின்னுமுன் னுங்கெட்டதைப்
பெரிதுசிறி தருவுருவொ டதுவிதென் பதுவும்
பிறப்பிறப் புங்கெட் டதை
சிந்தித்த லோடுவந் தித்தலும் பொய்ம்மையொடு
நிசமென்ப துங்கெட் டதை
நீநானெ னலுமொன் றிரண்டெனலு நீதமொட
நீதமென லுங்கெட்டதை
அந்திபகல் போக்குடன் வரவுமன வாக்கொடுங்
கங்கென்ப துங்கெட் டதை
அறியாம லறியவடி யேனுமுமை நம்பினே
னறிவுதந் தாளு தற்கே
வந்தடிமை கொள்ளமன முள்ளநீர் பின்னேறுடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 2
மூத்தைநவ மணியையொளி பத்திபா யும்மணியை
மோனமணி ஞான மணியை
மொய்த்தகதிர் மாசிலா மணியைவா னுதியா
மூவுலகு மான மணியைச
சித்திமணி யைச்சித்தி தருமூத்தி மணியையென்
சிந்தைகுடி கொண்ட மணியைத்
திவ்யகுரு மணியா லிழைத்தசிங் காசனச்
சிகரத்தி னுசசி மணியைப்
பத்தர்கட் கெய்துரு டாமணியை நிறைபார்த்த
பரமார்த்த மான மணியைப்
பணிபூண்டு பார்க்கவடி யேனுமுமை நம்பினேன்
பீணிபூட்டி யாளு தற்கே

வைத்ததி பத்தினிக ருள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. 3
காரா றெனப்பே ருட்கடலி னிருண்டு
கவிகின்ற கருணை முகிலைக்
ககனவட் டப்பெரு வெளிக்குமப் பானின்று
காலூன்று கின்ற முகிலைத்
தாராத வருடந்த குருமௌன முகிலையென்
றுயிற் சிறந்த முகிலைச்
சண்டமா ருதமென்ன வருள்பொழியு முகிலைச்
சராசரங் கொண்ட முகிலைப்
பாராதி பஞ்சவன் னப்பகுதி யாகப்
பரந்துவரு டித்த முகிலைப்
பரவிவரு டிக்கவடி யேனுமுமை நம்பினேன்
பருவம்வந் தாளு தற்கே
வாரா நெறிக்கருணை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 4
தத்தியே கங்கறப் பெருகிவரு மானந்த
சமரசப் பெருவா ரியைச்
சார்ந்தன்ப ரிதயங் களிக்கவே பொங்கிவரு
சந்ததச் சுகவா ரியைச்
சுற்றிக் கவிந்துகொண் டெங்குமொரு மிக்கவே
சூழ்கருணை நிறைவா ரியைச்
சொற்பிரகா சந்தரு சுயஞ்சோதி யாய்நின்ற
சோமசுந் தரவா ரியை

எத்தனை விதங்கொண்டு சொல்லினுஞ் சொல்லொணு
விணியபூ ரணவா ரியை
ஏபபமிட ஆட்டவடி யேனுமுமை நம்பினே
னெட்டிவந் தாளு தற்கே
மத்திபக் தீபநடு வுள்ளநீர் பின்ருடா
வள்ளலி றசூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 5
அன்புப் பெருக்கைநல் லறிவுப் பெருக்கைமெய்ஞ்
ஞானுயிர் தப்பெ ருக்கை
அணையற்ற பேராசை வெள்ளப் பெருக்கையறி
வாகார வான்பெ ருக்கை
இன்பப் பெருக்கையருள் பொங்கும்பெ ருக்கைவெளி
யெங்கெங்கு மொளிபெ ருக்கை
ஏகப் பெருக்கையனு போகப் பெருக்கைநல்
லினியசெந் தேன்பெ ருக்கைத்
தென்புப் பெருக்கைவெகு டம்பப் பெருக்கைமா
திவ்யமது ரப்பெ ருக்கைச்
சேரப்புகட்டவடி யேனுமுமை நம்பினேன்
சித்தம்வைத் தாளு தற்கே
வன்புப் பெருக்கைவடி வுள்ளநீர் பின்ருடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 6
கண்டபொரு ளத்தனையு மாகிநின் றவைகளுங்
காணுத கார ணத்தைக்
கருதரிய சித்தாய் விசித்திரமாய் நின்றிலங்
காநின்ற கார ணத்தை

அண்டகோ டிகளையுந் தன்னுள்வைத் தணுவினுக்
கணுவான காரணத்தை
அறியாம லென்றெய்வ முன்றெய்வ மென்பார்க்கு
மவ்வகைக் காரணத்தை
யெண்டிசை விளக்கின்ற வித்தா யிருந்துமோ
ரிடமற்ற காரணத்தை
எய்திக் களிக்கவடி யேனுமுமை நம்பினே
னெதிர்காட்டி யாளுதற்கே
மண்டலமும் விண்டலமு முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 7
நிலையமுட னெங்கணுங் கோத்தநிலை குலையாது
நின்றதே சோமயத்தை
நெற்றிவிழி யூடுநிலை நின்றோ ருளந்தனி
னெளிதததே சோமயத்தை
தொலையா திலங்குதுரி யாதீத மானவத்
துவிதமே சோமயத்தைத்
தொடர்ந்து கடிந்தவர்க ளுந்திக்குள் வண்டாய்த்
துவண்டதே சோமயத்தைச்
சலியாத வயிராக்ய தீரனை யலுப்பறச்
சார்ந்ததே சோமயத்தைச்
சரமுனைற் கருளவடி யேனுமுமை நம்பினேன்
சலுதிவந் தாளுதற்கே
மலிகருணை மிக்கவலு வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிலைறகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 8

எல்லைநிலை சொல்லரிய வல்லமையோ டெங்கணு
மிருந்தஞா னோத யத்தை
எப்பொருளு மெப்பொழுது மெவ்விடமு மவ்வடி
விலங்குஞா னோத யத்தை
அல்லினும் பகலினு மன்பர்மன வில்லினி
லடைந்தஞா னோத யத்தை
அழியாப் பதிக்கு[illegible] குணங் குடியா
ரணைந்தஞா னோத யத்தைத்
தொல்லையறு நல்லறிஞர் சொல்லும்வழி செல்லின்வெளி
தோற்றுஞா னோத யத்தைத்
தொழுதெழாப் பாவியடி யேனுமுமை நம்பினேன்
றொண்டுகொண் டாளு தற்கே
வல்லபஞ் சொல்லவுந் துள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 9
தொலையாத வான்கருணை குடிகொண் டிருந்ததே
சோமயா நந்த குருவைச்
சொந்தமுட னென்றனையும் வந்தடிமை கொண்டே
சுகந்தந்த மௌன குருவை
நிலையாத மாயைநிலை குலையநிலைகுலையாத
நெறிதந்த ஞான குருவை
நித்தியா நந்தசுக முற்றுமகு மூதென்ற
நிட்டைநே ரிட்ட குருவைச்
சலியா தணைத்துமுத் தந்தா வெனைப்பெற்ற
தந்தையாய் வந்த குருவைத்
தழுவவறி யாதவடி யேனுமுமை நம்பினேன்
றயைபுரிந் தாளு தற்கே

மலைகள்பொடி படுநடையு முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைறகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

௸ பாடல் – 34.



பன்மையாய் விரிந்த பல்பொரு ளெலாமதன்
றன்மையா யிருந்த தகுதியை விளக்கும்
அருளொளி விளக்கினை யருள்கவென் ருசான்
றெருளொளி பதமலர் சிந்தைசெய் திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

எங்குமருள் விரிவாகி யங்கிங் கெனுதாகி
யென்றன்பி ரானு மாகி
எண்ணரிய வண்டபகி ரண்டங்க ளாகிநின்
றிகபர மிரண்டு மாகிப்
பொங்கிவழி கொண்டுபல் கடமெலாம் பெருகுபரி
பூரண னந்த மாகிப்
புனிதமெய்ஞ் ஞானவா னந்தமழை மாரியைப்
பொழிகருணை முகிலு மாகிக்
கங்குல்பக லில்லிரவி மதியாகி யெங்குமொரு
கங்கற்ற கங்கை யாகிக்
கலியுமொளி புரியவடி யேனுமுமை நம்பினேன்
கருணைவைத் தாளு தற்கே
மங்காத திங்களொளி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே.
வளருமரு ணிறைறகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.

ஊனாகி யூனிலுயி ராகியெவ் வுலகுமா
யொன்று மிரண்டு மாகி
உள்ளாகி வெளியாகி யொளியாகி யிருளாகி
யூருடன் பேரு மாகிக்
கானாகி மலையாகி வளைகடலு மாகிமலை
கானக விலங்கு மாகிக்
கங்குல்பக லாகிமதி யாகிரவி யாகிவெளி
கண்டபொரு ளெவையு மாகி
நானாகி நீயாகி யவனாகி யவளாகி
நாதமொடு பூத மாகி
நாடுமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னன்மைசெய் தாளு தற்கே
வானோரு மடிபணித லுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 2
அநதமுதன் முன்பினொடு பக்கநடு வாகிநின்
றவைகளற் றதுவு மாகி
அருவாகி யுருவாகி யருவுருவ மற்றவறி
வாகார மோன மாகித்
தந்தைதா யாகியரு டந்தகுரு வாகியென்
றன்னுயிர்க் குயிரு மாகித்
தாயிற் சிறந்தவந் நேயச் சிறப்பாய்ச்
சதானந்த ஞான மாகிச்
சிந்தைசெய வந்தநிற மாகியெனை யாட்கொண்ட
தேசிகன் றானு மாகித்
தெளியுமொளி புரியவடி யேனுமுமை நம்பினேன்
சித்திதந் தாளு தற்கே

வந்திருந் தருளுதயை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைறருணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தினே. 3
பாராகி யெப்பொருளு மாகியப் பார்தனிற்
பஞ்சவன் னவகளாகிப்
பற்பல விதங்கொண்ட விந்துநா தத்துட்
பதிந்துமுளை பருவமாகி
வேரோடி யோக பூமிக்குள் வளர்ந்தருள்
விளைக்கொழுகு தருவு மாகி
விண்ணாகி மண்ணாகி யெண்ணாகி யெழுவாகி
விரிவாகி மறைவு மாகி
தூராதி தூரதகி னுந்தூர மாகியதி
சூழ்சமிச் சமீப மாகித்
தோற்றுமொளி புரியவடி யேனுமுமை நம்பினேன்
றுரிதமுட னுளு தற்கே
வாராரு மருண்மாரி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைறகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தினே. 4
பார்த்ததிக் கெங்குமொரு வெளியாகி யென்பரா
பரப்பிரம வெளியு மாகிப்
பற்றுமன வெளியாகி மனவெளி கடந்தமுப்
பாழான வெளியு மாகிக்
கூர்த்தவறி வத்தனையு மேற்றபடி கொள்ளையே
கொண்டகடு வெளியு மாகிக்
கோடானு கோடிபல வண்டபகி ரண்டமுங்
கொண்டபெரு வெளியு மாகிச்

சேர்த்தநிலை குலையுண்டு போகாது நிலையுண்ட
சிற்சத்தி வெளியு மாகிச
செறியுமொளி புரியவடி யேனுமுமை நம்பினேன்
றெளிவுதந் தாளு தற்கே
வார்த்தைதப் பாதநா வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 5

நடையுடன் கிடையாகி நண்ணுமிரு வினையாகி
நடையடிக டாமு மாகி
நடுவே முளைத்தநீ நானென லு மாகிவரு
நாட்டங்க டாமு மாகித்
தடையாகி வைத்ததடை யறறவிடை யாகிநற்
றுணைக டாமு மாகித்
தலைமையொடு நிலைமையும வனுமைகளு மாகியெச
சங்கதைக டானு மாகி
இடையாகி நடுவாகி நன்மைதீ மையுமாகி
யேகமுத லெல்லவயு மாகி
இலகுமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னிதமுறைத தாளு தற்கே
மடமடென வடிநடன முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 6

மாயைமுத லாகியுயி ராகியற் புதமான
மன னுயிர்க் குயிரு மாகி
வளருமிரு வினையாகி வினைதனக் கீடாகி
வாழ்பா முடம்பு மாகித

ஞாயறிவு கலையாகி நிலையாகி நிலையாத
தொந்தவகை டாமு மாகித
துறவாகி மூவாசை யுறவாகி மறைவாகிச்
சோதிப்பிர காச மாகி
ஆயுமறை முடிவாகி யடியாகி நடுவாகி
ஆசசரிய கூத்து மாகி
ஆடுமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னனபுகூர்ந தாளு தற்கே
வாயூறு தேனின்மொழி யுள்ளநீர் யின்றொடர
வளளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித தினே. ௨
கண்ணான கண்ணேயெ னன்னமே யென்றழுவர்
கணடகண் காட்சி யாகிக
சவலைகுடி கொணடெதட் டழியார்க ணன்மனக்
கண்ணாட்டி தானு மாகி
மண்ணான வஞ்சநெஞ் சதினர்க் கேற்றாது
மறைவுதரு புதைய லாகி
மதபேத மோதிமதி கெட்டவர்க் கெட்டாத
வான்கருணை வெள்ள மாகி
எண்ணாத வெண்ணமெண் ணுரெடுத் துண்ணுமே
ரின்பப் பெருக்கு மாகி
எய்துமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னின்புதந தாளு தற்கே
வண்ணத் திருக்கருணை யுள்ளநீர் யின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தினே. ௩

வேதவே தாந்தமேல் வீடாகி நட்டநடு
வீட்டின் விளக்கு மாகி
வித்தக னிருக்குநவ மணிமாட மாகியொளி
விரிகதிர்ச் சுடரு மாகி
நாதகீ தம்பல முழக்கமிட் டோலமிடு
நாதநா தாந்த மாகி
நற்குணங் குடியா னெனப்பே ரெனக்கருளு
ஞான திரு நாம மாகி
ஆதிமுத லந்தமுந் தானாகி விரிவா
யகண்டிதா கார மாகி
அவிருமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னறிவுதந் தாளு தற்கே
மாதுாய பாதமல ருளனீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே மூகியித் தீனே. 9
கங்குல்பக லற்றவரு டங்குமெங் கெங்குநிறை
காரணக் கடவு ளாகிக்
கங்கறப் பொங்குகரு ணைக்கட லுமாகியென்
கரதலா மலக மாகி
சிங்கத்தை யொத்தவினை தன்னைச் செயங்கொண்ட
தேசிகன் றானு மாகித்
தேறுநீ ரக்குணங் குடிவாழ்க்கை யெற்குதவ
திவ்யகுண மேரு வாகி
எங்கே யிருக்கினு மங்குவந் துதவிதரு
மெங்கண்மரு வூது யாகி
இயையுமொளி புரியவடி யேனுமுமை நம்பினே
னெளிதில்வந் தாளு தற்கே.

மஙகள சவுந்தரிய முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 10

ஆக பாடல்-44.



அருள்கூர்ந்த காட்சி யாகிய வுண்மையும்
பொருள்கூர்ந்து காண்போன் வேறெனப் பொருந்தா
தொன்று முறைமை யோதுக விவ்விடை
யின்றாக வருள்கவென் றிரஙகி யிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

பாரீரோ வென்னையென் னன்னையே யென்முகம்
பார்த்தருள் பழுத்திடீரோ
பாவிகள னெஞ்சவஞ் சஞ்சிந்த வந்துமது
பாதத திழுத்திடீரோ
வாரீரோ வென்னெதிரில் வந்தெனக் கொருமுத்தம்
வாயகொண் டளித்திடீரோ
மகிழீரோ புகழீரோ கருணைகூர்ந் தென்னையாள
வாவென் றழைத்திடீரோ
சேரீரோ வென்னையுஞ் சேர்ந்தோர்க்கு மமுதருட்
டேறற் றெளித்திடீரோ
சிந்தைநொந் திடையுமடி யேனுமுமை நம்பினேன்
சித்தம்வைத் தாளுதற்கே
வாரோ மெனச்சொன்ன துள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 1

எங்கட் குடிக்கரச ரேயுமது பாதமெற்
செய்யாத தென்ன குறையோ
என்றெய்வ முன்றெய்வ மென்றகுறை யோவல்ல
திடசாப மான குறையோ
பங்குகூ றிட்டகுறை யோபாவி வாழ்மனது
பகதியில் லாத குறையோ
பந்லையிரு ளென்றகுறை யோவீண் படாநதறப்
படுநீல மான குறையோ
அங்குமிங் குஙகெட் டலைந்தகுறை யோதேடி
யலையா திருநத குறையோ
அறியாம லிடையுமடி யேனுமுமை நம்பினே
னணைவுதந் தாளு தற்கே
வஙகமா யன்பாழி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித நீனே. 2
கல்விலோ மண்ணிலோ விண்ணிலோ வடிவமையிரு
கண்ணிலோ கண்ணீ ரிலோ
கரையிலோ கடலிலோ வுடலிலோ வுயிரிலோ
கதியான பூமி தனிலோ
அல்லிலோ பகலிலோ நல்லபத வில்லிலோ
அறிவிலோ வுருமீ திலோ
அறிவிலோ வறிவொணு மறையிலோ மறைகண்முத
லாகம புராணத் திலோ
செல்வமிகு துரைராச ரேதேவ ரீர்க்குநிலை
திவ்விய குணஙகு டியிலோ
தெரியாம லிடையுமடி யேனுமுமை நம்பினேன்
சேர்நதணைந் தாளுதற்கே

மல்லிகை மலர்க்கந்த முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. ௩
ஓயாதோ வென்கவலை யுள்ளுருகி யானந்த
முள்ளுளே பாய்ந்தி டாதோ
ஒழியாதோ விழிமாயை யழியாதோ பாழாசை
யூழ்வினைக ளோய்ந்தி டாதோ
தீயாதோ வன்கருவி காயாதோ கரணங்க
டீவினைக டீர்ந்தி டாதோ
தேறாதோ பாழ்மன து சாராதோ பேரறிவு
திவ்யகுணம் வாய்ந்தி டாதோ
பேயாதோ வருண்மாரி வாயாதோ வான்கருணை
பேரின்ப நேர்ந்தி டாதோ
பெருகநின் றிடையுமடி யேனுமுமை நம்பினேன்
பிரியமுட னுளு தற்கே
வாயிற் சிறந்தமொழி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. ௪
நாடுமோ முதலிவழி கூடுமோ நெற்றிவிழி
நல்லறிவு பந்தா டுமோ
நற்குணங் குடிமீது வீடுதர வென்றனையு
நாதனரு ளுந்தே டுமோ
ஆடுமோ வட்டமா சித்தியும் புத்தியு
மாந்தவழி யைச்சா டுமோ
ஆரவா ரதனையும் போடுமோ சித்தமா
நந்தநட னம்மா டுமோ

மாடகூ டங்களெனு மனையாட்டி தருமாசை
மாட்டனென விட்டோ டுமோ
மனமுறிந் திடையுமடி யேனுமுமை நம்பினேன்
வந்தணைந் தாளு தற்கே
வாடா மலர்க்குநிக ருள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 5

ஆசாப சாசவலை யுள்ளகப் படுவனோ
வல்லது வெளிப்ப டுவனோ
அகிலவாழ் வென்றிடு மாற்றில்வீழ்ந் திடுவனோ
வப்புற நடந்தி டுவனோ
காசாசை கொண்டுகெதி கெட்டுநின் றிடுவனோ
கதியாசை கொண்டி டுவனோ
கரையற்ற கப்பலென் னக்கலங் கிடுவனோ
கரையேறி நின்றி டுவனோ
ஈசனடி செல்லா திருந்துசென் றிடுவனோ
வீசனடி சென்றி டுவனோ
ஏங்கிமிக விடையுமடி யேனுமுமை நம்பினே
னேக்கமற வாழு தற்கே
மாசிலா மணிமாலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. || 6

புதல்வரெனு முதலைகள் பிடித்துக் கடித்துப்
புசிக்கக் கொடுத்து ழல்வனோ
பொல்லாத காமக் கடற்புலா லென்னுமோர்
பூவைகைப் பட்டு ழல்வனோ

கதகதென் றெரியும் பணத்தீ மிதித்தெனது
கால்கொப்பு ளித்து ழல்வேனோ
கட்டுபட் டாடைகள் ளெனுநமன் கைவலைக்
கட்டுண்டு நின்று ழல்வனோ
சதசதென் றழுகுதுற் கந்தசாக் கடையான
சமுசார மதிலு ழல்வேனோ
தத்தளித் திடையுமடி யேனுமுமை நம்பினேன்
சற்றுவந் தாளு தற்கே
மதலைபோற் கொஞ்சுகுண முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுண ஙகுடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 7
வண்டாயப் பறநதெழுந திடுவேனோ சிற்றின்ப
வாரியில் விழுநதிடு வேனோ
மண்ணுன காமக் குரோதமுண டிடுவேனோ
மாயைதனை வென்றி டுவேனோ
பெண்டாசை யென்றபேய கொணடுசெத் திடுவேனோ
பேரின்ப முற்றிடு வேனோ
பிறற் றுருதகியிற் பிரியமுற் றிடுவேனோ
பிரியஙக ளற்றி டுவேனோ
நண்டளந் திநொழி யாவேனோ குறைவினிறை
நானுழி தானு வேனோ
நாளெலா மிடையுமடி யேனுமுமை நம்பினே
னன்மைகூர்ந தாளு தற்கே
மண்டுபே ரின்பவொளி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 8

எனைக மிருக்கநா னென்வசப் படுவேனோ
வென்னமோ சப் படுவேனோ
இரவுபக லற்றவனு பூதிதனி லுறைவேனோ
விதமகித மதிலு றைவேனோ
தன்னைமதி யாதுமதி கேடுகெட் டிடுவேனோ
தன்னையு மதித்தி டுவேனோ
தாராள மாகவரு ணேயமுண் டிடுவேனோ
தட்டுமருள் கொண்டிடுவேனோ
என்னதான் செய்வதினி யென்றுமேங் கிடுவேனோ
வேகாந்த மோங்கி டுவேனோ
இப்படிக் கிடையுமடி யேனுமுமை நம்பினே
னிஷ்டம்வைத் தாளு தற்கே
மன்னுதவ முத்திநிலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற ஞல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. ௯
கோலுமன் னரசர்கைக் கோலாவ ளேபாவி
குருடர்கைக் கோலா வனோ
கூலாயி லாகஇல் லல்லாகு வெனபனோ
குடிகெட்ட நிலையுண படுனோ
வேலையது வாய்முகம் மதுறசூ லென்பனோ
வேலையிது தானென் பனோ
வேதவே தாந்தமெய்ஞ் ஞானவீ டடைவேனோ
வெறுவெளியி னின்றி டுவேனோ
ஆலா விருக்ஷமென மேலாவ னேவுதி
ரதன்சருகு போலா வனோ
ஆறெலு மிடையுமடி யேனுமுமை நம்பினே
னதரித தாளு தற்கே

மாலார்க்கு வாலாய முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 10

ஆ பாடல் — 54.



ஒன்றுஞ் சமாதி யோகமிம் முறையா
மென றருள் பிரானே யிவற்றியல் பெல்லா
மெவற்றுனு மசையா திசையப் படுத்தித்
தவததனை யருள்கெனச் சரண்புகுந் திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

பாயுமீ ராறுகலை பாயாது பக்குவம்
பண்ணிவைப் பதுச மாதி
பழவினை யிறக்கவுஞ் சுழிமுனை திறக்கவும்
பழகிவரு வதுச மாதி
ஓயாத கருவிகர ணாதியோய்ந் தொழியவிழு
யொளிகொழிப் பதுச மாதி
ஒன்றிரண் டென்றுமன முற்றுமுள றுதலைவிட்
டொன்றுபடு வதுச மாதி
ஈயெறும் பாதிக டமக்குடல் குழைந்துமு
னின்புருகு வதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
வாயுவினு மதிவேக முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித தீனே. 1

நாவினுனி தனைமடித் தந்நாள மோட்டிநிலை
நாட்டிவைப் பதுச மாதி
நாலிரண் டெட்டுமெட் டெட்டாகி யழியுமுன்
னுலாகரு வதுச மாதி
ஓவியம் போலிருந் துள்ளுருகு நல்லமிர்த
மொழுகவுண் பதுச மாதி
உச்சிவெளி சென்றுமொளி கண்டுமிரு விழியையு
முட்குவிப் பதுச மாதி
ஏவலொடு விலகலெனு மிருவினையு மற்றசை
விலாதிருப் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளுதற்கே
மாவேக மனவேக முள்ளளீர் பின்றொடர
வள்ளவிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 2
இதயங் களித்துவரு வதையுங் கொளுத்திவெளி
யேறிவிடு வதுச மாதி
எட்டியெட் டாப்பொருளை யெட்டிப் பிடிக்கவடி
யெட்டிவைப் பதுச மாதி
பதியினதி பதியைவைத் ததிகதுதி யோதிப்
பதம்பணிகு வதுச மாதி
பரிபூர ணந்தனில் வருகார ணந்தனைப்
பார்த்துமகிழ் வதுச மாதி
எதுவந்து நேரினும் மாறினு மிரண்டுமொன்
றென்றிருப் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே

மதயானை போற்றீர முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 3

வோரற்ற சுத்தபரி பூரணப் பேரின்ப
வீடுபுகு வதுச மாதி
விரிகருணை தந்தகுரு நாதனடி யார்களொன
வேடமணி வதுச மாதி
போராடு மையற் குதக்கைக் கடந்தப்
புறத்தினிற் பதுச மாதி
புகன்றமறைப் பொருளைமற வாக்கட னமக்கென்று
புந்திமகிழ் வதுச மாதி
ஈராறு கால்களையு மெட்டுக் கயிற்று
லிறுக்கியறி வதுச மாதி
என்றருள் பிரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மார்பணியு முத்தார முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 4

சாதிபே தத்தையும் மாதர்போ கத்தையுந்
தள்ளிநிற் பதுச மாதி
சந்ததமு மொளிருமருண் ஞானவரு டேசிகன்
றன்னையறி வதுச மாதி
தீதிலருள் கொண்டதே சோமயத் துண்மனஞ்
சேர்ந்திருப் பதுச மாதி
செத்தசவ மதுபோல விருந்துசெப தபமுஞ்
செயத்தனிப் பதுச மாதி

ஏதும்ஞ் வானகுரு நாதனிரு பாதமதி
ல[illegible]வைப் பதுசமாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மாதவர்க ளுக்குதவி யுள்ளநீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தினே. 5

கிதியாசை யற்றுதுற வதியாசை யுற்றுநன்
னிட்டைபுரி வதுசமாதி
நிலையாது காயமென் றெணணமொன் றென்றென்று
நிசசயிப் பதுசமாதி
வதியுஞ்சவ் வாதுசந் தனமுமொன் றென்றுமனம
வைததுநிகழ் வதுசமாதி
வாராது வாராது வருவனவும் வருமென்று
வாட்டமொழி வதுசமாதி
இதமகித மற்றமதி பெற்றிதய முத்திநிலை
யேற்றுகிற் பதுசமாதி
என்றருள் பிரானே யடியேனு முமைநம்பினே
னிதுவேளை யாளு தற்கே
மதுரவின் பப்பெருக் குள்ள நீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித தினே.

எல்லையு மறநதுபல தொல்லையு மிறநததோ
ரிடத்திருப் பதுசமாதி
எனதியா னென்பதையிடமபொருளோ டேவன்முத
லீடழிப் பதுசமாதி

அல்லுபக லாகவெல் லும்மளவு நல்லறிஞ
ரடிபணிகு வதுச மாதி
ஆகமத் தின்படிச் சாதிக்க முதலெலவையு
மற்றிருப் பதுச மாதி
இல்லாரு மைநதருஞ் சுற்றமுஞ் சுற்றமர
யிலலெயென பதுச மாதி
என்றருள்பி ராளேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாரு தற்கே
மல்லாடி லுமபொறுமை யுள்ளநீர் பின்ரூடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 7
சலனசஞ் சலமது தொலேத்தருண் மலேப்புடையில்
சார்நதிருப் பதுச மாதி
சர்வபரி பூரண வகண்டிதா காரமே
சாட்சியென் பதுச மாதி
நிலேயம்விட் டலேயாது நீவாத தீபமென
நிலேயினிற் பதுச மாதி
நெற்றிவிழி ரண்டையு மொத்துநடு கொண்டொளியி
னேறில்லைப் பதுச மாதி
இலகுஞ் சதாகால நிட்டைபல் குந்துறவி
லெயதினிற் பதுச மாதி
என்றருள்பி ராளேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாரு தற்கே
மலேபோற் பெரும்பெருமை யுள்ளநீர் பின்ரூடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 8

ஆரிருந் தென்னவார் போயென்ன வென்றுமன
மற்றிருப் பதுச மாதி
ஆராலு மறியாத சூதான வெளிசென்
றடைந்துபோ வதுச மாதி
வீரசூ ரங்கள்முத லதிகப்பிர சங்கமு
மெலியமெலி வதுச மாதி
வேதவே தாந்தமும் விட்டுநா தாந்தநடு
வீடுசெல் வதுச மாதி
ஏருறு மயிர்ப்பால மேறுமன மேயேறு
மேறுமென் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
வாரிபோல் வான்கருணை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிர சூலவ ருகவே
வளருமரு ணிறைறகுண ஙகுடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 9
ஆழியென வருள்பொஙகு மாசையுற் றழுதழு
தகங்களிப் பதுச மாதி
அதிசுகம பெருவாரி யமிர்தமுண் டுண்டுதகை
யாறிநிற் பதுச மாதி
பாழிநிலை யற்றுமுப் பாழினிலை பெற்றுப்
பதைப்பொழிப் பதுச மாதி
பல்கோடி யண்டபகி ரண்டமுந தன்னுளே
பார்த்திருப் பதுச மாதி
எழுபுவ னத்தையுஞ் சுற்றியுஞ் சுற்று
திருப்பிப் பதுச மாதி
என்றருள்பி ரானேயடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே

வாழிமகு மூதினரு ளுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைறகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித தீனே. 10

ஆக பாடல்-61.

---

காந்தமு மயமுங் கலந்தெனக் கலந்து
மாய்ந்த வுளத்தை மாயா தாகப்
போந்திடை முளைக்கும புதுமைக ளெல்லாந
தேயந்தற வருள்கெனச சிந்தித திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

குவலயக் கவலைதரு மிமெடையர் கைகளைக்
கோத்துத திரிந்த வம்பன்
கோடியுங்கேட்டையுஞ்சேட்டையுங்கூட்டியொரு
கோட்டையாயக் கட்டு வம்பன்
தவிராத காயகற் பங்கொள்கி றேனினிச
சாவலோ வென்ற வம்பன்
சந்யாச மென்றபொய் வேடந் தரித்தவர்க
டம்மைநிகர் சொன்ன வம்பன்
செபமாலை கைக்கொண்டுவாய்முணு முணுத்துமுப
தேசிநா னென்ற வம்பன்
தீதெலாந் தீரவடி யேனுமுமை நம்பினேன்
தீரவந் தாளுதற்கே
மவுனமெனு மோனவடி வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைறகுணங் குடிவாழு மெனனிருகண
மணியே முகியித் தீனே. 1

நெறியற்ற வம்பனல் லறிவற்ற வம்பனெதிர்
நிகரற்ற கொடிய வம்பன்
நிறையற்ற வம்பன்வரன் முறையற்ற வம்பன்வன்
னெஞ்சனஞ் சாத வம்பன்
குறியற்ற வம்பனொரு சரியற்ற வம்பன்
குணக்கேட னான வம்பன்
கொடியரிற் சகசண்டி யானவம் பன்கெட்ட
கொலைபாவி யான வம்பன்
உறவற்ற வமபன்மிகு வெறிபெற்ற வம்பனே
ரூக்குமா காத வம்பன்
உமதுபத மதியவடி யேனுமுமை நம்பினே
னுளமகிழ்ந் தாளு தற்கே
மறுகவலை யுறினுமுற வுள்ளநேர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 2

கல்லாத வம்பனறி வில்லாத வம்பனொரு
காசும் பெறாத வம்பன்
கடுவாயி னுங்கொடிய வம்பன் வெருட்டிக்
கடிக்குநா யான வம்பன்
பொல்லாத வம்பனுற வில்லாத வம்பன்
பொறாமையே கொண்ட வம்பன்
புன்மைகுடி கொண்டகெச போக்கிரிகள் சறுதாறு
போலுமுன் னேறு வம்பன்
மல்லாடு வம்பனதை பல்லாடு வம்பனிடு
மடையர்நடை யுடைய வமபன
வம்பெலா மகலவடி யேனுமுமை நம்பினேன்
மரபுதந் தாளு தற்கே

வல்லாண் மை யில்லாமை யுள்ளகீர் பின்ஞெடா
வளளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுண்க குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித நீனே. 3
அதிகப்பிர சங்கமே குடிகொண்ட வம்பனன்
பணுவுமில் லாத வமபன்
அச்சமில் லாதவம் பன்றிட்டு கிட்டூரே
வகியாய கார வமபன
கெதிகெட் டுருட்டுவம பன்றிருட் டெருமைக்
கிடாவினு முரட்டு வமபன
கெண்டர்கரு வண்டர்கரு மிணடவம்பன் சண்டைக்
கெககரிக் கொட்டு வமபன்
விதிகெட்ட வமபனிலே பதிவிட் டலைநததலே
விரிகோல மான வமபன்
விடமெலா மொழியவடி யேனுமுமை நம்பினேன
விரைவில்வந தாளு தறகே
வதலாள் விடாமலென யுள்ளகீர் பின்ஞெட
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் நீனே. 4
சதியா யிரஞ்செய்த வம்பனல் லிதமகித
சகசமறி யாத வம்பன்
றந்தைதாய் தன்மனைத நோவித்த வம்பன்
றராதரங் கெட்ட வம்பன்
பதினுயி ரநதரஞ் சொல்லினுஞ் செவியுட்
படாதபிடி வாத வம்பன்
பாரவான் முதலான பேருமென் பேரையும்
பகரப யந்த வம்பன்

நிதிதேடு சீவச் சலங்கள் பட்சங்களே
நேசித்த தோஷி வம்பன
நெரடெலாம் வெருளவடி யேனுமுமை நம்பினே
னேயம்வைத் தாளு தற்கே
மதிதனிலு மதிகவொளி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 5
எண்சாணுடம்புமொரு போதுமழி யாதென்ற
வெண்ணமொழி யாத வம்பன்
ஏதுவந் தாலுமோ ரணுவிற்கு நிகரென்
றிடும்பைகள் பேசு வம்பன்
கண்சாடை கண்டுவில காதவம பன்காசு
காசுகா சென்ற வம்பன்
கல்லுமொரு போதேனு முருகுமுரு காக்கருங
கன்னெஞ்ச னன வமபன
பெண்சாதி பெண்சாதி பெண்சாதி யென்றே
பிதற்றுபேய் கொண்ட வமபன்
பேயாட் டொழிக்கவடி யேனுமுமை நம்பினேன்
பிரியமுட னாளு தற்கே
வண்சீரு மெண்சீரு முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 6
அஞ்சாத வத்தொழி றனைப்புரியும் வம்பன்மா
வதிகாரி யான வம்பன்
ஆதரிக் காநின்ற பேர்களைத் தானே
யடுத்துக் கெடுத்த வம்பன்

பஞ்சமா பாதகம் முதலான தீதகம்
பயமறச செய்த வம்பன்
பட்சம்வைத தோர்தமக் கிச்சைமிக வோதிப்
பணம்பறிக் கின்ற வம்பன்
நஞ்செலா மொன்ருயத் திரண்டுரு வெடுத்தகெடு
நாசச் சரீர வமபன்
நாயினுங் கொடியவடி யேனுமுமை நம்பினே
னுட்டம்வைத் தாளு தற்கே
வஞ்சநம னுக்குநஞ் சுள்ளநீர் தற்கே
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித தீனே. 7
தையலர்க ளாசையெனு மையலில் விடாயகொண்டு
தாகித் தலைந்த வம்பன்
சாகா வரம்பெற்ற தேகத்த னென்று
தலைகெட்டு நின்ற வமபன்
மெயயாக வையகத் தாரெனக் கேடென்று
வீண்மதம் பேசு வம்பன்
வெறிகொண்ட நாயபோ லும் வள்ளுவள் ளென்றியா
மேலும்விழு கின்ற வம்பன்
செய்யாத செய்கையே செய்தவம் பன்பொய்த்த
சிற்றின்ப முற்ற வம்பன்
தீயும் பயந்தவடி யேனுமுமை நம்பினேன்
சித்தம்வைத் தாளு தற்கே
வையமுழு தூக்குமணை வுள்ளநீ ழின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 8

கேடெலாங் கூடித் திரண்டுருக் கொண்டுகுடி
    கேடெ லெடுத்த வம்பன்
கேட்டபேர் கண்டபேர் காதுகண் ணேடுவெடுக்
    கின் றவடி யுண்ட வம்பன்
நாடெலா மிவனையு நாடலா மோவென் று
    நகையாட லுண்ட வம்பன்
நாடோறு மாடுபோ லோடியோ டித்தின் று
    நாவுருசி கண்ட வம்பன்
மேடுமுட் டத்தூருத் திக்குட் பருக்கைமிக
    வெட்டியே வீசு வம்பன்
மெத்தவம் புற்றதடி யேனுமுமை நம்பினேன்
    மேன்மைதந் தாளு தற்கே
மாடம்ப ஜம்பநடை யுள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் தீனே. 9
தாயாதி முதலன்னை சுற்றங்க டம்மையுஞ்
    சாரா தடித்த வம்பன்
தானதரு மங்களுக் கீனதரு மங்களே
    சாட்டிக் கொடுத்த வம்பன்
பேயாய்ப் பிடித்துவெறி நாயாய்க் கடித்தும்
    பிடாரிபோ லலையும் வம்பன்
பீருநா னென்னுமுப தேசங்கள் கூறிவிலை
    பேசித் திரிந்த வம்பன்
தூயமரு மூதுநபி பாதமல ரைச்சென்னி
    சூட்டறிவின் மோட்டு வம்பன்
துறவெய்த லெய்தவடி யேனுமுமை நம்பினேன்
    சொன்னபடி யாளு தற்கே

மாயோக சித்திநெறி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 10

ஆக பாடல்-74.

---

பொருளிற்கு வேறாப் போந்தநா னென்னு
மருளேயு ளதனை மறைக்கும் பவத்தி
னியங்கா துலவா தெங்குநில் லாது
வயங்கா தகற்றுக வள்ளலென் றிரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

வேதாந்த சாரமே சாரமென் றறியாது
வீணா டொலைத்த பாவி
மேன்மேலு மெய்ஞ்ஞான வின்பமணு காதபாழ்
மெய்யைமெய் யென்ற பாவி
சோதிப்பிர காசச சுயஞ்சோதி யணுகத்
தொழுந்துறைக ளற்ற பாவி
சுகநிட்டை பாராத விழியெனு முகத்திலிரு
தொள்ளையொ டிருந்த பாவி
கோதிலும தடிபணிகி லாதசிர சென்றகற்
குன்றைச சுமந்த பாவி
கொடியமா பாவியடி யேனுமுமை நம்பினேன்
குடியிருந் தாளு தற்கே
மாதவ வபேதநிலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 1

மட்டிகளி னுங்கெட்ட சுட்டிவால் வெட்டிபேய்
மட்டைரட் டித்த பாவி
வஞ்சகம னுக்குவா ரிக்கொடுத் திடவுடலே
வளமாய் வளர்த்த பாவி
சட்டிவைத் துச்சட்டி வாங்கும் பெருந்தொப்பை
சற்றும்வடி யாத பாவி
சண்டாள ருக்குமா சண்டாள ருக்குமா
சண்டாள ஞன பாவி
பொட்டையிபி லீசுகைக் குட்பட்ட பாவியொரு
போக்குநீக் கற்ற பாவி
போகாத பாவியடி யேனுமுமை நம்பினேன்
பொய்ம்மைதீர்த் தாளு தற்கே
வட்டமதி வெட்குமுக முள்ளநீர் பின்ருேடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. 2
நாசச்சரீரத்தை நாளு னெனக்குளறு
நாசம் பிடித்த பாவி
நாளு விதங்கட்கு மேலாண பாவியா
னற்றவமு மற்ற பாவி
கூசாத பாவியாய் பேசாத பாவிமா
கோபம் படைத்த பாவி
கொலைபாவி கொலைபாவி கொலைபாவி கோடானு
கோடிகொலை செய்த பாவி
வேசியர்க ளாசைவினை யகலாத பாவிதீ
வினையுமக லாத பாவி
வீணை பாவியடி யேனுமுமை நம்பினேன்
மெய்ம்மைதா தாளு தற்கே

வாசாம கோசரத் துள்ளகீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 3

பிரியாத பேரின்ப வனுபூதி யாலைச்
பிறப்புமறி யாத பாவி
பிரபஞ்ச வுறவைநெஞ் சம்மஞ்சி னோர்கடம்
பின்சென்றி டாத பாவி
அருமையா யறிகுறிக ளத்தனையு மெத்திநல்
லறிகுறிக ளற்ற பாவி
அந்தகா ரத்தையே புநதியுட் கொண்டுவெறு
மஞ்ஞானி யான பாவி
நரசென்ம மாகியு நரர்க்குணங் கனவிலு
நாடியறி யாத பாவி
கலமற்ற பாவியடி யேனுமுமை நம்பினே
னன்புதந தாளு தறகே
வருகவலை யேகவழி யுள்ளகீர் பின்றொடர
வளளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 4

தேகாதி யகிலப்பிர பஞ்சமது பொய்யென்று
தேர்ந்தறி விலாத பாவி
தீபாவி தீபாவி தீபாவி தீபாவி
திவ்வியகுண மற்ற பாவி
மாகவலை குடிகொண்ட பாவிவம் பாகவே
வாதாடு கின்ற பாவி
மாயப் பசாசுகொண் டலைபாவி யீனக
வாழ்நா ளழித்த பாவி

ஆகாத பாவியா ளாகாத பாவியா
ளார்க்குமா காத பாவி
அளவற்ற பாவியடி யேனுமுமை நம்பினே
னண்டணைத் தாளு தற்கே
வாகுவழி யேகவொளி யுள்ளசீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைறகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 5
மெய்யான பொய்யுடலை மெய்யென்று மெய்யான
மெய்யறிவு கெட்டபாவி
மெய்யான மெய்யேது மறியாத பொய்யான
மெய்யைப் படைத்த பாவி
பொய்யான தையலரை யையோ வணைக்கசுக
போகமோ கித்த பாவி
பொய்யான புலையான கொலையான மலையான
பொய்த்தமொழி கற்ற பாவி
வையாத வையாசை யானதீ யானமா
மாயைகுடி கொண்ட பாவி
மாகொடும் பாவியடி யேனுமுமை நம்பினேன்
வந்திருந் தாளு தற்கே
வையவிழி மையவொளி யுள்ளசீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைறகுணங் குடிவாழு மென்னிருக
மணியே முகியித் தீனே. 6
பசுபாச வாசவினை யென்றவெறி கொண்டலை
பசாசாடு கின்ற பாவி
பால்பழங் கற்கண்டு சர்க்கரைகண் டொக்கியும்
பட்டமர மான பாவி

விசனமொடு துக்கமே குடிகொண்ட பாவிபொய்
வேடந் தரித்த பாவி
வித்தகன் றிருவடி தனைத்தொழுது தொழுதழுது
மெய்யரு ளுருத பாவி
நிசமாக வசைபேசு வார்கள்வாய் தன்னிலே
நிதமா யிருந்த பாவி
நிலையற்ற பாவியடி யேனுமுமை நம்பினே
னேயம்வைத் தாளு தற்கே
வசியமன வாசிவச முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைநகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 7

இதமகித மென்றவினை யுங்கொண் டலைந்துசிற்
றின்பவேம் புண்ட பாவி
எணசா ணுடம்புமவெறு நஞ்சான பாவியோ
ரின்பமணை யாத பாவி
பதமற்ற பாவிபக் கீறுதறு தலைமொட்டை
பரதேசி யான பாவி
பாவிப் பிணங்களைப் பாடித் துதித்துப்
பணம்பறிக் கின்ற பாவி
சதிகெடும் பாழாக்கு மதிகொடும் பாவிபொய்ச்
சத்தியஞ் செயத பாவி
சர்ப்பநிகர் பாவியடி யேனுமுமை நம்பினேன்
சாரிவந் தாளு தற்கே
மதினமுத லும்வாச முள்ளநீர் பின்றொடர
வளளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைநகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 8

கைக்குள்வெண் ணெயைவைத்து நெய்க்கழுத பாவிகலை
　　கற்றுமறி வற்ற பாவி
கற்பக விருக்ஷத்தி னடியிலே காஞ்சிரங்
　　காய்தேடி நின்ற பாவி
கொக்குப் பிடிக்கநாய்க் குத்தெரியு மோவென்ற
　　கொள்கைகுடி கொண்ட பாவி
குருடர்களி யானையைக் கண்டகதை போலசற்
　　குருவையறி யாத பாவி
சர்க்கரை கரும்புகற் கண்டமு திருக்கக்
　　கசங்குடிக் கின்ற பாவி
தலைகெட்ட பாவியடி யேனுமுமை நம்பினேன்
　　றயையைவைத் தாளு தற்கே
மக்கநக ருக்குமண முள்ளநீர் பின்றொடர
　　வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
　　மணியே முகியித் தீனே. 9
குரைஷிக் குலக்கொழுந் தானமகு மூதுநபி
　　கொள்கையறி யாத பாவி
கொறடாத் தனைக்கொண்டு மாட்டினு மறிஞர்பின்
　　கூடிநட வாத பாவி
அரிசிவிலை யுலையறியு மோவென்ற கதைபோல
　　வகலிற் படைத்த பாவி
ஆருக்கு வைத்தகூ ழாயினுஞ் சரிகாணி
　　லள்ளியடை கின்ற பாவி
விரிதருந் தொப்பையை விருப்பொடு வளர்க்கமேன்
　　மேலுமலை கின்ற பாவி
விதியற்ற பாவியடி யேனுமுமை நம்பினேன்
　　வேளையீ தாளு தற்கே

வரிசைநபி வரிசைமிக வுள்ளகீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 10

ஆக பாடல்-84.



இதற்குமுன் சொன்ன விடையூ றிரண்டினாற்
பதைப்பற் றிராத பாவியுள் ளதனினுக்
கென்செய்வ னெனென் றிடைந்திடைந் தழுவதை
யின்செய்கை யாலொழித் திடுகவென் றிரத்தல்.

ஆசிரியவிருத்தம்.

கனமாயை வினையென்ற சனியன் பிடித்துக்
கலங்கித் தவித்த ழுவனே
காலூன்றி மழைபொழிய வுங்கருணை முகிலினங்
கவியவிலை யென் றழுவனே
அனியாய மனியாய மனியாய மென்கொடுமை
யனியாய மென்ற ழுவனே
ஆனாலு மென்போலு மொருபாவி யகிலமதி
லாருளா ரென்ற ழுவனே
இனியாள்வ ரெவரைய னேயைய னேயென்ன
வேங்கித் துடித்த ழுவனே
இக்கென்ன செய்வனடி யேனுமுமை நம்பினே
னிஷ்டம்வைத் தாளு தற்கே
மனமாயை யற்றமன முள்ளகீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 1

தந்தைதாய் முதலான பந்தங்களென்றனைச்
சதிசெய்த தற்க ழுவனே
சாதிவரை தள்ளியே சஞ்சரிக் காமெய்த்
தவக்குரை தனக்க ழுவனே
புந்திமகி ழுண்டுண் டுடுத்துசிற் றின்பவனு
போகந் தனக்க ழுவனே
புனிதஞா னோதயம் பெருவெள்ள மென்றுதான்
பொங்குமோ வென்ற ழுவனே
எந்தவித மாயினு மிணங்கவில்லை யென்மன
மிணங்கவில்லை யென்ற ழுவனே
என்செய்வ னேழையடி யேனுமுமை நம்பினே
னிதுவேளை யாளு தற்கே
வந்துகுதி கொள்ளுநடை யுள்ளநீர் பின்றொடரா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுண ஙகுடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
மாயாத வோயாவி காரதிறை லெனது
மனதுநொந் தேய ழுவனே
வஞ்சப்பிர பஞ்சததை நெஞ்சத் திருத்தியே
மதிகெட்டு நின்ற ழுவனே
தீயனிவ னென்றேசு கின்றவர் நகைக்கின்ற
தீவினை தனக்க ழுவனே
சீநாயே வோடேன் றடித்துத் துரத்துஞ்
சிரிப்பினைப் பட்ட ழுவனே
நாயினுங் கடைகெட்ட நாயினுங் கடைகெட்ட
நாய்போல லைந்த ழுவனே
நானென்ன செய்வனடி யேனுமுமை நம்பினே
னன்மைகூர்ந் தாளு தற்கே

வாயாத மாயைசா வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித நீனே. 3
பாசக கயிற்றுவலை வீசிப் பிடிக்கின்ற
பாவையர்க் கேய ழுவனே
பத்தியோடு தகமைதாய் தந்துமோ சஞ்செய்த
பல்வினை தனக்க ழுவனே
ஆசைப் பெருக்கைப் பெருக்கப் பெருக்கழும்
பாளருக கேய ழுவனே
அம்மம்ம வென்சொல்லு கேனகில வாழ்வென்னு
மக்கினிகள் சுட்ட ழுவனே
பீசேறு பீறற் றுருத்திசத மென்றதைப்
பேணுதற் கேய ழுவனே
பேயனென் செய்வனடி யேனுமுமை நம்பினேன்
பிழைபொறுத் தாளு தற்கே
மாசிலுப தேசநிலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணக் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் நீனே. 4
எமனைப் பழித்தமட வாரல்கு லென்றபா
ழிடிகிணறு வீழ்ந்த ழுவனே
இருகொங்கை யென்றதேள் கொட்டிமண்டைக்கேறி
யெரியுதே யென்ற ழுவனே
நிமையா விழிக்கணை தொடுத்துத் துளைக்கவென்
னெஞ்சந் துடித்த ழுவனே
நெகிழுங் குழன்மயிர்க் கண்ணியிற் சிக்கியதை
நீக்கமுடி யாத ழுவனே

தமியனு னென்செய்வ னென்செய்வ னென்றுபிர
லாபித்து நின்றழுவனோ
தந்தையே சொந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளுதற்கே
மமதையில்லாச்சுகுண முள்ளதீர்பின்றொடர
வள்ளலிற சூல்வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. 5
ஆநந்த மானபர மானந்த மாகா
தவத்தையை நினைந்தழுவனோ
அகிலமுத லானபா ழாசைமா லாதவனி
யாயந்தனக்கழுவனோ
ஈனப் பெருங்காய மென்னதென் பதிலரு
வேக்கந் தனைக் கழுவனோ
எனதாவி யுட்பொருளை வந்துகைக கொள்வதினி
யென்றெண்ணி நின்றழுவனோ
கானலை நிகர்த்தமெய மெய்யென்ற பொயதனைக்
கருதுவெறி கொண்டழுவனோ
கன்மியென செய்வனடி யேனுமுமை நமபினேன்
கரையேற்றி யாளுதற்கே
வானுறு பூதமதி லுள்ளதீர் பின்றொடர
வள்ளலிற சூல்வருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண
மணியே முகியித்தீனே. 6
கட்டிப் பிடிக்கினுங் கைக்கடங் காமனங்
கவிவதிலை யென்றழுவனோ
கருவிகர ணம்பாய்கு வதுகண்டு கண்கலக்
கங்கொண்டு நின்றழுவனோ

வெட்டவெளி தன்னிலே விட்டகங் காரமெனை
மேலிட்ட தற்க ழுவனே
மெய்யாகி நானென னு நானு னெனக்குளறும்
வெட்கந் தனக்க ழுவனே
எட்டிரண் டறியாத மூடனு யிருவினைக்
கீடாகி நின்ற ழுவனே
என்ன தான் செயவனடி யேனுமுமை நம்பினே
னிஷ்டம்வைத தாளு தறகே
மட்டுறு நிஷ்டைநடு வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித நீனே. 7
நீராழ மாகவென் னெஞ்சுருகி நன்னிலையி
னிற்கவிலை யென்றழுவனே
நிஷ்டைக்கு மெட்டாத பேரொளி தியானிததி
னேர்படவி லென்ற ழுவனே
காராவ நந்தகைகள் போலருள்க விநதிடக்
காண்கிலே னென்ற ழுவனே
கடவுளைத் தேடியிரு கண்ணீர் ததும்பிக்
கரஞ்சென்னி வைதத ழுவனே
மாரிபோற் பேரின்ப மழைபொழிய விலையென்று
வாய்விட் டிறைந்த ழுவனே
[illegible]நந் திடைந்தவடி யேனுமுமை நம்பினேன்
வாழ்வுதந் தாளு தற்கே
வாராதி ராதவர முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் நீனே. 8

கட்டழகி தன்னையென் கண்ணிலுங் காண்கிலேன்
காண்கிலே னென்ற ழுவனே
கண்மாரி விண்மாரி போற்பொழிய வழுவனே
கைதலையில வைத்த ழுவனே
கொட்டாவி விட்டுவிட் டேகிமேங் கிக்கொண்டு
குந்தியுட் கார்ந்த ழுவனே
குட்டிச் சுவர்க்களிற் போயிருந் தையையோ
கோவென் றிறைந்த ழுவனே
எட்டாத கொம்பினி லிருக்கின்ற தேனே
யிறங்கிடா யென்ற ழுவனே
ஏதென் றுசொல்வனடி யேனுமுமை நம்பினே
னிசசையுட னுரு தற்கே
வட்டமிடு முகில்கவிகை யுள்ளநீர் பின்றொடர
வள்ள லிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித நீனே. 9
என்னசெய் யப்போ கிறேனென்று பாவிநா
னிரவுபக லாய ழுவனே
ஏமசா மம்மென் றி லாதுதேம் பித்தேம்பி
யெரிமூச் செறிந்த ழுவனே
கன்னலமு தேசீனி கற்கண்டு சர்க்கரைக்
கட்டியே யென்ற ழுவனே
கண்ணூட்டி யானவென் கண்மணியை யென்றுதான்
காண்பனோ வென்ற ழுவனே
நன்னேய ராயமகு மூதுபத நம்பியு
நாளுமிக நொந்த ழுவனே
நைந்தழுது நொந்தவடி யேனுமுமை நம்பினே
னன்புகொண் டாளு தற்கே

மன்னுமதி தனினுமொளி யுள்ளீர் பின்றோடா
வள்ளலி றசூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 10

ஆக பாடல் — 94.



இறந்தொழி தற்கே யியங்கிய துணைமையின்
மறைந்தொழி யாது மாறா யிருப்ப
தொன்றுவ தென்றோ வொன்றன் றும
னின்றிடற் கருள்செய நின்றழு திரத்தல்.

ஆசிரியவிருத்தம்.

ஞானகுரு நாதனற் பதமிதந் தொழுதழுது
நாவேவது மெக்கா லமோ
நான்மறை தனக்குமெட் டாதநா லாம்படியி
னேனேற லெக்கா லமோ
ஊனேறு டிருந்தவுற வற்றுமுற வுற்றுவீ
டேட்புகுவ தெக்கா லமோ
ஒப்புவமை செப்பரிய கர்ப்பூர தீபமென
வொன்றுவ தெக்கா லமோ
தானே யெனைப்பெற்ற மானே வருந்தியரு
டருவதினி யெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுழமை நம்பினேன்
சமயமீ தாகுந் தற்கே
வானமெல் லாமகிமை யுள்ளீர் பின்றோடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 1

வேடிக்கை யும்பகட் டும்பிலுக் கும்சொகுசும்
விட்டொழிவ தெக்கா லமோ
வீணிரக் கங்களு மூனுறக் கங்களும்
வேரறுவ தெக்கா லமோ
தாடிமீ சைகணரை தந்தவ மிலாருறவு
சையென்ப தெக்கா லமோ
சண்டைகின் றிடுவதும் மண்டைபீண் டுடைவதும்
சள்ளென்ப தெக்கா லமோ
சாடாது சமநிலையி னின்றுசம ரசமீது
சாடீர்வ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே
வாடிக்கை யாய்ககருணை யுள்ளநீர் பின்றேடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண
மணியே முகியித் தீனே. 2
சொல்லரிய சுகவாரி யமிழ்துண் டொடுங்கித்
துடிப்பொழிவ தெக்கா லமோ
சுநதரச சோதிமணி மாலையணி மார்பனை த
தொழுவதினி யெக்கா லமோ
நல்லநட னம்புரிந தாடுகரு ணைகர
னடம்புரிவ தெக்கா லமோ
நாடிவலு வாகப் பிடித்திழுத் தென்றனை யு
நடியென்ப தெக்கா லமோ
சல்லிக் குணங்கெட்ட புல்லர்களை விட்டுத்
தனிப்பதினி யெக்கா லமோ
சாவப் பிறநதவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே

கல்லிருளை வெல்லுமொளி யுள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித நீனே. 3
நயமே யுறைந்தறிவின் மயமே நிறைந்தபொரு
    ளுணைவ தெக்கா லமோ
நல்லறிஞர் பின்சாடி யில்லுறவு பிஞ்சோட
    நாள்வருவ தெக்கா லமோ
பயமே குறைந்தவிரு தயமே செறிந்தவினை
    பாழாவ தெக்கா லமோ
பாடைதனி லேறுமு னெளித்தோடி யோடியுட்
    பதிபுகுவ தெக்கா லமோ
தயவுதந தெனையாண்ட தேவரீர் பாதமலர்
    தனையணைவ தெக்கா லமோ
சாவப் பிறாதவடி யேனுமுமை நம்பினேன்
    சமயமீ தாளு தற்கே
மயிலாடல் போனடன முள்ளநீர் பின்றொடர
    வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுண குடிவாழு மென்னிருகண்
    மணியே முகியித் நீனே. 4
ஈனந தரும்புகழ்க் கூடான தேகவுற
    வேகுவது மெக்கா லமோ
இன்றுளோர் நாளைக் கிருப்பதும் பொய்யென்ப
    தெய்துவது மெக்கா லமோ
யானையொட்டகமேறு முடலும்லொட லொட்டையென்
    றறிவதினி யெக்கா லமோ
ஆநந்த மானபொரு ளாநந்த மாயடிமை
    யாவதினி யெக்கா லமோ

தாளுனே தாளுனே தாளுனே யென்றுநான்
றுளுவ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்க
வானினுங் கருணைவா னுள்ளநீர் பின்றொட்ர
வள்ளலிற குல்வ ருகவே
வளருமரு ணிறைகுண ங குடிவாழுமென்னிருகண்
மணியே முகியித நீனே. 5
கடன்மடை திறநதெனு வருண்மடை திறந்தடிமை
கண்குளிர்வ தெக்கா லமோ
கலகற்ற பேரின்ப வெள்ளததின் மூழ்கிமெய்ன்
கலிதீர்வ தெக்கா லமோ
உடல்குழைய நெக்குருகி விழிநீரு மாறாக
ஆறுவது மெகசா லமோ
உள்ளுளே பற்றியெரி யுநதீயமர்ந் துளமு
முட்குளிர்வ தெக்கா லமோ
சடைவளே மிடைகொண்டு மிடைவளே தேவரீர்
தாம்வருவ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே
வடிவேது மற்றவடி வுள்ளநீர் பின்றொட்ர
வள்ளலி றகுல்வ ருகவே
வளருமரு ணிறைகுண வ குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் நீனே. 6
ஈனமின் ஞானே தயத்தையென் கண்கண்
டிருப்பதினி யெக்காலமோ
எறுத மேட்டுக்கு முத்துலேயி னிரிமைறத்
திளையாத தெக்கா லமோ

கோனுன குருநாத னும்மடிமை நெஞ்சினிற்
குடிகொள்வ தெக்கா லமோ
குறைவற்ற தேசோ மயசெல்வம் வந்துகுதி
கொள்வதுவு மெக்கா லமோ
தானே மகிழ்சசிபெற் றேனேயென் றன்னைநீர்
தழுவுவது மெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தறகே
வானோர் வணங்குநெறி யுள்ளநீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித தீனே. 7

இலைசருகு கந்தமூ லங்களா லென்கும்பி
யெரியொழிவ தெக்கா லமோ
என்பெலா நெக்குருகி நிற்குநிலை சொக்கிநின்
றின்புறுவ தெக்கா லமோ
உலையிட்ட மெழுகெனப் பாழான கன்னெஞ்ச
முருகுவது மெக்கா லமோ
ஓடியலை சிந்தையு மாடிய கறங்குபோ
லுழலாத தெக்கா லமோ
சலியாது கான்மலை கடன்மீ துறைந்தருட்
டனையணைவ தெக்கா லமோ
சாவப்பிறந்தவடி யேனுமுமை நமபினேன்
சமயமீ தாளு தற்கே
வலியமலை தன்னைநிக ருள்ளநீர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 8

ஏதமில் லாதகுரு வடிசென்னி மீதெடுத்
தேந்துவது மெக்கா லமோ
ஏழையடி யேனறிவி லாமலுள றுந்தமிழ்க்
கிரங்குவது மெக்கா லமோ
தீதுமத பேதங்க ளற்றுமே யெங்குமிது
செல்வதுவு மெக்கா லமோ
சிறியார் மணற்சோற்றை நிகரிதென் றறிஞர்பிழை
செப்பாத தெக்கா லமோ
சாதிவரை யற்றகுரு நாதனே முத்திநிலை
தருவதினி யெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே
வாதசம யக்கடப் புள்ளினிர் பின்றொடா
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிலைறகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித்தீனே. 9
மக்கநக ராளும்மு கம்மதி றசூல்பாதம்
வருவதினி யெக்கா லமோ
வநதென து சிந்தைகுடி கொண்டுமெகி ழுண்டடிமை
வாழ்வதுவு மெக்கா லமோ
எக்கால மெக்கால மெக்கால மெக்கால
மென்றழுவ தெக்கா லமோ
எக்கால மெந்தையே தேவரீர் கூடவந
தெனையாள்வ தெக்கா லமோ
தக்கநிலை மீதிலே சொக்கிமன நிற்குவிறு
சாதருள்வ தெக்கா லமோ
சாவப் பிறந்தவடி யேனுமுமை நம்பினேன்
சமயமீ தாளு தற்கே

வகையில்கள பலகோடி யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 10

ஆக பாடல் — 104.



அளவிடற் கரிய வரியன காட்சி
யுளபல சமுகதநி ஞேதுகின் மகிமையைப்
பலகோடி சிடர் பலரி லொருகோடி
கிலனு மு மடியனு நேர்பெற வருள்கென
முனனிலைக் குருவா முகியித்தீன்
தன்னிலை நோக்கித் தாழ்ந்துவந் திரத்தல்.

ஆசிரிய விருத்தம்.

ஏகறப் பில்ஆல மீனருட் காளான
வேழைபங காளர் கோடி
எங்கள்மகு பூபீன்க ளொருகோடி ஆரிபீ
னென்பரெண் ணரிய கோடி
சேகுவொலி மார்கண் முறைற முறையாக விறுசாது
தேடிவரு வார்கள் கோடி
திவ்யகுண நிலயவுள மாக்களெதிர் கொண்டுநீன்
றீனென்று வருவர் கோடி
தேகமழி யாதகற் பாகம் படைத்தமா
சித்தர்க ளநந்த கோடி
தேவரீர் சீடரடி யேனுமுமை நம்பினேன்
றீட்சைதந் தாளு தற்கே

மாகோடி சிடர்கண முன்வாகீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகிபித் தீனே. 1
அருள்பொழியு ஞானவா நந்தநட னம்புரிந்
தாடிவரு வார்கள் கோடி
அட்டாங்க யோகநிட் டானுபூ தியர்களே
யளவற்ற கோடி சோடி
ஈராதொழுந் தவராஜ சிங்கங்கள் கோடியெந
நாளுமுள் ளோர்கள் கோடி
நாசச சரீரத்தை நேசித்த பாசத்தை
நாசமாக கினவர் கோடி
சிரம்விரித் தவர்கோடி கரமவிரித் தவர்கோடி
சினமறுத் தவர்கள் கோடி
தேவசீர் சீடரடி யேனுமுமை நமபினேன்
தீட்சைதந தாளு தற்கே
மருவுற்ற மணிமகுட முளாகீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 2
கதியாசை கொண்டதிக துதிபேசி நின்றெதிர்
கைகூப்பி நிற்பர் கோடி
கனிவாய் திறந்தருள் பொழிந்தி டீரோவென்று
கண்மாரி பொழிவர் கோடி
பதியாசை முற்றியிப் பாழாசை யற்றுமுப்
பாழேத்தி னோர்கள் கோடி
பதஇவை ராக்யமொடு முத்திவழி சென்றநிச
பதத்தர்கோ டானு கோடி

சிதைவற்ற சிநதையர்க ளோவனந் தவகோடி
சின்மயா நந்தர் கோடி
தேவரீர் சீடரடி யேனுமுமை நம்பினேன்
றீட்சைதந தாளு தற்கே
மதிகோடி போற்பிரபை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகிபித் தீனே. 3

நடனமிடு வாசிதனி லேறிவரு வார்கோடி
நாடாளு மனனர் கோடி
நாதாநத மூர்த்தியர்கள் கோடிநன் மவுனகுரு
நாதாக்கள் கோடி கோடி
திடஞான வைராக்ய வான்கள்பல கோடிநற்
றிவ்யகுண வான்கள் கோடி
சிந்தையற நீகருதிற மிக்கவொரு மிக்குநிலை
சென்றநிலை யோர்கள் கோடி
செடிகாடு தனிலுறைந் திலைசருகு பக்ஷணஞ்
செய்தலைந் தோர்கள் கோடி
தேவரீர் சீடரடி யேனுமுமை நமபினேன்
றீட்சைதந தாளு தற்கே
மடலவிழ் மலர்ப்பாத முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 4

நாசமா மோசதுன் பங்கடரு சம்பத்தை
நழுவவிட் டவர்கள் கோடி

காரியென் னுந்தூண்டி லின்மச்ச மாகாத
நடனவுல் லாசர் கோடி
ஆசைக் கடன்மீதி லோடியக் கரைகாணு
மக்கரைக் காரர் கோடி
அவ்வருகு மிவ்வருகு மெவ்வருகு மூநிவந
தாடிவரு வார்கள் கோடி
தேசோ மயாநந்த ஜெயவீர வாண்பிள்ளை
சிங்கஙகள் கோடி கோடி
தேவரீர் சீடரடி யேனுமுமை நம்பினேன்
றீட்சைதந் தாளு தற்கே
வாசமெவை யினும்வாச முள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே.
பொன்னாசை பெண்ணாசை மண்ணாசை மண்ணான
பூரணு நந்தர் கோடி
புலிராஜர் கோடிமெய்த் தவராஜர் கோடிநற்
புனிதகவி ராஜர் கோடி
மென்னிமுட் டக்கண்ட மட்மெருள் வாரியில்
வீழ்ந்துழுழ் குவர்கள் கோடி
வேதவே தாந்திகளு மொருகோடி மெய்ஞ்ஞான
வீடடைந் தோர்கள் கோடி
சின்னவெவே யொத்தவே ழைகளந் தங்கோடி
சின்னவெனி லேழை கோடி
தேவரீர் சீடரடி யேனுமுமை நம்பினேன்
றீட்சைதந் தாளு தற்கே
வன்னமணி மலர்மாலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே

வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 6

அண்டகோ டிகளுமோ ரணுவைத் துளைத்ததி
லடக்கவல் லவர்கள் கோடி
அறமியற் றுநர்கோடி சரமுயற் றுநர்கோடி
யாளான பேர்கள் கோடி
தொண்டர்சில கோடிபுய ரண்டர்பல கோடிநற்
றுறவோ ரநந்த கோடி
சோதிகண் டெசிவெளி சென்றபா னப்பெரிய
தொண்டிகண் டோர்கள் கோடி
செண்டென்ன வகிலமே ழையுமெடுத் தாட்டிச
சிரித்துவரு வார்கள் கோடி
தேவரீர் சீடரடி யேனுமுமை நம்பினேன்
றீட்சைதந் தாளு தற்கே
வண்டுலவு மலர்மாலை யுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
மணியே முகியித் தீனே. 7

சாசுவத வாநந்த ஞானபத யோகநிலை
சார்ந்தநிறை யோர்கள் கோடி
சர்வபரி பூரணப் பெரியபொரு ளைத்தொழுஞ்
சகசநிட் டையர்கள் கோடி
நாசிநுனி மீதுநட னம்புரிதல் கண்டுபுன்
னகைகொண்டு வருவர் கோடி
நாதமுங் கீதமும் வேதமும் மோதிநன்
நடனமிடு வார்கள் கோடி
தேசுறும் பரவெளியை மனவெளியி னுட்கொண்ட
தேசிக ரநந்த கோடி

தேவரீர் சீடரடி யேனுமுமை நம்பினேன்
 தீட்சைதந் தாளு தற்கே
வாசக கிலைறந்தநிறை யுள்ளநீர் பின்றொடர
 வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
 மணியே முகியித் தீனே. 8
அவனன்றி யோரணுவு மசையாத தென்றறிந்
 தசைவற் றிருப்பர் கோடி
அகிலாண்ட கோடிக ளனைத்துங் கணத்திலவ்விளை
 யாடிவரு வார்கள் கோடி
நவநாத சித்தியும் முத்தியும் மெத்திசையு
 நற்றவஞ் செய்வர் கோடி
நாதனே யுமதுபா தாரவிந் தங்களே
 நாடினே னென்பர் கோடி
சிவஞான வருணேசர் கோடானு கோடியுப
 தேசிக ளநந்த கோடி
தேவரீர் சீடரடி யேனுமுமை நம்பினேன்
 தீட்சைதந் தாளு தற்கே
மவுனகம னக்குளிகை யுள்ளநீர் பின்றொடர
 வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுணங் குடிவாழு மென்னிருகண்
 மணியே முகியித் தீனே. 9
முகில்கவியு நயினார்மு கம்மதி றசூலென்ற
 முத்தொளியி தென்பர் கோடி
மோனகுரு வானசுல்த் தானப்துல் காதிறு
 முகியித்தீ னென்பர் கோடி
மகுபூபு சுபுகானி யென்றபேர் வாழிமேல்
 வாழியென் பார்கள் கோடி

வாக்காலும வாசகத் தாலுமுமை வாழ்த்துவார்
வாழியென் பார்கள் கோடி
ஜெகஜோதி யானசிற் பரன்வாழி ஜெயஜெயா
ஜெயஜெயா வென்பர் கோடி
தேவரீர சீடரடி யேனுமுமை நமபினேன்
றீட்சைதந் தாளு தற்கே
வகுதாதை யாளும்வாழ் வுள்ளநீர் பின்றொடர
வள்ளலிற சூல்வ ருகவே
வளருமரு ணிறைகுண ஙகுடிவாழு மென்னிருகண்
மணியே முகியித தீனே.

ஆக பாடல் — 114.



முகியித்தீனாண்டவர்பேரிற் பாடிய கொச்சகம்.

அழுக்கைத் துடைத்தணைத் தணைத்துமடி மீதுவைத்தும்
புழுக்கைக குணமெனக்குப் போவதில்லை யாகையினால்
தழைகருங குணஙகுடிகளென் றநதையே வநதிடுவேன்
பழிக்காம லேழைமுகம பாருமுகி யித்தீனே. 1

பட்டதுவுங் கெட்டதுவும் பாய்முடைநது விற்றதுவும்
வெட்டவெளியாய் விடிந்தது மின்னம் பாருமையா
கொட்டமெல் லாம்விட்டுக் குணங்குடிகொள் ளாவீணர்
இட்டமென்னை விட்டொழில தில்லைமுகி யித்தீனே. 2

நாட்டிறவஞ் சாதிருந்து நம்பிகொலை செய்துமென்னை
ஒட்டாண்டி யாக்கியுமவிட் டொழிவதில்லை பாருமையா
கூட்டாவென் கூடக் குணங்குடிக்கு வாரவரை
ஓட்டாமல் வீணரைவிட் டோட்டுமுகி யித்தீனே. 3

மேலாங் குணங்குடியின் மெய்ஞ்ஞான வீடுசென்று
நாலாம் படியேறி நானொளித்தி ருப்பனையா
வாலாய மாகவஙகே மவுன மலரணைமேல்
மாலா யெனையணைய வாருமுகி யித்தீனே. 4

ஆக பாடல் — 118.



# அகத்தீன்சதகம்.

## குருவணக்கம்.

அவற்றுண் முறைவழி யருந்தவம் யோகம
எவற்றினு முந்திய இயல்புடை யாசான்
நன்னயக் கருணை நனிகூ ரன்பால்
இன்னய மந்திர மியைதலா தலினால்
திருவருள பெறுவான் சிந்தித்து மெய்ம்மைக
குருவருள் வேண்டிக் குறையிரந் துயர்த்தது

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

குணங்குடி யார்நற் குணங்குடி யோங்கக்
　　கொடுகொடென் றடிக்கடி குணங்குங்
குணங்குடி யார்துற் குணங்குடி போகக்
　　குணமெலாந் திரண்டருள் பரப்பிக்
குணங்குடி யேறிக் குறைவற நிறைந்து
　　குணக்கட லானமெய்ஞ் ஞானக்
குணங்குடி வாழு மகத்தீச னெமென்
　　குருபதஞ் சிரத்தின்மேற் கொள்வாம்.

முதலாவது,

# குருவருணிஷம்.



மனதைத் தழுவித் தற்காத்துச சீராட்ச செல்வப்பால்
கொடுத்துப் படிக்கவைக்க வரவேண்டும்.

தாயனைய வின்பந் தனைத்தந்து தகதுகை
தழுவிநின் றருள்பு ரியவுந
தநதைதா யுநதானு மாகவு மிருநதெனை த
தற்காத்து வருள்பு ரியவுஞ்
சேயெனை றிரஙகியணை காலியின் கனறெனை ச
சீராட வருளபு ரியவுஞ்
செஙகிரை யாடுசிறு மதலைபோற் கொஞ்சிநான்
செல்வமிட வருள்பு ரியவும
பாயுமடை கால்கணடு கரைபுரள வருமதிப்
பால்கொடுத் தருள்பு ரியவும்
பக்குவத் தோடுமெவு னத்தொட்டி லுககுட்
படிக்கவைத் தருள்பு ரியவும்
வாயுவைக் கட்டவுந் தவராஜசிஙகமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநாதனே. 1

மனமிடையாம லொண்ணுமற் பதைத்திடாது
மனமுவந்து வருஷிக்க வரவேண்டும்.

எநதலையி லிட்டவிதி யென்னமோ வென்னநா
னிடையாம லருள்பு ரியவும்

என்செய்தே னென்றடிமை யெண்ணாத வெண்ணங்க
ளெண்ணாம லருள்பு ரியவும்
பந்தமதி விட்டமெழு கென்ன நெஞ்சுருகிப்
பதைத்திடா தருள்பு ரியவும்
பாவியா காதெனைக் கருணைநய னங்கொண்டு
பார்த்துநல் லருள்பு ரியவும்
மந்திரங் கொண்டுமொங் காயவிழா தாதலான்
மனமுவக தருள்பு ரியவும
மாரியினு நின்கருணை மாரியணு மாறாது
வருஷிக்க வருள்பு ரியவும
வந்துபணி வார்க்குதவு தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநாதனே. 2

மனந்தானுச் சகாவென்ற நாடோறும் நகைத்திடாது
தொழும்புகொண்ட துரையே வரவேண்டும்.

தாயாயு மென்றந்தை தானாயு நின்றநீ
தானாக வருள்பு ரியவும்
தாயந்த மெல்லா மறிந்தநீ நிஷ்டைச்
சகாவென்ற வருள்பு ரியவும்
நாயடிய னுய்யும் பொருட்டாக ரட்சித்து
நாடோறு மருள்பு ரியவும்
நச்சுநச் சென்றெனை யரற்றுரு னென்றெனை
நகைத்திடா தருள்பு ரியவும்
தாயனே மாயனே நேயனே தூயனே
தொழும்புகொண் டருள்பு ரியவுந்

வற்றாத செல்வங்க ளத்தேச காலமும்,
    வளர்நதேற வருள்பு ரியவும்
மாசேது மற்றமெய்த் தவராஜ சிங்கமே
    வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
    மவுனதே சிகநா தனே.

ஆக பாடல்-208.

---

பத்தாவது,

## சமாதிநிலை.



என்றிய ததனை யொன்றாற் றுறுகுணம்
இன்றித் தானுந் தன்பெய ரின்றிச்
சேர்ந்துஞ் சேரா திருந்தவுண் மையோ
டார்ந்து மதுவு மாகா தாக
அங்ஙனங் குறித்த வம்மூதற் பொருளொடு
தான்பிற னாகத் தகையது சமாதி
ஆகு மென்றே வந்நிலை யருள்கவென்
றேக மாகி யிரந்திரத் துயர்த்தது.

மனங் கூடுகொள்ளாம லடங்கியஞ்சி ஒடுங்கி
யொழிதற்கு வரவேண்டும்.

கூடுவிட் டுக்கூடு பாயுங் கருக்குருவி
கூடுறைய வருள்பு ரியவும்
கொல்லனுலை மேனின்று கூத்தாடு குறளிகுதி
கொள்ளாம லருள்பு ரியவும்
ஆடுநற் குண்டலிப் பாம்புமெய்ப் புற்றினு
ளடங்கிடற் கருள்பு ரியவும்
அஞ்சாத வஞ்சுபுல வேடர்களு மடியனேற்
கஞ்சிடற் கருள்பு ரியவும்
ஓடியுழல் சிந்தையுங் கணமேனு மூசென்
றொடுங்கிடற் கருள்பு ரியவும்
ஓவியம் போலவே சும்மா விருக்கமற்
றொழிதற்கு னருள்பு ரியவும்

வாடுத லறிந்தமெய்த் தவராஜசிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. 1

மனநதிகழ்ந்து தீயிற்சரிப்படச் சமஸ்தமும்
ஆட்கொண்டடக்கவரவேண்டும்.

தீபம் பொருந்துகர்ப் பூரமென வுடலந்
திகழ்ந்திடற் கருள்புரியவும்
தீயிலிட் டென்னைக் கருக்குமுன் பென்னகந்
தீயிலிட் டருள்பு ரியவுஞ்
சாபங்க டூரச சமாதிநிறை வேறிச
சரிப்படற் கருள்புரியவும
தடையுறா துதவுகற் பகமா யிருந்தே
சமஸ்தமும் மருள் புரிவும்
ஆபத்தை யும்மடிமை பாபத்தை யுந்தொலைத்
தாட்கொண்டு னருள்புரியவும்
ஆங்கார மெல்லா மடக்கியுன் கைக்குள்
ளடக்கிவைத் தருள்பு ரியவும்
மாபதவி சேர்த்துமெய்த் தவராசசிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. 2

மனத்தின் றத்துவந் தான்சாக நான்சாக நாள்வரு
முன் சித்தி சீக்கிரமருள வரவேண்டும்.

தான்செத் திருந்துலக முழுதுமர சாளுமோர்
தத்துவம் மருள்பு ரியவுந்

தான்சாக வும்மருந் துண்பாரி யாரியன்
     முன்சாக வருள்பு ரியவும்
நான்சாமு னுன்சாக நாடினே னுன்சாமு
     னுன் சாக வருள்பு ரியவும்
நாள்வருமு னுன்சாக நாள்வந்து நான்சாக
     நாள்வருமு னருள்பு ரியவுந்
தீஞ்சுதிரு பிடிசாம்ப லாகவுந் தானுனீ
     சித்தியெற் கருள்பு ரியவுந்
தேகநிலை யல்லவே திருவரு ளிரங்கிமாச
     சீக்கிரம் மருள்பு ரியவும்
வாஞ்சாலை யானமெய்த் தவராஜ சிங்கமே
     வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத தீசனே
     மவுனதே சிகநா தனே. 3

மனங்கரைதத்தக்கவிழ்ந்து விளையாடவீடுபுக
எண்ணுமின்புற வரவேண்டும்.

கண்ணூறு விண்ணு றெனப்பொங்க வுங்கங்கு
     கரைதத்த வருள்பு ரியவுங்
கருணை சமுத்திரம் பரவிவந் தென்னைக்
     கவிந்திடற் கருள்பு ரியவும்
விண்ணுடர் போற்றிசெய் யண்ணுவு மென்கூட
     விளையாட வருள்பு ரியவும்
வேதவே தாந்தமெல் லாம்விட்டு நட்டநடு
     வீடுபுக வருள்பு ரியவும்
எண்ணரிய ஞானவா னந்தமோ னந்தரு
     மெணந்தரற் கருள்பு ரியவும்

ஏகதத் துவசுரூ பத்தைமோ கித்தடிமை
யின்புறற் கருள்பு ரியவும்
மண்ணௌிர விண்ணுலவு தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. 4

மனமெண்ண மிரங்கித்தீக்ஷைசெய்வித் தொடுக்கி
யுறைந்திட வரவேண்டும்.

இன்றுளோர் நாளையு மிருப்பரென் றெண்ணாத
வெண்ணமொன் றருள்பு ரியவும்
இந்தவடி யானுனது சொந்தவடி யானென
விரங்கிநல் லருள்பு ரியவும்
தென்றிசைக் கைலாச மாம்பொதிகை வாசனே
தீக்ஷைதந் தருள்பு ரியவுந்
தேசிக சிகாமணிய னேயடிமை பண்படச்
செய்வித்து னருள்பு ரியவும்
ஒன்றுக்கு ளொன்றான வொன்றுக்கு ளொன்று
மொடுங்கிடற் கருள்பு ரியவும்
உள்ளுக்கு ளுள்ளுருகி யுள்ளுக்கு ளுள்ளே
யுறைந்திடற் கருள்பு ரியவும்
மன்றிலெவ ருந்தொழுந் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. 5

மனமுனையே தொழ வுண்ணின்று மறந்திடாது வாய்த்திட
நானுக நானறிய வரவேண்டும்.

ஊனுன காயமுயிர் போமுனடி யேனுமுனை
யேதொழற் கருள்பு ரியவும்

உயிரினுக் குயிரா யுறைந்தநீ யென்றுமெற்
குண்ணின் றுனருள் புரியவும்
வானுதி பூதலய மானபெரு மானெனை
மறந்திடா தருள் புரியவும்
வாக்குமன மணுகாத பூரணந தானுக
வாய்த்திடற் கருள் புரியவும்
நானுக நின்றநா னுனுக நின்னுநா
னுனுக வருள் புரியவும்
நான்மறையு மறியாத நான்மறையினுட்பொருளை
நானறிய வருள் புரியவும்
மானென விரைந்துமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங்குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. 6

மனமடர்ந்து பகர்ந்தீதென் றிருந்திட
மதமண்ணுகவரவேண்டும்.

அதிமோக மாகிமெய்ஞ் ஞானவா னந்தத்
தடர்ந்தேற வருள் புரியவும்
அங்கிங்கெ னுமலெங் கெங்குமது வானதெது
வதுபகர்ந் தருள் புரியவும்
இதயங்க ணின்றுமித யங்களறி தற்கரிய
தீதென்று னருள் புரியவும்
ஏகமா கியபரா பரமுமென் பரமா
யிருந்திடற் கருள் புரியவும்
மதமத்த னையுமற்ற மதமூற்றி யானுமும்
மதமாக வருள் புரியவும்

மனமயக் கந்தரும் மென்மயக் கம்வெறும்
மண்ணுக வருள்பு ரியவும்
மதிமுகத் தழகனே தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநாதனே. 7

மனமைய மணைகால் பாதுகாத்துப் பாரிசப்
பம்பரமாட வரவேண்டும்.

அடியனே னுய்யவு மாதரவு செய்யவு
மையமற் றருள்பு ரியவும்
அன்புமழை சொரியவா ருய்ப்பெருகி வந்துமற்
றணைதத்த வருள்பு ரியவுங்
கடலின்மடை போலுமென் கண்மடை திறக்கவும
கால்பாய வருள்பு ரியவுங
கதியான பூமிமயி ரேற்றியதை யும்பாது
காத்துநின் றருள்பு ரியவும்
படுபாடு பலகுபற் றுமலும் முழுதுமென்
பாரிசத் தருள்பு ரியவும்
பாசமற் றிடவுநன் னேசமுற் றடிமைபம்
பரமாட வருள்பு ரியவும்
மடமடென நடனமிடு தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத்தீசனே
மவுனதே சிகநா தனே. 8

மனமன்பறிவு வீறுவீடுபெதம் பரமடைய வரவேண்டும்.

அகடமுறு சாமர்த்திய மெல்லா மறந்தடிமை
யன்படைய வருள்பு ரியவும்

அதிகப்ர சங்கங்க ளெல்லா மறந்தடிமை
யறிவடைய வருள்பு ரியவும்
வெகுளிவிளை யாட்டுமுத லெல்லா மறந்தடிமை
வீறடைந் தருள்பு ரியவும்
வேடிக்கை யொடுபகட் டெல்லா மறந்தடிமை
வீடடைய வருள்பு ரியவும்
பகடிபரி யாசங்க ளெல்லா மறந்தடிமை
பதமடைய வருள்பு ரியவும்
பாடிப் படித்தகதை யெல்லா மறந்தடிமை
பரமடைய வருள்பு ரியவும்
மகுடந் தரித்தமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநா தனே. 5

மனம்போகாமற்புணருதற்குச் செழுஞ்சாரல்
தினந்தந்துநான்சாரநானாகவரவேண்டும்.

பூஞ்சோலை வாழுமோ னானெனவும் வீணினான்
போகாம லருள்பு ரியவும்
பொற்றா மரைக்குளத் தவளையா காதுனைப்
புணருதற் கருள்பு ரியவுந்
தேஞ்சாறு பாஞ்சாறு பாயுமின் பொதிகைச்
செழுஞ்சார லருள்பு ரியவுந்
திவ்யமா மதுரந் திரண்டமதி யமிர்தந்
தினந்தந்து னருள்பு ரியவும்
நான்சாமு னான்செத்து நாடோறு முன்சமூக
நான்சார வருள்பு ரியவும்

நாதமும் வேதமும் நாதநா தாந்தமு
ஞானக வருள்பு ரியவும்
வாஞ்சித்த லோடுமெய்த் தவராஜ சிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுனதே சிகநாதனே.

நேரிசை யாசிரியப்பா.

இவ்வகை யெல்லா மியைந்தும் பயன்கொ
அவ்வகை யெவர்க்கே யாயினும் விதியரு
அருளுவ தாயி னவரே யுலகெலாந்
தெருளு மூர்த்தித் திருப்பொரு ளென்ப
நல்வழி தேடு நரர்கள்
சொல்வழி யிஃதே துணிந்துகொ ளீரே.

இச்சதகப்
பெயரின் கருத்துப்
பொருளும், கொள்ளுந்
தன்மையும், இச்சதகஞ் சொல்லிய
காரணமும், காரியப்படுதலும், இச்சதகத்திற்
போந்த அதிகாரமும், இவ்வதிகாரத்துட் பொருளும்,
இவற்றி னியல்பும், ஒழுங்கும், இவற்றிற்குப்
பழஞ்சூத்திரக் கோட்பாடும், விளக்கிக்
காட்டி, அதிகாரந்தோறும் பன்மை
யா யொழுகி ஈற்றிலொருமை
யாய் முற்றுப்பெற்ற இவ்
வகத்தீசர் சதகத்தின்
அதிகாரத் துறை
னமைத்த

நிலமண்டிலவாசிரியப்பா.

அருந்தவ முனிவ ரனைவரி னுயர்ந்த
பெருந்தவ முனிவர் பெயரே யாயினும்
அமைவனை வமைக்க லாகுமே லாமே
கமைவரு தாபதர் கருத்தஃ தன்றால்
அகமும் புறமு மாயெப் பொருட்கும்
வகைபெற விளங்கு மதியா வுண்மையைக்
காரணத் தானுங் காரியத் தானும்
ஆரணத் தானு மருந்தெளி வானுந்
தொகுக்கவு மிவற்றூர் றொகுத்தலை மறுத்து
வகுக்கவு மாகா வன்மைபூண் டமையால்
அகத்தீ சனுக்கினம் புறத்தீச னென்று
தகத்தீச னென்றே யாள வேண்டியதால்

அவ்வகத் தீசனை யானந்தம் பூத்த
இவ்வகத் தீச னின்பமோ டிறைஞ்சித்
தன்பெயர் மாறிக் காரணந் தந்து
பின்பெயர் மாறி யறிவெனப் பிறழ்ந்து
மாயை யுடையான் மனமெனத் தோன்றுஞ்
சாயை யுடைய தாடாண்மை வீரனை
அடக்கி யொடுக்கி யணிகா ரணப்பெயர்
மடக்கி மடக்கி வாரா தாகவித்
தானே தானுந் தன்மையின் விளங்கற்
கானு முறைசெய்வா னகத்தி னமைத்துத்
தவமும யோகமுந் தகையென வியல்பின்
அவயவ மெல்லா மருளினோ டளித்து
விளக்கியாட் கொள்கென வேண்டி வேண்டித்
துளக்கி யிரந்துயர் தீரக்கேட்டது.

அகத்தீசர்சதக முற்றுப்பெற்றது.

ஆக பாடல் — 218.



# மருமூது நபியாண்டவரைச்

## சுகானு பவமுறத் துதித்தல்.

---

ஆசிரியவிருத்தம்.

வெட்டவெட்டத் தளிர்கள் விட்டுப் படர்ந்தருடம்
வீசுபா சாட வியெனும்
வினையென்ற பெருமர வனக்கான கக்காடு
வெட்டிமிர்த் தூளி பணணி
வெகுளிக ளெனும்பல பரட்டுமுட் காடெலாம்
வேரோ டறப்பி டுங்கி
விரிகருணை வீரகண் டாமணி யணிந்துணி
வீரவா யுதம ணிந்து
வெற்றிகொண் டெழுமகங் காரவேங் கைப்புலியை
வேட்டையா டிததுணித்து
வெட்கமொடு துக்கமும் வெருட்சியு மருட்சியும்
வெருண்டோட வருவி காரம்
வெஞ்சின மெனுங்கொடிய துஷ்டமிரு கங்களும்
வெட்டிவா ளொடுத்தெ டுத்து
வீறுவிட் டலரியொன் ரேடொன்று சேராமல்
வெருவியே கிடவ டித்து
வெல்லரிய மாமாயை யெனுமலைப் பாம்பினை
விவேகமெனு மண்டாவினால்
வெட்டிப் பிளந்தபின் மின்னுகா ணத்தொடு
விரிந்தோடு கருவி வேரை

சுற்றிக் கவிந்து கொண் டானந்த மழைமாரி
சோராம லேபொழிந்து
சொல்லரிய நெஞ்சக மெனும்பூமி சுத்தவெளி
யாகவச் சுதநிருத்தித்
துய்யசதுர் வேதத்தை நால்வரப் பாக்கியே
துறவெனுங் கிடைமறித்துச
சுருதிமுடி யென்னுமெய யறிவுழவு தற்கான
சூத்திரமெ னுங்கலப்பை
துன்பவின் பங்களென் பதிரண்டு மாடாயச
சுருக்கிவார் பூட்டியிறமாய்த
துள்ளிக் குதித்தெடுத் தேறியே போகின்ற
துடியடக் கின்ற தடமாயத்
தூலமொடு சூக்குமத் தாசையு நிராசையாயத்
தொந்தமிர்த தொந்த மாகிச்
சோதிமய மாயென்ற வித்தகப் பண்ணையா
டொட்டிதய மேழி யதனைச
சொன்னபடி வந்திடக் கௌரிகுண் டலியெனுஞ்
சுழிமுனைத் தாரெடுத்துப்
பட்டும் படாதுவைத் திடைதரிசி லாதுழுது
பல்வருண பேத மென்னும்
பாவிகச் சாதிவரை கின்றகளி யளறது
பழுக்கவழு கக்க லக்கிப்
பழக்கமெனு மடைதலுங் கட்டியு மிதித்தபின்
பழகரிய சமரசமெனும்
படிகொண்ட மூலமுத லாதார மாறும
பரப்பிப் பரம்ப டித்துப்

பகருமிரு கலைநேர்க்கு வருசுழியி லமைகின்ற
பஸினை னுங் கைகு லுக்கிப்
பாரமலை யோடணு வகண்டமொடு கண்டம்
பரிக்ஷிககோ ஞைதவிதையைப்
பட்டுமூந் தாதுபிந் தாமலே பாவியே
பருவமது செயத பின்பு
பாசட ரெடுப்பரென் றெடுப்புநீ ரதனையும்
பார்த்துக் கழித்து விட்டுப்
பத்திவை ராக்கியக் கடன்மடை திறநதுகால்
பாய்சசியது பயிரா கவே
பரிபாக பக்குவக் காலமது பிசகாது
பார்த்துப் பதந் தன்னிலே
பற்றிப் படர்ந்ததொண் ணூற்ரூறு தத்துவம்
பலகளை யறப்பி டுங்கிப்
பரிபூர்ண மாகவே நாளுககு நாட்கதிர்ப்
பாலகோ ளறப்ப றித்து
பாளையென் னும்பருவ முற்றியே முத்திப்
பலன்பெற்ற சமுசாரிநீ
படைகொண்ட மும்மண்ட லத்தினு முன்மகிமை
பற்றிப் படர்ந்த குருவே
பாதபங் கயமதுக் காளடிமை யாகாது
பாவத் தழுநது வேனே
பாசவலை வீசியே மோசமது செய்கின்ற
பாவையர்க் காளா வனே
கொட்டிய கருந்தே ணிகர்த்த விழி மின்னார்
குவித்தவிரு பொற்கொங் கையுங

கோசமொடு மும்மத மிறைக்கின்ற கர்விதக்
குஞ்சரக் கொம்பு தானோ
கொஞ்சுகிளி மொழியார்க ளுறவுநல் லரவினது
கொடியநஞ் சுபையை யன்றோ
கூரிருட் கூந்தலென் சொல்லுகேன் கோடையிடி
குடிகொண்ட கருமே கமோ
கோதையிள மின்னார்கள் யோனிப் பெருங்கேணி
குறையாத யானை மடுவோ
கூழுமுடு லெழும் படர்ந்துவரு டிக்கினும்
குறையுருக் கெடுபள் ளமோ
கொத்துக் கடங்காத மதகரி தனக்குமது
கொப்பமோ படுபள் ளமோ
குருவைத் தொழாமனுக குப்பைக ளொதுங்குமோ
குப்பைக் கிடங்கு தானோ
கொலைசெயம னிருக்கின்றபடு களமோ
கொடுஞ்சிங்க மிடிபொ துமபோ
குழகுமென வதிசக் தேனொழுகு கனியெனக
கொண்டுநெஞ் சினை வாட்டுதே
கோளடப் பொன்னிலத் தாசைதரு கின்றதே
கோதையர்கள் காத லாலே
கூளமத ரிப்பதே யல்லா திருந்துநான்
குளிர்காய நேர மிலையே
கூர்குணம் சத்துசித் தின்றபர வெளியெலாங்
குடிகொண் டிருந்த குருவே
கொடியகெடு மாயையைக் கூடாதிருக்கின்ற
குறியருள்வ தென்று புகலாய

கோடானு கோடிமறை யாலுமறி யாக்குணங
குடிகொண்ட கருணை வடிவே
கூலாயி லாகஇல் லல்லாகு வென்பதற்
குடியமகு மூது நபியே.

முற்றுப்பெற்றது.

ஆக பாடல் — 219.



# தவமேபெற வேண்டுமெனல்.

கட்டளைக்கலித்துறை.

ஓடியலைந்துமிவ் வையகமுற்று முழன்றுழன்றுந்
தேடியெடுத்த திரவியம்யாவையுஞ் செததபின்பு
நாடியெடுப்பது முண்டோமறநது நடக்குநெஞ்சே
வாடியிறநதறஞ் செய்வாயகுணங்குடி வாய்த்திடுமே. 1

பெண்ணுசையென்கின்ற பேயபிடித்தாடிய பேதைநெஞ்சே
கண்ணுலதில்வருங் கன்மங்கள்யாவையுங் கண்டிலையோ
எண்ணுதபாவஙக ளெண்ணுமற்செயயமிப் பேருடம்பு
மண்ணுகநறவஞ் செய்வாயகுணங்குடி வாய்த்திடுமே. 2

ஆடும்படுபொரு ளாட்சியென்றங்கிங்கு மாயலைநது
பர்டும்படுவதுன் பாரமதோசொல்லு பாழ்மனமே
கூடும்படுபயன் றேடுமெப்பாலுள்ள கூட்டம்விட்டு
வாடும்படும்பெறு முண்மைக்குணங்குடி வாய்த்திடுமே. 3

ஆதிமுகம்ம தருளாமுகம்ம தருள்விரிநத
சோதிமுகம்மது தோற்றமுகம்மது தூயவுளத்
தோதிமுகம்மதென் றுண்மைகணடாலிவ் வுலகினுக்கு
வாதிமுகம்மதி னேடுகுணங்குடி வாய்த்திடுமே. 4

எல்லாப்படைப்பும் படைத்துமிரணங்க ளீபவனே
அல்லாவொருவ னவனன்றிவேறிலை யாகையினுற்
சொல்லாமற்சொல்லுஞ் சுருதிமுடிவினிற் சொல்லிறந்த
வல்லான்குணங்குடி வாழ்ந்திருப்போமினி வாருமினே. 5

அய்யோவுலகி லழியாவரம்பெற்றி யாரிருந்தார்
அய்யோவுனக்கந்த வாதரவென்னதி லாசையென்னே

பொய்யானவாழ்வும் புலையாட்டுகெம்பும் புதரலர்க்கும்
ஓயயாரமுள்ள குணங்குடியாற்கு முறவில்லையே. 6

உற்றுரிருந்தென்னைப் பெற்றுரிருந்தென் னுனக்குதவி
சற்றுயினுமில்லை சொன்னேன்சொன்னே னிதுசத்தியமாய்ச்
செற்றுலும்வைத்தடி வாஙகாமனிற்கிற் செயம்பெறலாங்
கற்றுற்குணஙகுடி கொண்டிடுவாய்மனக் கண்மணியே. 7

எண்சாணுயரத் திருக்கும்பனையி னிறக்கியுண்ணும்
பஞ்சாக்கரமெனும் பாரியவாளினைப் பாயநெதடுத்துத்
தஞ்சாவூராளு மகராஜன்பாதந தனைப்பணிநதால்
கெஞ்சாக்குணஙகுடி கொள்வாயிதுபுத்தி கேணெஞ்சமே. 8

படிகரும்படிகரு நடக்கின்றையோவிப் பழஞ்செருப்பா
லடிக்கட்டுமோவுனக் கொததாசையாரறை பாவிநெஞ்சே
முடக்கிப்படுததுக்கொண முசசநதிகருப்பையின் மோடுகளி
லடக்கிகுணங்குடி கொள்வாயதுபர மானநதமே. 9

ஆருககுவநத விருநதென்றிராம லருமையுள்ள
பேருககுவநத தெனவேஙகினைநது பிரியமுற்று
ரருக்கமைநதோ ரன்னஙகளுண்டுண டொன்றும்முரையாப்
பாருக்குணல்ல குணங்குடிபோயப்பள்ளி கொண்டிடுமே. 10

மூலமுகம்மது முப்பாழ்முககமமது மோனமுள்ள
பாலமுகம்மது பக்தியுள்ளோர்களும பாயநதெடுக்கும்
வேலுமுகம்மது வேதாநதமூல விளக்குடைய
கோலுமுகம்மது குன்றுக்குணங்குடி கொண்டவர்க்கே. 11

நாளைக்கிருந்திட லாமெனவெண்ணி நடுநெஞ்சமே
நாளைக்கிருப்பதை நம்புவதோவில்லை நானிலத்தில்
நாளைக்கும்பின்னைக்கும் நாமிருப்போமென்னு நாட்டமற்றெவ்
வேளைக்குநல்ல குணங்குடிவாழ்ந்திரு வேளையிதே. 12

நாட்டமென்றேயிரு வுன்னிருபாதத்தி னன்னிலையின்
ஓட்டமென்றேயிரு வொன்றான வக்கர மோதியதின
ஆட்டமென்றேயிரு தோற்றமெவையு மலிபுடைய
நீட்டமென்றேயிரு நெஞ்சேகுணங்குடி நிச்சயமே. 13

நாடுநகருண்டு நல்லோர்களுமுண்டு நாதனுமுண்
டோடுமெனக்குண்டென் றெண்ணியுன் கையி லுடல்பசித்தாற்
போடென் றுசொண்ட கவளத்தைவாங்கிப் புசித்துக்கொண்டு
பாடுங்குணங்குடி வாழ்ந்திடவேபர மானந்தமே. 14

தவமேபெறவேண்டுமெனல் முற்றுப்பெற்றது.

ஆக பாடல் – 233.



# குறையிரங்கியுறைத்தல்.

நேரிசைவெண்பா.

கள்ளினங்க ளுண்ணுங் கழுதைகா ளென்சொலினும்
எள்ளளவு முன்னிதயத தெயதிலையே—உள்ளம்
இணங்கா மடமாந்த ரெக்கேடு தான்கெடினுங்
குணங்குடியார்க் குண்டோ குறை. 1

உற்றாரழாம லூரன்முறையார் திட்டாமற்
பெற்றார் பிறந்தார் பிதற்றாமல்—எத்தாலும்
அங்கிங்கெ னாதபடி யாரும் பெருவெளியிற்
றங்கல் குணங்குடியே தான். 2

நாசிநுனியி னயனத் திடைவெளியிற்
றேசிகனாராடுந் திருநடனம்—வாசிகொடுத்
தோராயெழுவா யுணர்வா யருனெஞ்சே
பாராய் குணங்குடியின் பால். 3

பாலிடுக்குந் தோற்பையைப் பற்றியுளம் பாவையரின்
காலிடுக்குக் காகக் கரைவனோ—மேலிடுக்கும்
உன்னருளை யுங்காட்டி யோங்குங் குணங்குடியின்
றன்னருளை யுங்காட்டித் தா. 4

நஞ்சுண்ணு மாப்போலு நாத னருள்பெறவென்
னெஞ்சேநீ புண்ணாய் நினைப்பதேன்—அஞ்சாதே
என்றமுத்த னமருள்ளே யேகா திருப்பதால்
ஒன்றுங் குணங்குடியி னுள். 5

நீண்டாண் பனைபோலு நெற்பதரைப் போலுமே
என்று னைப்படைத்தா யென்கோவே—தீண்டாத

கல்லா மிடாவனைதநின் கைத்தடியான் மோதினுல்
அல்லாற் குணங்குடியா கா. 6
மெத்தத் துணிபோர்க்க மெத்தமெத் தக்குளிருஞ்
சற்று துணி போர்த்துவரச் சற்றுகுளிர்—இற்றதுணி
இல்லைக் குளிருமில்லை யில்லையிது தானுளமே
செல்லக் குணங்குடியார் சீர். 7

ஆக பாடல் – 240.



## நாகூர்மீருன்சாகிபு அவர்கள்மீது பாடிய

ஆசிரியவிருத்தம்.

திக்குத் திகந்தமுங் கொண்டாடி யேவந்து
  நின்கூறி நிற்பர் கோடி
சிங்காச னதிபர்க ணதரேந்தி யேவந்து
  ஜெயஜெயா வென்பர் கோடி
அக்கனருள் பெற்றபெரி யோர்களொலி மார்களணி
  யணியாக நிற்பர் கோடி
அஞ்ஞான வேரறுத திட்டமெய்ஞ் ஞானிக
  ளணைநதருகு நிற்பர் கோடி
மக்கநக ராளும் முகம்மதி றசூல்தந்த
  மன்னரே யென்பர் கோடி
வசனித்து நிற்கவே கொலுவீற் றிருக்குமுன்
  மகிமைசொல வாயு முண்டோ
தக்கபெரி யோனருட் டஙகியே நிற்கின்ற
  தவராஜ செம்மே ருவே
தயையைவைத தென்னையாள் சற்குணங் குடிகொண்ட
  சாகுல்க மீத ரசரே. 1

முற்றிற்று.

கலிவிருத்தம்.

வஞ்ச வேல்கொடு மார்பி லெறியினும்
விஞ்ச வேதழல் மீட்டி யெரிக்கினு
நஞ்சி னூழ னூக நலியினும்
அஞ்சிடாதவ ரானந்த மாவரே. 1

முற்றிற்று.

ஆக பாடல் — 242.



# ஆனந்தக்களிப்பு.

இரக்கத் துணிந்துகொண் டேனே-எனக்
கிருக்குங்குறைமுழுதும்நிகழ்த்திக்கொண் டேனே (இர)

1. கொடிகட்டிக் கொண்டெழு கோடி-தனங்
குவித்தந்த மகிழ்ச்சியாற்கூத்துகளாடி
கெடுபுத்தி யுடையோரைக கூடி-யானுங்
கெட்டலையாமலே கெதிபெற நாடி (இர)

2. சொற்கடங் காச்சுக ஞானம்-தன்னிற்
சும்மாவிருககுஞ் சுகமதே மோனம்
எட்கிடை யாயினும் பானங்-தன்னை
எடுத்துண் டிருப்பதற் கிச்சிக்தேயானும் (இர)

3. வஞ்சிய ராசையைத் தாட்டி-விட்டு
வழிபெற்றுக களிப்புற்று வாசியைப்பூட்டி
துஞ்சாக வறிவினைச் சூட்டி-அற்பத்
தொல்லுலகாசை துணித்துவிட் டோட்டி (இர)

4. அஞ்சுதா ளுைட்டிய மாடி-அது
அஞ்சோடு நாலோட்டை யடையாமலோடி
பிஞ்சழிந திடுமென்று நாடி-யானும்
பேரின்ப வீட்டினைப் பிரியமாய்த் தேடி (இர)

5. கற்பூச்சந தனவததர் பூசி-மிக
கன்றாக வைததாலும் நாற்றமே வீசி
எப்போதுங் கொடுமைசெய் தோசி-என்றே
இவ்வுடல் வாழ்வுக ளியாவையும் வீசி (இர)

6. மாளிகை மேல்வீடு    கட்டி-மனை
வாழ்வைநிலையென்று வாழ்கின்ற    மட்டி
நாளையெமன்வந்த    தட்டிக்-கொண்டு
நடப்பானென்றறியானையடுப்பதைவெருட்டி    (இர)

7. பட்டும்பணிகளும்    பூண்டு-கொண்டு
பாழான வாழ்வினைப் பலனென    மாண்டு
கெட்டவர்களைககண்டு    மீண்டு-கதி
கிடைக்கும்படிக்கு நடப்பதற்    கீண்டு    (இர)

8. காமகுரோதஙக    ளற்று-சூழுங்
கருவி கரணஞ் சகலமு    மற்று
நேமநிஷ்டைகளையு    மற்று-நின்ற
நிலையுமறந்து குருவடி    பெற்று    (இர)

9. எத்தனை யெத்தனை    காலம்-இந்த
என்புதசையா லெடுக்கின்ற    தூலம்
மெத்தன வாழுமிஞ்    ஞாலம்-அதை
மேவாது மேவாதெடுத்திந்தக்    கோலம்    (இர)

10. என்நிலை தன்னை    யறிந்தே-என்னுள்
இருந்தாடுஞ்சூத்திரம் பொருந்தாட    வறிந்தே
அன்னிய நிலைகளைத்    துறந்தே-குரு
அருளினலறுதின மருளெலா    மறிந்தே    (இர)

11. ஆழித் துரும்பென    வங்கும்-இங்கும்
அலைந்து திரிவதி லஞ்ஞானந்    தங்கும்
பாழிற் கெடாதருள்    பொங்கும்-படி
பார்த்துத் துணிந்து பரதேச    மெங்கும்    (இர)

12. காடுஙக ரையுஞ்சு    ழன்று-ஒரு
காட்சியுங் காணேமெனவேயு    ழன்று

தேடும் பருவத்திற் சென்று-திக்குத்
திசையொன்றுந்தெரியாமற்தெளிதற்குநின்று (இர)

13. ஆடிய கூத்தினைப் போற்றி-அருள்
ஆனந்தஞ் சேர்க்கு மருளினிற் ரேற்றி
ஓடிய காற்றினை யேற்றி-அதில்
உறுகியொழுகுமமிர்தத்தைத் தேற்றி (இர)

14. நாலிரண் டரைமுழ மான-பிண
நாற்றச்சடிலத்து ஞானென்று ஞானக்
கோலம் விளக்கிய மோன-அருள்
குருவடி திருவடி யுருவத்தை மான (இர)

15. எறியு மகத்தைத்த டுத்தே-அதில்
இசசித்துப் பக்ஷிகவைத்த டுத்தே
அறிவைக்கொண்டறிவைதடுதா டுத்தே-அருள்
ஆனந்தஞ்சேர்க்கின்ற வருளினை யெடுத்தே (இர)

16. பாரினிற் பலவிதங் காட்டி-நல்ல
படிகததின் குணமெனப் பரவெளி சூட்டி
ஆரிய னருளினைக் கூட்டி-குரு
அருள்செய்த வுடனேயென் வினைகளையோட்டி (இர)

17. மண்டப வுள்ளறை விண்டு-வரும்
மாமண மூறிய தேமது வுண்டு
உண்டெளிப்போரைக் கண்டு-யாளும்
உள்ளத்திருக்கினைத் தள்ளிக்கைக்கொண்டு (இர)

18. மாதவந் தன்னைப்பு ரிந்து-ரச
வாதங்கள்செய்கிறே மென்றுதிரிந்து
சூதோடு வாதைபு ரிந்து-கெட்ட
சூதரைச் சத்தியமாகப்பி ரிந்து (இர)

19. பொறிபுல னடங்கிய — காலே-பரி
  பூரணப்பொருள் வந்து வாய்க்குமப் — பாலே
அறிஞரு மறியாது — போலே-காணும்
  ஆனந்த வெள்ளத்தி னூடின — தாலே (இர)

20. நினைவுங் கனவு — மறந்து-நின்ற
  நிலையு மறந்தெழு கலையு — மறந்து
இனமு மனமும் — மறந்து-பின்னர்
  இதனிடைதோற்றிய விதங்களு — மறந்து (இர)

21. கற்பட்டுப் பாய்கின்ற — தோயம்-போலக்
  காட்டி மறைக்கும் பிரபஞ்ச — மாயம்
அற்பர்க்குத் தெரியாது — பாயம்-என்று
  ஆலோசனைசெய் தழியுமுன் — காயம் (இர)

22 எனையானென் றறியாத — பாடு-என்னை
  இக்கோல மாக்கிய தேயதன் — கேடு
தனையானு மெதிர்க்கையி — னேடு-கொண்டு
  சாபத்துட னடர்ந்து கோபத்தி — னோடு (இர)

23. விண்ணுக்குள் வெளியிருண் — மாற்றி-அதில்
  வேதாந்த மூலவிளக்கினை — யேற்றிக்
கண்ணுக்குண் மணியாகத் — தோற்றி-வருங்
  காரணமான கடவுளைப் — போற்றி (இர)

24. எல்லாரு மானிடர் — தாமோ-இந்த
  இழிவான பிரமைக ளெல்லார்க்கும் — போமோ
கல்லெல்லா மாணிக்க — மாமோ-என்று
  கற்பித்த காரண குருவடி — போற்றி (இர)

25. நாதமுங் கீதமுங் — கேட்கும்-அந்த
  நாயகன் சந்நிதி தன்னிடை — சேர்க்கும்

மாதவ கன்னிலே யாக்கும்-நல்ல
மாசறு தேசிகன் பொற்பாதம்போற்றி (இர)

26. கட்டுப படுவசன்மக் குட்டை-வருங்
காலத்தூச சன்கையால் வெட்டிடுங் கட்டை
துட்டத் தொழில் படைத்த மட்டை-இந்தத்
தூலமென் றெண்ணிக் குருவருள்போற்றி (இர)

27. போகரு வரவற்ற போதம்-பஞ்ச
பூதாதி யாலடங்கா தொழு நாதம்
வாசகி லமையாத வேதம்-தன்னை
வடித்துப் புகட்டு மகததுவைப் போற்றி (இர)

28. நரம்பு தசைதோ லெலும்பு-கொண்டு
நாட்டும் வினைகளுக் காட்டுந் துரும்பு
நிரம்புந துயர்கொ ளுடம்பு-என்று
நில்லாதென் றெண்ணியில் லல்லாவைப்போற்றி (இர)

29. ஆழித் திரளெனப் பொங்கும்-அருள்
ஆனந்தஞ் சேர்க்கு மறிவிற் கடங்கும்
நாளுக்கு நாளகு மிகுஞ்-சற்றும்
நாதாந்த வேதாந்த நாதனைப் போற்றி (இர)

30. இன்றைக் கிருப்பதும் பொய்யே-இனி
இன்றைக் கிருப்பது மெய்யன்ப னைதயே
என்[illegible]மிருப்பது மெய்யே-என
எண்ணியெணணியரு ளுண்மையைப்போற்றி (இர)

31.* பார்க்கப் பலவித மாயும்-ஆகப்
பல்லாயி ரங்கோடி யண்டம தாயும்
காக்கு நிலேக்குயி ராயும்-நின்ற
காரண பூரண நாதனைப் போற்றி (இர)

32. கரும்புசர்க் கரைகற்கண் டாலே-பாகக்
காயசசி யெடுதது திரட்டிய பாலே
அருமபாவிக கருததுகைகை யாலே-அணைத்
தாட்கொளு நாயகன் றாள்களைப் போற்றி (இர)

33. கற்பக ஞணங்கோ மென்றே-வெறி
கஞ்சாவுங களளு மபினியுங் தின்றே
துப்புகெகட் டலையாம னின்றே-அருள்
தூயமெய்ஞ்ஞானச் சுடரினைப் போற்றி (இர)

34. கருவி வழி தனி லோடி-யானுங்
காலுகளோயநதும் விடாமலே தேடி
அருவிக் கயர்நதுளம் வாடி-அலை
யாம லெனககருள் வாமனைப் போற்றி (இர)

35. நாசி நுனியிடை நின்று-நல்ல
நடனமபு ரிவதைக் கலீர்கலீ ரென்று
வாசியி லேறிகெகாண் டின்று-காண
வைதத குருபர னற்றாளைப் போற்றி (இர)

36. தேடிய பொருள்புதைப் போரும்-தேசா
தேசஙகள் ராஜாஙகமாண்டிருப் போரும்
ஈடெனக் கிலலையென் போரும்-செத்
திறப்போரென்றேமனநதிறப்படப் போற்றி (இர)

37. ஆனை குதிரைரத ளொட்டை-ரதம்
ஆசையோடேறுமுடலொட லொட்டை
ஞானமி லாதகண் பொட்டை-என்ற
காதன் குருவறி வித்ததைப் போற்றி (இர)

38. அரச னரண்மனைக் கோட்டை-சூழ
அன்பர் நடனம் புரிகின்ற பாட்டை
இரவும் பகன்மனச சோட்டை-வைத்த
இன்பக் குணங்குடி யானருள்போற்றி (இர)

ஆக பாடல்-280.



# நிராமயக்கண்ணி.



ஆதி முதலே யகண்டபரி பூரணமென்
றோதுவ குடிகொண் டோனே நிராமயமே. 1

தேசிகனானென்றே திருநடன மாடுகின்ற
வாசாம கோசரமே வாழி நிராமயமே. 2

சுத்தத் திருவடியிற் சொக்கி யருள்பெறுமுன்
செத்திறந்து போனாலென் செயவே னிராமயமே. 3

கண்ணே மணியேயென் கண்ணிறைந்த காரணமே
விண்ணேமெய்ஞ் ஞானவெளியே நிராமயமே. 4

எந்த விதமென் னிசயந் தெளிவதற்கே
பந்த வினையகலப் பாராய் நிராமயமே. 5

இறந்தான் முதலகத்தி லென்னதியா னென்பதெல்லாந்
துறந்தானே யந்நிலையே சொல்வாய் நிராமயமே. 6

வற்றாச் சமுத்திரமே வள்ளலே வான்பொருளே
சித்த ருளத்திற் றெளிவே நிராமயமே. 7

உம்பர்க்கு மெட்டாதென் றொன்றிமறை யோலமிட்ட
செம்பொற் கிரியே செயமே நிராமயமே. 8

பேய்ச்சுக் கடங்காத பேரின்பத் தேனமிர்தங்
காய்ச்சி வடித்த கடலே நிராமயமே. 9

அந்தரத்தி னுள்ளேநின் றாடுதிருக் கூத்ததனை
சிந்தை யறிகிலனென் செய்வே னிராமயமே. 10

மோன மவுனமணி மூடிவைத்த பெட்டகமே
தேனமுத வின்பத் தெளிவே நிராமயமே. 11

மண்பட்ட நெஞ்ச மயக்கமெலாந் தீரவருள்
பண்பட்டார்க் கல்லோ பயனகா ணிராமயமே. 12

மனவாக் கனுகா மறைநதவான் செஞ்சுடரே
இனமாதி யற்ற விறையே நிராமயமே. 13

பார்க்குமிட மெல்லாம் பரிபூ ரணமாக
ஏற்கையுட னின்ற வியல்பே நிராமயமே. 14

விண்ணுமுதன் மண்ணாய் விளங்கிநின்ற மெய்ச்சுடரே
கண்ணேயென் னின்பக் கடலே நிராமயமே. 15

துன்புறுமென் னெஞ்சத் துயரமெலாந் தீர்க்கவெனக்
கன்புருவாய் நின்ற வருளே நிராமயமே. 16

அங்கிங் கெனவொண்ணா வகண்டபரி பூரணமாய்
எங்கு நிறைந்த விறையே நிராமயமே. 17

நாட்டு மிருவினையு நாட்டாருன தருளின்
றேட்டாள ரென்ற திறமே நிராமயமே. 18

படர்ந்த மனங்குடியாம் பகருவர்பா சாடவியைத்
தொடர்ந்து தொடர்ந்துவெட்டத் துணிவார் நிராமயமே. 19

உத்தமர்கட் காகா வுலுத்தப் புலையரெனும்
பித்தர் நெறியுளரோ பேசாய் நிராமயமே. 20

பாவபுண்ணி யத்தைப் பறக்கவிட்ட பத்தர்தமக்
கேவல் விலகவிலை யென்றாய் நிராமயமே. 21

முத்திதரும் வேத மொழிநத் வழிநடக்கப்
பெற்ற குருவென் பிணைகா ணிராமயமே. 22

ஊத்தைப் பிணமா முடலை யிடிசுவரை
ஏற்ற படிவிடுத லீனநிராமயமே. 23

வஞ்ச மழிந்து வருபாசம் விட்டொழிந்து
நெஞ்சந் தெளியநெறி நிற்பார் நிராமயமே. 24

தொந்தங்கடிந்தே சுபமனையி னல்லாலென்
புந்தி மயக்கம்விட்டுப் போமோ நிராமயமே. 25

வாராக் கருணைமழை வந்துபொழிந் தாலொழியத்
தீரா மனமயக்கந் தீரே னிராமயமே. 26

பாயும் பசுபாச மடிய மடியவரு
டாயனைய வின்பந் தருவாய் நிராமயமே. 27

அய்யனே யென்னை யணைத்தாட்கொண் டாளவந்த
மெய்யனே நாதவெளியே நிராமயமே. 28

கூரு மலத்தைக் குணங்குடிபோ மனபருக்கு
யாரை நிகரிவெ னையா நிராமயமே. 29

பித்தம் பிடித்தலையும் பேய்க்குரங்கு போற்கரணம்
புத்தி தனையலைக்கப் போமோ நிராமயமே. 30

தஞ்சமெனு ஞானத் தடாகம் முழுகுநர்க்கு
விஞ்சிய நாத விளக்கே நிராமயமே. 31

ஆரிங்கென் னார்போயென் னாவிக்குறுந் துணையாம்
பேறுபெறச் செய்தாற் பிழைப்பே னிராமயமே. 32

போகாக் கவலைப் புழுக்கமெல்லாந் தீருதற்கு
வாகா யருள்புரிய வாராய் நிராமயமே. 33

காமக் க[illegible]டக்கக் கர்த்தவியக் கப்பல் வைத்தால்
நேமநிட்டைக் கம்பம் நிலைகா ணிராமயமே. 34

நின்னைச் சரண்புகுந்தா னிர்மூட மாகவெனை
யென்னத்துக் காட்கொண்ட தியம்பாய் நிராமயமே. 35

சிந்தை யறிவைச் சிதையவிட்டுன் னருள்பெறவே
வந்தேற்குன் திருக்கருணை வைப்பாய் நிராமயமே. 36

தேனமுதே பாகு திரண்ட பெருங்கடலே
வானவர்க்கு மெட்டா மணியே நிராமயமே. 37

இந்த விதய மிணங்கி வணங்கவரு
டந்தடிக்காட் கொண்ட தானு நிராமயமே. 38

இடம்பொரு ளேவ லெவையு மறந்தருணங்
குடியார்க் குவமை குறியே னிராமயமே. 39

ஆழாழிதானு மணைகடவா தாணை தனிற்
றூழ விலையோவென் றூயே நிராமயமே. 40

தீது நலமறியேன் றிசைநாக மற்றெவையும்
ஈதென் றறியே னெளியே னிராமயமே. 41

மீளா வெளியில் விழற்கிறைத்த நீரெனவும்
பாழி லலைவதுமென பாவம் நிராமயமே. 42

ஈன்றெடுத்த மாதாவெனையாட்கொண்டாள்வதென
ஆண்டணைப்ப தென்றோ வருளாய் நிராமயமே. 43

சாத்திரங்க ளோதுஞ் சழகர் தமக்கு மருள்
மாத்திரைப்போ தேனும வருமோ நிராமயமே. 44

அய்யனே மெய்யருளி லாசையற்ற நீசனுக்கும்
உய்யுந் திருக்கருணை யுண்டோ நிராமயமே. 45

காதறருங் கண்ணீர்க் கரைபுரள நின்றவர்க்குச்
சூதுதருங் கண்ணீர் தொலையும் நிராமயமே. 46

வஞ்சங் குடியிருந்து வாழு மனத்தினருக்
கெஞ்சா திருக்கு மிருப்பே நிராமயமே. 47

பற்றற்று நின்ற பரம பதத்தினருக்
கேத்தொழிலுஞ் செய்ய வியல்போ நிராமயமே. 48

வாதே யகண்ட குணங் குடிவாழ வைத்தாயே
ஈதே பெருமையெனக் கென்றாய் நிராமயமே. 49

என்றுமிருப் போமென் றெண்ணியெண்ணி யென்னிதயஞ்
சண்டை பிடிக்கச் சரியோ நிராமயமே. 50

மட்டுக் கடங்கா மயக்கமெல்லாந் தீர்த்துவெளிப்
பட்டோர் கட்கல்லோ பயன்கா ணிராமயமே. 51

மன்னு முயிர்க்கு மறலி வரும்பொழுதில்
உன்னையன்றி யார்தா முளரோ நிராமயமே. 52

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணி யிடைந்துமனம்
புண்ணாவதற்கோ புகுந்தே னிராமயமே. 53

உள்ள துரியதெல்லா மொழியா துரைத்தவெனைத்
தள்ளி விடததான் றகுமோ நிராமயமே. 54

வன்னத திருக்கருணை வாழுந திருவடிக்கே
எண்ணத்தைச செயவே னெளியே னிராமயமே. 55

கற்ற படிநடக்கக் கல்லாத பாவியெனைச
சித்தந தெளியவருள் செய்வாய நிராமயமே. 56

பேச்சற்றுஞ் சிந்தை பிரக்ஞையு மற்றபதம்
வாயசசார்க்கல் லோமவுனம் வாயக்கு நிராமயமே. 57

நிஷ்டை நிருவிகற்ப நித்திரைகொண டேயிருக்க
அஷ்டாங்க யோகமெனக் கருளாய் நிராமயமே. 58

தொல்லுலகி லல்லற் றுயரமெலாந தீர்க்கவொரு
சொல்லருளாய் வநத துரையே நிராமயமே. 59

உயிர்த்துணை வரேனு முளந்தெளியா வுலுத்தரையோர்
மயிர்க்கு நிகர் குறிக்க மாட்டே னிராமயமே. 60

கொல்லா விரதத்தைக் கொள்ளக் கொலைஞருள்ளங்
கல்லாகத் தானோ கணித்தாய் நிராமயமே. 61

எத்தனையோ வுத்தி யெடுத்தெடுத்துச் செய்யுமுடல்
உற்று ரிருக்க வுடையு நிராமயமே. 62

வாயே புலம்பி வருபாசப் பேய்பிடித்த
தீயனெனச் சொன்னாலென் செய்வே னிராமயமே. 63

தாயிருக்கப் பிள்ளை தளரா தொருபோது
நீயிருக்க நான்றளர நேரோ நிராமயமே. 64

சொல்லுக் கடங்காச் சுகங்காண் டிறவிகட்கு
நல்லறிவு சற்றேநகுங்கா ணிராமயமே. 65

மத்திபத்தி னூடே மறைந்த மணிவிளக்கை
நித்தம் விளங்கவரு ணேராய நிராமயமே. 66

மெத்தப் படித்த வெறுமபாசப் பித்தருக்கே
சித்தந் தெளியாதென் செயகே ணிராமயமே. 67

கள்ள விருளைக் கடந்துகரை யேறுதற்குத்
தெள்ளியவான் சோதித் திரளே நிராமயமே. 68

ஒட்டாதே யுன்னைவிட்டு மோட்டி நயமிடரில்
மாட்டாதே யான்பொறுக்க மாட்டே னிராமயமே. 69

தன்னை யறிந்தாற் றலைவன் றனையறிந்த
தெனனு மொழியே யிதங்கா ணிராமயமே. 70

அபய மெனைககாப்ப தண்ணலே யுன்னுபய
முபய முபயமுன துபய நிராமயமே. 71

பிரியா வுனதடியைப் பின்றொடர்ந்தார் பின்றொடர
அறியாச சிறியேனென் னையா நிராமயமே. 72

துற்குணமே கொண்ட தொழும்பனியான் றொல்லுலகிற்
கற்குணத்தா ரென்போலுங காணே னிராமயமே. 73

பொய்யுங் கவடுமுள்ளே பூட்டிவைத்தபெட்டகமாய்
நையு முடலெடுத்தே ஞன்கா ணிராமயமே. 74

கங்குல் பகலொழிந்த காரணர்க்கோ நின்னருளைப்
பங்கு கொடுத்தாய் பகராய நிராமயமே. 75

தேறாப் பிரபஞ்சத் திடுக்கமெல்லாந் தீர்ந்தவர்க்கு
மாறா வருணிலைதான் வாய்க்கு நிராமயமே. 76

சருவதயா நிதியாய்ச் சஞ்சரித்த நெஞ்சினர்க்குப்
பிரியா வருணிலைதானு பேரும் நிராமயமே. 77

பாத முடிநடுவும் பக்கமூன்னும் பின்னுமற்ற
நாத வடிவே நவமே நிராமயமே. 78

பேசா விடமறிந்தும் பேய்க்குரங்கு போற்கருவி
ஊசாடவேதே னுரையாய் நிராமயமே. 79

எனையாட்கொண் டாளவரு மென்குருநா தன்வடிவந்
தனையார்க்குஞ் சொல்லத் தருமோ நிராமயமே. 80

கொப்புவித்தி னுள்ளே குடியிருந்த கொள்கையென
எப்பொருட்குஞ் சித்தா யிருந்தாய் நிராமயமே. 81

கூறுங் கருவி குடிபோன வமபருக்கே
யாரும் நிகரோவென் னையா நிராமயமே. 82

சிந்தை சிதையாச சிவராஜ யோகநிலை
வந்தோர்க் கருள்புரிய வந்தாய் நிராமயமே. 83

கோடானு கோடிமறை கூறவறி யாதவனைத்
தேடுகின்ற தென்றேவென் றிறமே நிராமயமே. 84

பிரியா வருணிலையைய பெற்றார்பெற் றாரெனவு
மறியா வெறியனையா வையா நிராமயமே. 85

எமனூர் விடுதா தெனும்பாசக் கட்டறுத்தோர்
நமனூர் தமக்கு நமனு நிராமயமே. 86

தூலங்கு மருண்மயத்தைத் தோன்று திருண்மயமாம்
புலனைத்தொலைப் பாயுனக்குப் புண்யம் நிராமயமே. 87

மன்னிக்க வொண்ணு மனக்குறையுந் தாய்பொறுப்பாள்
நின்ன தருளுமந்த நேராம் நிராமயமே. 88

எந்த வறிவை யெடுத்தெடுத்தே யோதினுமென்
புந்தி மயக்கனுவும் போகா நிராமயமே. 89

செகத்துண் மயக்கஞ் சிதறிப் பறக்கவுமென்
றகைப்பறவோர் முததந தருவாய நிராமயமே. 90

உய்த்த துணர்வதெல்லா முயிர்க்குயிர்நீ தானெனவுஞ்
சித்தந் தெளிந்தோர் திறங்கா நிராமயமே. 91

அனைத்துயிரு நீயென் றறிந்தார் மறப்புமுதல்
வினைக்குமா றெஙகே நிகழ்த்தாய் நிராமயமே. 92

நின்செயல்க ளென்ற னினைப்பு மறப்புமுத
வென்செயல்க ளுண்டோ வியம்பாய் நிராமயமே. 93

எறும்பூர வூர விரும்புமுதற் றேய்வதுபோல்
இரும்பூரு மன்பருள மித்தகையே நிராமயமே. 94

கும்பிக் கிரைதேடிக் கொடுப்போர்முகம் பார்த்திதயஞ்
சம்பித் திரியத தகுமோ நிராமயமே. 95

கடலின்மடை கண்டதெனக் கண்ணீர் கரைபுரளும்
அடியன்முகம் பார்த்திரஙகி யருளாய் நிராமயமே. 96

பருவமது செய்யப் படர்பயிராம் பக்குவர்க்குக்
கருவா மருணிலையே கனிகா நிராமயமே. 97

நினைப்பு முதிப்புமெலா நின்செயலென் றன்பருளக
தினைப்போதும் விட்டுத் திரும்பார் நிராமயமே. 98

சிவராஜ யோகந் தெளிநத திறத்தினருக்
கெவலை சரியிலெ தெநதாய் நிராமயமே. 99

அந்திபக லற்ற வகண்டபரி பூரணர்க்கே
சிநதை நிறைநத தெளிவே நிராமயமே. 100

வேதஙக ளாலும் வெளிப்படாச் சுந்தரமாஞ்
சோதியெனக் கென்றே துலஙகு நிராமயமே. 101

எப்பொருளுந் தானு மியங்குமுனைப் பூசைசெய்யப்
புட்ப மெடுக்கவுந்தான் போமோ நிராமயமே. 102

கைப்பொருளைத் தேடிக் கடலோடிப் போவரென
மெய்ப்பொருளைத் தேடி மெலிந்தே நிராமயமே. 103

உயிர்க்குளாயி ராயென் னுள்ளுள் ளுலாவியநீ
தயிர்க்குளுறு வெண்ணெயெனத் தானே நிராமயமே. 104

மூடும் விருக்கிடையா மூக்குநுனிக் கட்கிடைக்கீ
ழாடுந் திருநடனத் தாட்டம நிராமயமே. 105

நீளுங் கரணமுத னெக்குருகி மட்கினர்க்குத்
தாழா வருணிலையைத் தந்தாய் நிராமயமே. 106

கொல்லுதற்கு வந்த கொலைஞரெனப் பாவிமன
மல்லுப் பொருதற்கேன் வைத்தாய் நிராமயமே. 107

பல்லுயிரும் போற்றும் பரம பதத்தினர்க்குச
சொல்லுஞ் செயலுந் தொலையு நிராமயமே. 108

தன்னை யறிந்தாற் றனக்கொருகே டில்லையெனச்
சொன்ன மொழியே சுகங்கா நிராமயமே. 109

புண்ணாய்க் கசிந்துமனம் பூணுகின்ற வன்பருக்குக்
கண்ணீர் கரைபுரளக் கண்டாய் நிராமயமே. 110

மூன்றாற் சுருதி முறையா லெனையறித
னுன்னை யறிதற் குளவா நிராமயமே. 111

அண்டபகி ரண்ட மகண்டபரி பூரணமாய்க்
கொண்டநின்னை யாரறிந்து கொண்டார் நிராமயமே. 112

உன்னையன்றி வேறொன் றுளதோவுண் டாயினதே
இன்னதுவா மென்றே யியம்பாய் நிராமயமே. 113

நெஞ்சகத்தில் வஞ்ச நெகிழாக்கட் டுண்டவருக்
கஞ்சலென்ன னீயென் றறியாய் நிராமயமே. 114

துற்கவலை யற்ற துரியாதீ தத்தினர்க்கு
நற்கவலை தானே நடிக்கு நிராமயமே. 115

விண்ணோடு மண்ணுமுதல் வேணதெலா முன்கருணைக்
கண்ணூா டிடைகிடக்கக் கண்டே னிராமயமே. 116

நாயக்கு விருந்தோ நரிகட்கோ புழுக்கூடு
நீக்கு விறகோ தெரியே நிராமயமே. 117

ஈக்க ளெறும்புமுத லென்ன துவா மென்னுடல்
பேய்க்க டமக்குப்பெறு பேரு நிராமயமே. 118

விண்ணாதி யாவும விளங்குவது நீயெனவென்
கண்ணார வுங்கனவு கண்டே னிராமயமே. 119

இல்லாமை யில்லாதென் றிதயந தெளிவதற்கென்
வல்லாண்மை கொண்டு வருமே நிராமயமே. 120

உன்னையன்றி யாவு முளவோவென் றோதியபின்
என்னையென்னத தில்லைத திசைப்பாயநிராமயமே. 121

கானற் சலமாங் கவிபாசக் கட்டுண்டார்
தானேனே யென்னத் தருமோ நிராமயமே. 122

காட்டுக கொலைவேடன் கைக்குள்சிக்கு மானெனவு
மாட்டித் துயருறவு மாட்டே னிராமயமே. 123

கல்லு முருகுமொரு காலததிலு மென்னிதய
அல்ல லிறுவதில்லை யையா நிராமயமே. 124

காயக் கருவி கரணமுதற் காயவைத்த
நேய ருளத்தி னிறைவே நிராமயமே. 125

பல்லா யிரங்கோடி பகிரண்ட மும்மெவையும்
எல்லா முனதடிக்கா ளென்றாய் நிராமயமே. 126

எனக்கோர் நிகருமில்லை யில்லாரில் வல்லாரில்
உனக்கோர் நிகரொருவ ருண்டோ நிராமயமே. 127

செப்பஞ் செயுஞ்செயலுஞ் சிந்தித்தல் வந்தித்தல்
எப்போ தெனை விட் டியங்கு நிராமயமே. 128

நீராற் றிரள்குமிழி நேர்மைதரு மிவ்வுடலம்
யாரார்க்குக் கைகொடுத்த தையா நிராமயமே. 129

ஒன்றாயப் பலவா யுருவருவா யும்றாயிராய்
நின்றவனை யாரறிய நின்றாய் நிராமயமே. 130

பெற்றெடுத்த மாதா பிதாக்களிருந் தாலுமெனைச்
செத்தவுடன் மண்ணிற் றிணிப்பார் நிராமயமே. 131

எந்த முயிர்க்கே யமனாய் வரும்பாச
பந்த மகலமுகம் பாராய் நிராமயமே. 132

அபய மெனைக்காப்ப தண்ணலே யுன்கடமை
உபய மினியொருவர்க் குண்டோ நிராமயமே. 133

என்னை யுனதடிக்கீ ழிசைத்தாட்கொண் டாளாத
வின்னலையே யெண்ணி மெலிந்தே நிராமயமே. 134

நாமவத்தை யற்ற நவநாத சித்தர்தமைக்
காமக் கரைபுரளக் காணே னிராமயமே. 135

தேங்காய்க் கிளநீர் செழிப்பிற் றிரட்சிதரப்
பாங்கா யருளுவதுன் பார நிராமயமே. 136

கன்னலென வின்பங் கனிந்தொழுகு முன்னடிக்கென்
றன்னாலு மென்னபலன் றாயே நிராமயமே. 137

அமையா மனமமைந்தே யருட்கடிமைப் பட்டவரை
எமனாலு மென்செயலா மெந்தாய் நிராமயமே. 138

ஒன்றுக்கு மெட்டா துறைந்தசுயஞ் சோதியைய
ரண்டர்க்கு மெட்டானை றறிந்தே னிராமயமே. 139

வஞ்சமின்றி யென்னை வழிப்படுத்தி வைக்கவுனை
யஞ்சலற நானடைந்தே னையா நிராமயமே. 140

தாயனைய வின்பந் தருபேரின் பக்கடலில்
வாய்மடுக் கிற்றாகம் வருமோ நிராமயமே. 141

மூன்று ளெமக்கிருந்த மூதறிவினோர் வசனஞ்
சொன்னு லதுவோ சுகங்கா ணிராமயமே. 142

அட்ட திக்கு மண்விண் ணடங்கும் பெருவெளியில்
நட்ட நடுவிருந்த நாதா நிராமயமே. 143

தீது நல்முதலாஞ் செய்கை யகலவைத்தால்
ஈதொன்றும் போதுமெனக் கீந்தாய நிராமயமே. 144

கெர்ப்பத்தி லென்னைக் கிடத்தியமு தூட்டுமெனக்
கொப்புவமை யாதென் றுரைப்பே னிராமயமே. 145

எவ்வுலகு மேவற் கிணங்காதோ நின்னருடான்
செயவிக்கப் பட்டோர்க்குச செப்பாய் நிராமயமே. 146

தன்றேசம் விட்டுத் தனித்த தபோதனர்க்குச
சென்றுழி யெல்லாஞ் சிறப்பா நிராமயமே. 147

சிந்தைக் கலக்கஞ் சிதறிவிடச் செய்வதுவே
எந்தத்தவத் தினுநன் றெந்தாய் நிராமயமே. 148

தேடுவது நாடுவதுஞ் சிந்தைத் திருநடன
மாடுவது முன்னடியார்க காசைநிராமயமே. 149

கண்ட பகலிரவுங் காணுர்க்குஞ் சூரியனு
ரென்றெழுநா மென்ன வியமபாய நிராமயமே. 150

செத்த சவமென்றுஞ் சின்னஞ் சிறியரென்றும்
முத்தர்க் கிருக்கு முறைகா ணிராமயமே. 151

சட்ட ரசங்கள்முதற் சருவவில் லங்கசுத்தி
இட்டார்க் குனதருள்வந தெய்து நிராமயமே. 152

ஆகமத்துக் கெட்டா வகண்டபரி பூரணமாம்
ஏகவெளி யன்றோ வியம்பாய் நிராமயமே. 153

தேக முடையுமெனத் தேர்ந்த மனத்தினர் போற்
பாகபக்கு வத்தைப் படையே னிராமயமே. 154

நாழியுப்பு நாழியப்பும் நாழியாந் தன்மையுமுப்
பாழெய்தி னூர்க்கோ பகராய நிராமயமே. 155

கொத்தோ டடிமை குடியாக வென்றனையுன்
பத்தருக் கெனரோ படைத்தாய நிராமயமே. 156

எந்த வுயிரு மெமதுயிரென் றெண்ணியெண்ணிச
சிந்தை தெளியவருள் செய்வாய நிராமயமே. 157

அந்திபக லற்ற வகண்டிதா காரமுமென்
புந்தி வெளிக்குப் புகுமோ நிராமயமே. 158

உள்ளுள் ளுயிரா யுறைந்த வுனைத்தொழவே
பள்ளி யறையேன் பகராய் நிராமயமே. 159

மேலிட்ட வாணவத்தை மெலியவிட்ட மேலவர்க்கு
மூலத் தெழுந்த முனையே நிராமயமே. 160

மூலமுத லாறுதல முட்டிநின்ற குண்டலியின்
பாலிற் கதிதேகப் படுமோ நிராமயமே. 161

பஞ்சசுத்தி செய்த பழவடியா ரென்னவுன்னை
யஞ்சலி செய்தே யடைந்தே னிராமயமே. 162

தொண்டர்பணிக் காளாய்ச் சுதைப்படுத்தி விட்டுவிடற்
கென்றிரங்கு வாய்கருணை யெந்தாய நிராமயமே. 163

ஓவியத்தைப் போலே யுறைந்த மனத்தினரென்
றூவிக் குறுதுணையா மையா நிராமயமே. 164

விரிந்த சரியைமுதன் மேவிநின்ற மெய்ஞ்ஞானக்
கரும்புமுதற் கண்டெலவுங் கண்டே னிராமயமே. 165

அஞ்ஞானம் விட்டே யறந்தாங்கி வந்தவர்க்கு
மெய்ஞ்ஞானந் தானே விளங்கு நிராமயமே. 166

தின்றுடுத்திப் பூண்டு திரியவெணப் பாவிமனச்
சண்டி புரளச்சரியோ நிராமயமே. 167

எம்மா விசைந்த விருவினையும் போகவிட்டெ
சும்மா விருக்கச் சுகந்தா னிராமயமே. 168

பாசவினை யெல்லாம் பறந்திடமெய்ஞ் ஞானவைவாள்
வீசவருடானே விளக்கா நிராமயமே. 169

தன்னி லிருந்த தலைவன் றனையறியா
தென்னையறிக தெவ்வும்பல னெந்தாய நிராமயமே. 170

உன்னை மறப்பிக்க வுருவெடுத்த வாணவப்பேய
தன்னை மறப்பிகக்த் தகாதோ நிராமயமே. 171

இல்லாத மாயை யெனைத்தொடரா வண்ணமொரு
சொல்லருளச் செயயென் றுரையே நிராமயமே. 172

துற்குணமே கொண்ட தொழும்பனியான் றெல்லுலகிற்
கற்குணத்த ரென்போலுங் காணே னிராமயமே. 173

பொல்லாவென் னெஞ்சம் புழுங்க வருகவலை
சொல்லுக் கடங்காச சுகங்கா ணிராமயமே. 174

அலையு மனத்தை யகத்தடக்கு மன்பருளம்
உலையி னிடுமெழுகுக் கொப்பா நிராமயமே. 175

எழுகடலு மோர்கடுகி னிடையிற்றதக் கற்றூனும்
வழுவு மனத்தினர்க்கு வாயே னிராமயமே. 176

போருக்கே வந்தெதிர்த்த போக்கிரிபோ லென்னிதயம்
தீரம்பே சுவதென்ன செய்வே னிராமயமே. 177

சோம்பே றிகள்போற் சுருண்ட மனத்தினர்க்குக்
காம விகாரங் கசப்பாம் நிராமயமே. 178

ஒழியாப் பிரபஞ்சத் துறவை மறவார்க்குக்
கழியிற் பனொரைக் கதிகா ணிராமயமே. 179

புந்தி யிதமகிதப் பூட்டுவிட்ட போகர்தமக்
கந்தி பகலறுமென் னையா நிராமயமே. 180

நானே நெருப்பாறு நடக்குமயிர்ப் பாலமும்யான்
றானே யெனுமறிவைத் தாராய் நிராமயமே. 181

மின்னனைய பொய்யுடலை மெய்யென்ற பொய்யரினி
என்ன கதிபெறுவா ரெநதாய் நிராமயமே. 182

கருவிப் பெருவெளியிற் கருததைச் செலுத்தாருக்
கருவி சொரியவரு வாரகா ணிராமயமே. 183

தேயாபஞ் சாக்ஷரவா டீட்டேந திறததினர்க்குக்
காயா புரிக்கோட்டை கனங்கா ணிராமயமே. 184

பூமிப் பரப்பைவலம் போயவரினும் பாவிகளைக்
காம வினையகலக் காணே னிராமயமே. 185

கோணற் கருப்பிரசங் கோணாது கொள்கையென்றன்
ஆணவத்தி லூநத னறிவா நிராமயமே. 186

கானலைநேர் பொய்யுடலைக் கல்லாகக் கண்டவர்க்கு
நாணமை நின்றே நடிக்கும் நிராமயமே. 187

சலக்குமிழி போன்றவென்றன் சிற்றுடற்கு மித்தனையோ
கலக்கமதை வைததாயென் கண்ணே நிராமயமே. 188

பொய்வாழ்வை நம்பும் புலையர் தமக்குனது
மெய்வாழ்வு வந்து விடுமோ நிராமயமே. 189

கனக்கு மிருவினையாங் காவடியைத் தூக்குவதற்
கெனக்குமுடி யாதினிமே லெந்தாய் நிராமயமே. 190

துறவின் றிச்செய்வினையின் றொகைப்பலனேதென்பவர்க்கு
நரகசொர்க்க மென்றே நவின்றாய் நிராமயமே. 191

காதொடுகண் வாய்மூக்குங் கண்டமெய்யோ டையறிவும்
வாதாடு தற்கோ வளர்த்தே னிராமயமே. 192

மாதா பிதாவும் வருந்தி வருத்திவைத்த
போதனையைப் பார்க்கிற் பிழைகா ணிராமயமே. 193

செல்லு மளவுஞ் செலுத்துகின்ற சிந்தையினோர்க்
கல்லும் பகலுமறு மையா நிராமயமே. 194

வேதச் சுமையதனை வீம்புக் கெடுத்தவுடன்
மாதவதனிற் கெங்கே வனையும் நிராமயமே. 195

நரம்பென்பு தோலா னடிக்கின்ற பாவைதனிற்
குரும்புமுத லெல்லாங் குடிகா ணிராமயமே. 196

தூலத்து னிசைதொலைத்தோரிஞ் ஞாலமுதல்
ஆலத்துக் கொப்பென் றறைந்தாய் நிராமயமே. 197

வானேற நூலேணி வைத்தாற்போ லுன்னடிப்பால்
நானேறு வேலென்ற நாட்டம் நிராமயமே. 198

மைந்தர்களைப் பெற்று மறலிக்களித் தாரெனவென்
சிந்தைநெருப் பாயெரியச் செய்தாய் நிராமயமே. 199

நாலு திக்கி னும்விஜய நாட்டுமன்னர் கோட்டையெல்லாம்
பாலர்மணற் சோற்றின் படியாம் நிராமயமே. 200

பாட்டைப் படித்ததனாற் பகர்ஞான வானென்ப
தேட்டுச் சுரைக்காயக் கியல்பாம் நிராமயமே. 201

கின்ன தருளன்றி நிறைவுகுறை யென்பாருக்
கென்ன கதிமுடிவி லெந்தாய் நிராமயமே. 202

தேகாபி மானத் திரைகடந்த தேசிகர்க்கு
மோகங்க ளெங்கே முயலும நிராமயமே. 203

சித்தந் தெளிந்த சிவஞா னியருலகப்
பித்த ருறவைப் பிடியார் நிராமயமே. 204

புத்தி தெளியாப் புலத்தோர் தமைத்தவத்துன்
மத்த மனுஷரென மாட்டே னிராமயமே. 205

தொல்லைப் பெறுமல்லற் றொலைத்தாருக் கேதோன்றுஞ்
சொல்லத்தா னுண்டோதான் சொல்லாய் நிராமயமே. 206

போக்கும் வருத்துமெல்லாம் பொய்யென்ற புண்ணியர்க்கு
நீக்கு மருளுண்டோ நிகழ்த்தாய் நிராமயமே. 207

எத்தனையோ கற்று மிதந்தெளி யாதிருந்த
பித்தருட னேசம் பிழைகா ணிராமயமே. 208

வஞ்சப்ர பஞ்ச மயக்கொழிந்தா லல்லாதுன்
அஞ்சலெனும் பேரருளி லாகே ணிராமயமே. 209

அண்டு மிருவினைப்பே யண்டா தடிப்பவர்க்குத்
தொண்டுசெய்வார்க் கன்றோ சுகங்கா ணிராமயமே. 210

என்னெஞ்சந் தானே யெனைக்கெடுக்கு மின்னுமெனைச்
சின்னப்படுத்தி லென்ன செயவே ணிராமயமே. 211

மூடு மெனதறிவே மூடி யிருந்தாலுன்
ஆடுமறி வெங்கேகின் றாடு நிராமயமே. 212

ஓடியே யுள்ளமட்டு மோடி யிதமயங்கி
வாடியே நின்சமுகம் வந்தே ணிராமயமே. 213

மூட்டா ளெனும்பட்ட முழுதுமெனக் கீயவுனக்
கிட்ட மிருந்தா லியம்பாய் நிராமயமே. 214

ஆலமுறுந் தால மளித்தியமென் போர்க்காசை
மாலெங்கே நின்று வருங்கா ணிராமயமே. 215

ஆர்ப்புக் குயிரான தண்டபகி ரண்டமுமாந
தாற்பரியஞ் சொல்லத் தகுமோ நிராமயமே. 216

எண்டிசையுந் தானு மியங்கு முனைத்தொழுதங்
கண்ட சராசரகின் றுடுமெ நிராமயமே. 217

காற்றுடி போலக் கருத்துவந்து தேடியுனை
ஆற்று தயர்ந்தேனென் னையா நிராமயமே. 218

எல்லாம் படித்துநடப் பெய்தினரின் புற்றனர்மற்
றல்லாரை யாரென் றறிவே ணிராமயமே. 219

அன்னைசுற்ற மெல்லா மகலவிட்ட வன்பர்தமக்
கின்ன லகலுமற் றெவர்க்காம் நிராமயமே. 220

சாருதனீ யன்றியில்லைச் சத்தியா மென்மனத்தை
ஆராய வேண்டாமென் னரசே நிராமயமே. 221

தத்து மனத்தினர்க்குத் தாரபலன் போகிறதை
எத்தனையென் றேயுரைப்ப தெந்தாய நிராமயமே. 222

கொல்லுங் கொலைக்கஞ்சாக் கொலைஞனெனும் பாவிமனத்
தொல்லையைத் தீர்க்கச சுகங்கா ணிராமயமே. 223

உன்னையின்றி யென்னை யொதுக்கிவைப்ப தெந்தநெறி
அன்னையன்றிச் சேய்தானுண் டாமோ நிராமயமே. 224

பொங்கு கருணைப் புறச்சுழித்தார் கள்ளமனம்
வங்கமங்கே யோடி வருங்கா ணிராமயமே. 225

கல்லாத கல்வியெல்லாங் கற்றுயர் ஞானகலை
இல்லார்க்கு மின்பநிலை யேதோ நிராமயமே. 226

விளக்குஞ் சுடரினையும் வேறுவே றெண்ணுருக்
குழக்குளப்பு முப்பெனவு மொன்று நிராமயமே. 227

சார்ந்தோரைத் தூடணிக்குந் தப்பிலிக ளைப்புவியில்
என்றான் படைத்ததுதா னெந்தாய் நிராமயமே. 228

புத்தி யகங்காரம் பூணு மனமிறக்கிற்
சித்த மகத்துவத்தைச் சேரும் நிராமயமே. 229

நானே திருவடியை நாடுவதுந் தேடுவதும்
ஆனா லதுபெரிதா மையா நிராமயமே. 230

காற்றுத் துருத்தியைந்து கள்வர் புலைக்குடிலே
சோற்றா லெடுத்தத சுவர்கா ணிராமயமே. 231

மன்னுங் கலைஞான மார்க்கமறிந் தோர்க்குமுறும்
அந்நியங்க ளேது மறியார் நிராமயமே. 232

சென்னிக் கிசையாச் சிவராஜ யோகனிலே
வுன்ன மலர்ப்பதத்தை வைத்தே னிராமயமே. 233

சென்ம மெடுத்தாற் ஜெகமாயை விட்டொழிந்து
நன்மை பெறுத னயங்கா ணிராமயமே. 234

பாச மறவார் பரமபதத் தினர்போற்
பேசிலவர் கூடவுநான் பேசே னிராமயமே. 235

கோரம் வழிகாட்டி நிச்சயத்தைச் சொல்லவெனக்
காருன்னை யன்றி யரசே நிராமயமே. 236

வாசகத்தின் ஞானமெல்லாம் வந்ததுபோற் பேசியையோ
மோசப் படவு முறையோ நிராமயமே. 237

பெட்டி நிறையப் பெருக்கிவைதத பெட்டகத்தாற்
குட்டிச் சுவரென்றோ குறித்தாய நிராமயமே. 238

மனம்பாச மற்றுநிற்க வாயாலுனைப் புகழும்
இனங்கள் முழுதுமெனக் கெதிர்கா ணிராமயமே. 239

வாசனையைப் போக்கும் வரமுண் டெனவொருசொல்
நீசருக்கு முண்டோ நிகழ்த்தாய நிராமயமே. 240

அன்னைப் பிதாவு மணைநதகுற்ற வாக்கினைக்கோ
என்னைப் பிறக்கவைத்தா யெந்தாய் நிராமயமே. 241

மாதா பிதாவும் மயறீர்ந்த வாற்றினுக்கு
வாதோ வெனைப்பிறக்க வைத்தாய் நிராமயமே. 242

பின்னை யொருவர்செய்யும் பிழைக்குப் பரிகாரம்
என்னைத் தெருவில்விட்ட தேன்கா ணிராமயமே. 243

தொண்டாசை கொண்டோர் துயிலார் மூகத்தனைக்கக்
கண்டுயிலா ரன்பரெனக் கண்டாய் நிராமயமே. 244

ஈனத் துக் கேற்றவுட லென்னதென்ன தென்பதுவும்
ஞானத் துக் கேற்றவர்க்கு நன்றோ நிராமயமே. 245

ஆசைக் கடலி னலைவாய்ப்பட் டேயலைந்து
மோசப் படுதன் முறையோ நிராமயமே. 246

எட்டிரண்டு மின்னதென்று மேலையறி யாதபடி
வெட்டவெளிப் பேதையென் விட்டாய் நிராமயமே. 247

பித்தம் பிடித்தபிர பஞ்சத்தார் போலன்றோ
முத்தர்க் கிருக்கு முறைகா ணிராமயமே. 248

காமக்கு ரோதமத மாச்சரியக் காரருக்கே
ஆமோ இருக்கருணை யையா நிராமயமே. 249

ஜெகத்து மயமாயு தேஜோ மயமாயும்
அகத்து டணுவான தன்றோ நிராமயமே. 250

கேசாதி பாதமுதல் கொர்ப்பக் குவட்டில்வைத்த
ஈசா வுனக்கே யியல்பாம் நிராமயமே. 251

எக்கலைக்குஞ் சொக்கா தியங்கு முனைத்தொழுதல்
நிற்கவலைக் கெல்லா நிலைகா ணிராமயமே. 252

அகத்து விழியுமறி தற்கரி தாயவுன்பால்
முகத்து விழியோ முயலும் நிராமயமே. 253

திக்கு விஜயஞ் சிவராஜ யோகியர்க்காந்
துறக்க வலையோர்க்குத் துறையோ நிராமயமே. 254

வாழுகிறோ மென்றே வலக்காரம் பேசிலையோ
ஏழாம் நரகுக் கிரைகா ணிராமயமே. 255

ஈடெனக் காரென்றே யெதிர்பேசு மட்டியுடல்
நீடேழி கால நிலையோ நிராமயமே. 256

பூகாய்க் கசிந்துருகும் பரம பதத்தினர்க்குத்
தேகாபி மானமெலலாந் தீயு நிராமயமே. 257

ஆவியுடல் பொருளுமடங் கக்கொள்ளை கொண்டுமெனைப்
பாவியென்று தள்ளப் படுமோ நிராமயமே. 258

அளந்தாலு மிந்தவுல கவ்வளவு மெவ்வளவும்
உளந்தெளியா ருக்கருடா னுண்டோ நிராமயமே. 259

சொன்ன படிக்கிணங்கா துட்டன்யா னாகிலுமுன்
வன்ன மலர்ப்பதத்தை வைப்பாய் நிராமயமே. 260

பாத முடியின் பரமார்த்த மானவுனக்
கேது வடிவென்றே யிசைப்பே னிராமயமே. 261

முன்னா லிருந்த முறைபோலு மூர்த்திகராய்
எந்நாள் வருவதெனக் கெந்தாய் நிராமயமே. 262

மடக்கெடுத்து வீசி மணல்குடித்த நீரதனால்
கடற்குறை யுண்டோவென் கண்ணே நிராமயமே. 263

தானேதா னெவ்வுயிர்க்குந் தற்பரமாய் நிற்பதுடல்
ஊனாகிக் கொண்ட வுளவே நிராமயமே 264

பாச மொழித்துநெறி பற்றிநின்ற வித்தகர்க்கு
வீசுந் திருக்கருணை வீசும் நிராமயமே. 265

கற்றகல்வி யற்று கன்மமுதல் பாசமற்று
உத்தமர்க்குச் சித்த மொடுங்கு நிராமயமே. 266

சித்த நிரஞ்சனத்திற் சென்றிருக்க வல்லார்க்குப்
புத்தி நிருவிகற்பம் பூணும் நிராமயமே. 267

நீட்டிக் குறுக்க நெடும்பலகையென் பாரதுபோற்
காட்டி யறைக்கக் கணக்கோ நிராமயமே. 268

கற்பூர வுண்டை கரைவதுபோ லக்கரையுங்
தற்போத கர்க்கருளை தந்தா னிராமயமே. 269

தேனோடு பாகாய்த் திரண்டமுத மென்னவுமென்
ஊனோ டுடலோ டுறைந்தாய் நிராமயமே. 270

கண்டித்த வெள்ளுங் கரும்பும்போ லும்மெனது
கண்டித்தன் மெய்யதற்குச் சார்நீ நிராமயமே. 271

ஐந்துபுல வேடருக்கே யாளாக்கி ஞானுனக்கு
வந்தபல னென்னோ வழுத்தாய் நிராமயமே. 272

ஓயாக் கவலைக் குரித்தாம் புழுக்குரம்பை
ஆயே னெனவகுத்த தையா நிராமயமே. 273

ஐவர்க்கு மென்னை யடங்கச்சிறை யாக்குவது
உய்யுங் கருணைக் குளதோ நிராமயமே. 274

ஊசிதனைக் காந்த முகந்தணைக்கு மாறெனவே
பாசத்தைப் போக்கியருள் பாராய் நிராமயமே. 275

உள்ளந் தெளிந்தே யொளியாய்ப் பிறங்கினர்க்குக்
கள்ளமெனளி யக்கனவு கண்டே னிராமயமே. 276

அற்புதமே நிர்க்குணமே வன்பர்க் கருள்புரியுஞ்
சற்குருவே யெங்கள் சலுவே நிராமயமே. 277

அழியா வருள்வாழி யள்ளியடி யேன்றனக்கா
மழையாய்ப் பொழிந்தாய்நீ வாழி நிராமயமே. 278

முத்தர்க்கும் வாழியெங்கள் முன்னோர்க்கும் வாழியருள்
வித்தகர்க்கும் வாழியெங்கும் விளங்கும் நிராமயமே. 279

ஒழியா வருள்வாழி வுத்தமர்க ளும்வாழி
அழியாப் பதிவாழி யையா நிராமயமே. 280

குன்றாக் குணங்குடிகொண் டோராமெம் வித்தகரும்
எந்நாளும் வாழியருளெந்தாய் நிராமயமே. 281

நிராமயக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல் — 563.



# பராபரக்கண்ணி.



அண்ட புவனமென்று மாடுதிருக் கூத்தினையான்
கண்டு மகிழ்ந்திடவே காட்டாய் பராபரமே. 1

ஆதியா யாண்டவனு யஃதுவாய் நின்றபெருஞ்
சோதியாய் நின்மலமாய்ச சூழ்ந்தாய் பராபரமே. 2

வேத மறைப்பொருளே வேதாந்தத் துட்கருவை
ஓதி யுனையறிந்தா ருண்டோ பராபரமே. 3

அண்ட புவனமுட னாகாச மென்றுசும்பிக்
கொண்டாடு மெய்ஞ்ஞானக் கூத்தே பராபரமே. 4

நாவாற் புகழ்க்கெட்டா நாயகனே நாதாந்தப்
பூவாய் மலர்ந்திருக்கப் பூத்தாய் பராபரமே. 5

பேராற் பெரிய பெரும்பொருளே பேதைதனக்
காரா ரிருந்தும்பல னுமோ பராபரமே. 9

மாறாய நற்கருணை மாரிவரு ஷித்திடவே
பாராயோ வையா பகராய் பராபரமே. 7

ஆறுனு முன்பாதம் பூசித் திருப்பதற்குத்
தானு மிரங்கியரு ளாராய் பராபரமே. 8

நாதாந்த மூல நவீட்டுக் குள்ளிருக்கு
மாதவத்தோர்க் கான மருவே பராபரமே. 9

உடலுக் குயிரேயென் னுள்ளமே யுன்பதத்தைக்
கடலுமலை யுந்திரிந்துங் காணேன் பராபரமே. 10

மாந்திரத்துக் கெட்டா மறைப்பொருளே மன்னுயிரே
சேர்ந்தவெழு தோற்றத்தின் சித்தே பராபரமே. 11

தனியேனுக் காதரவு தாரணியி லில்லாமல்
அனியாய மாவதுனக் கழகோ பராபரமே. 12

ஓடித் திரிந்தலைந்து முன்பாதங் காணாமல
வாடிக் கலங்குகிறேனை வாராய் பராபரமே. 13

தூராதி தூரந் தொலைத்துமதி னுன்பாதம்
பாராத பாவத்தாற் பயநதேன் பராபரமே. 14

தேடக் கிடையாத திரவியமே தேன்கடலே
ஈடுனக்கு முண்டோ விறையே பராபரமே. 15

அரிய பெரும்பொருளே யன்பா யொருவார்த்தை
பரிபூ ரணமாய்ப் பகராய் பராபரமே. 16

ஐயோ வெனக்குதவு மாதரவை விட்டுவிட்டுத்
தையலரைத் தேடித் தவித்தேன் பராபரமே: 17

எத்திசையு நோக்கி விசையாத் திருக்கூத்தாய்
வித்தைவிளை யாட்டு விளைப்பாய் பராபரமே. 18

எப்பொழுது முன்பதத்தி லென்கருத்தே யெய்துதலுக்
கிப்பொழுதே கைப்பிடித்தா ளிறையே பராபரமே. 19

வாதுக் கடாரவரும் வம்பரைபோற் றேஷிமனம்
ஏதுக் கெதிர்வயா னெளியேன் பராபரமே. 20

கண்ணே மனோன்மணியே கண்பார்வைக் கெட்டாத
விண்ணடங்கா வெட்ட வெளியே பராபரமே. 21

அடக்கவரி தாமாயி லைம்பொறியைக் கட்டிப்
படிக்கப் படிப்பெனக்குப் பகராய் பராபரமே. 22

எத்தவங்கள் செய்தாலு மின்பமுட னுன்பதத்தை
முத்த ரொருபோது முற்றார் பராபரமே. 23

சொல்லுக் கிணங்காத சூத்திரத்தைப்பார்த்திருக்க
அல்லும் பகலுமெனக் காசை பராபரமே. 24

நாற்றச் சடலமதை நம்பார் முகந்திருக்கப்
பூத்து மலர்ந்திருக்கும் பூவே பராபரமே. 25
சோற்றுப் பொதியைச் சுமந்தே திரிந்தலைந்தே
ஆற்றும னின்றுகளைத் தழுதேன் பராபரமே. 26
காற்றுத் துருத்திதனைக் கல்லா யணைந்திருக்கச்
சூத்திரமாய் நின்றாய் சுழியே பராபரமே. 27
கோலத் திருவடிவு கோதையர்க ளாசையினால்
ஆலைக் கரும்புபோ லானேன் பராபரமே. 28
கேளாயோ வென்கவலை கேட்டிரங்கி யடிமைதனை
யாளாயோ வையர்பா லானேன் பராபரமே. 29
எத்தனைதான் குற்ற மெதிர்த்தடிமைசெய்தாலும்
அத்தனையு நீபொறுப்ப தழகே பராபரமே. 30
அல்லல் வினையா லறிவுகெட்ட வான்மாவாய்
நெல்லும் பதருமென நின்றேன் பராபரமே. 31
சொல்லரிய ஞானச் சுடரே யொருவார்த்தைச்
செல்வம் பொழிந்திடநீ செப்பாய் பராபரமே. 32
நித்த முனைத்தொழா நிர்மூட னாயிருக்கும்
பித்தனா யேன்காண் பிறந்தேன் பராபரமே. 33
உற்றார்க ளாலு முறவின்முறை யோராலும்
பெற்றார்க ளாலுமுனைப் பிரிந்தேன் பராபரமே. 34
ஏழை முகம்பார்த் தெளியேனை யெப்பொழுதும்
ஆழாம லாண்டருளென் னழகே பராபரமே. 35
பாவ வுடலெடுத்துப் பாதகனா யான்பிறந்துன்
னாவி கெடுவதுனக் கழகோ பராபரமே. 36
வாராயோ வென்னிடத்தில் வந்தொருக்கா லென்றன்முகம்
பாராயோ சற்றே பகராய் பராபரமே. 37

பார்க்கப் பலவிதமாய்ப் பல்லுயிருக் குள்ளிருந்தும்
ஆர்க்குந் தெரியாம லானாய் பராபரமே. 38

ஆனாலும் பொல்லா தரும்பாவி யாகவுடல்
ஏனோ வெடுத்தேனா னெந்தாய் பராபரமே. 39

கர்ப்பூர தீபக் கனலொளிபோற் காட்சிதர
முப்பாழும் பாழாய் முடித்தாள் பராபரமே. 40

கரும்பே நவரசமே கடலமுதே கண்மணிக்குள்
அரும்பொருளாய் நின்ற வழகே பராபரமே. 41

ஏழை யடியேனை யெப்படியுங் கைப்பிடித்து
ஆளா திருப்பதுனக் கழகோ பராபரமே. 42

ஆளாயோ வையா யடியேன் பிதற்றுதலைக்
கேளாயோ வென்றன் கெதியே பராபரமே. 43

ஊனாகி யுள்ளுயிரி லொட்டாத வக்கருவாய்த்
தானாகி நின்ற தனுவே பராபரமே. 44

பொன்னான் மயக்கெடுத்துப் புத்திகெட்டு நானெனவே
பன்னாளு நின்றாற் பலனோ பராபரமே. 45

இல்லல்லா கூடவென் றெனைமறந்து கொண்டுனையே
சொல்லவருண் மெய்ஞ்ஞானச் சுடரே பராபரமே. 46

ஐயோ வடிமைதனக் காரிருந்து மென்னபலன்
கையாற் கவிந்தணைக்கக் காணேன் பராபரமே. 47

ஆனாலு மேழை யடியேனுக் காதரவாய்த்
தானா யிரங்கியரு டாராய் பராபரமே. 48

தூங்கி யிருந்து தொழுவோர் முகம்பார்க்கும்
வேங்கைப் புலியாக்கு விப்பாய் பராபரமே. 49

கண்ணே கருத்தேயென் கண்மணியே கண்ணிறைந்த
விண்ணடங்கா வெட்ட வெளியே பராபரமே. 50

காசாசை கொண்டு கலங்கியே கெட்டலைந்த
தோஷியாய் நின்றேன் துணையே பராபரமே. 51

ஐயோ வென துதுய ராரிடத்திற் சொல்லிநின்று
கையெடுக்கப் போரேனென் கண்ணே பராபரமே. 52

என்ன தான் செய்திடுவே னென்விதியைச் சொல்லியழ
வுன்னையன்றி வேறெனக்கு முண்டோ பராபரமே. 53

முக்கண் விழியொளியே முத்திதரு முத்தமனே
அக்கண் டிறந்தோர்க் கறிவே பராபரமே. 54

முப்பாழும் பாழாகி முத்திபெற் றிருக்கவெனைக்
கைப்பிடிப்ப தெப்போதென் கண்ணே பராபரமே. 55

உல்லாச மாக மொளிவு பரந்திடவுன்
செல்வம் பொழிந்திடுவ செப்பாய் பராபரமே. 56

மாச்சரியஞ் செய்யு மதமொடுங்கி முத்திபெறக்
காட்சி தருவதெப்போ கண்ணே பராபரமே. 57

சண்டாள னென்றென்னைச் சகலருரை யிட்டாலுங்
கொண்டணைப்ப முன்பாரங் குருவே பராபரமே. 58

முத்திதரு மெய்ஞ்ஞான மூசுடரைக் காணுமற்
செத்திறந்து போகுமென் செயலேன் பராபரமே. 59

தன்னை யறிந்துணரத் தையா யொருவார்த்தை
இன்னபடி யென்றே வியம்பாய் பராபரமே. 60

களியேகண் டுன்னுடைய கைப்பிடிப்போ மென்றுசற்றே
எளியேன் முகம்பார்த் திரங்காய் பராபரமே. 61

பாசவினை போக்கிப் பலவினையைப் பாழாக்கி
ஆசைவைப்போர் தங்க ளருளே பராபரமே. 62

ஆளவுரு வேரமென் றன்பா யொருவார்த்தை
ஏழை முகம்பார்த் தியம்பாய் பராபரமே. 63

நிலைநாட்டுங் காய நிசமென்று நிச்சயித்த
புலையாட்ட லென்று தள்ளப் போமோ பராபரமே. 64

பார்க்கப் பலவிதமாய்ப் பலசமய மாகவொரு
வாக்கை வெளிப்படுத்தி வைப்பாய் பராபரமே. 65

ஆனா லெளியேனுக் காதரவே யில்லாமற்
போனா லுனக்கழகா புகலாய் பராபரமே. 66

நீச்சாப் பெருகிவர நிரம்புமா னந்தவெள்ளம்
பாய்சசாயோ வையா பகராய் பராபரமே. 67

எத்தனையோ கெஞ்சு மெளியேன் றனக்குதவி
உற்றா ருனைத்தவிர வுண்டோ பராபரமே. 68

கன்ன மிடுங்கருவி கரணமதைச சுட்டோர்கள்
தன்னுக்குட் டானாக தனுவே பராபரமே. 69

காயாமற் காய்த்துக் கனிந்து சொரிவதற்கு
மாயமாய்ப் பூத்த மலரே பராபரமே. 70

உயிருக் குயிரான வுட்கருவுக் குள்ளமைவே
தயையா யெனக்குதவி தந்தாய் பராபரமே. 71

அறிவை யறிவோருக் கானந்த வெள்ளமதாய்க்
கறையறவே பொங்குங் கடலே பராபரமே. 72

மறைப்பொருளைக் காணா மடையனிவ னென்றியம்பிச்
சிரிப்பார் சிரிக்கிலென்ன செய்வேன் பராபரமே. 73

குறிவிளக்குங் குருவடியைக் கொள்கையுடன் போற்றாமல்
அறிவு மயங்குகின்றே னையா பராபரமே. 74

வல்லாரைக் கெஞ்சி வலியாரைக் கால்பிடித்திட்
டில்லாரை நம்பி யிருந்தேன் பராபரமே. 75

சொல்லும் பதர் தூற்றிச் சூத்திரத்தைப் பாராமற்
கல்லுநெல்லும் போலக் கலந்தேன் பராபரமே. 76

செகமுழுதுஞ் சுற்றியுமுன் சீர்பாதங்காணமற்
றிகைத்தழுதே னீயுந் தெரிவாய் பராபரமே. 77

கள்ளக் கருத்துகளைக் கட்டோ டறுத்தவருக்
குள்ளிருக்கு மெய்ஞ்ஞான வொளியே பராபரமே. 78

கும்பிக் கிரைவிரும்பிக் கொடுப்பார் தமைத்தேடிச்
சம்பித் திரிந்தே சலித்தேன் பராபரமே. 79

காண்கலா வாசை கடித்தாலென் கான்முகமும்
வீங்காதோ வையா விதியே பராபரமே. 80

தூங்காமற் றூங்கித் தொழுதிருக்க வென்னுடைய
ஆங்கார மெல்லா மகற்றாய் பராபரமே. 81

தேனமிர்த மூறத் திவ்யமது ரஞ்சொரியத்
தானு யொருவார்த்தை தாராய பராபரமே. 82

சாத்திரங்க ளோதுஞ் சதுர்மறையோர்க் கெட்டாத
சூத்திரமாய் நின்ற சுழியே பராபரமே. 83

வேற்றொருவர் காணாத வேதாந்தத் துட்பொருளைப்
பார்த்தோர்க ளெய்தும் பலனே பராபரமே. 84

சாதி சனத்துடனே சார்ந்திருந்து பட்டதுயர்
போதும்போ தும்போதும் போதும் பராபரமே. 85

உற்றாரை நம்பியிருந் தொருபலனுங் காணமற்
செத்தா லெனக்கதுதான் சின்னம் பராபரமே. 86

செல்லு முறையறிந்து சித்திவழி காணமற்
கல்லுமரம் போலானேன் கண்ணே பராபரமே. 87

ஓகோ வுனையறிந்து மொருபலனுங் காணமற்
போகாமற் காத்தருளென் புனையே பராபரமே. 88

உன்னை யறிவதற்கோ வுடலெடுத்தே னென்றென்னைச்
சின்னஞ்சொல் வார்கட்கென் செய்வேன் பராபரமே. 89

தெரியாத வின்பத் தெளிவா யருண்மயமாய்ப்
பரிபூ ரணமுடனே பாராய் பராபரமே. 90

ஆச்சி தனைத்தேடி யாசைவைத் தலையாமற்
பூச்சியா யேனோ பிறந்தேன் பராபரமே. 91

காசை விரும்பிக் கலங்கினின் றன்பாத
ஆசை விரும்பா தலைந்தேன் பராபரமே. 92

சாகாமற் செத்துதயச் சச்சிதா னந்தமயப்
பாகமா யாகமுகம் பகராய பராபரமே. 93

வாராயோ வையா வந்திரங்கிக் கொண்டணைக்கப்
பாராயோ சற்றே பகராய பராபரமே. 94

ஆசைவலைப் பாசநெறி யத்தனையுங் கட்டறுத்து
வாசிதனி லேற்றிலெனை வைத்தாள் பராபரமே. 95

வேஷந் தனைப்போட்டு வேதாந்த சாத்திரதைக்
காசு பணம்பறிக்கக் கற்றேன் பராபரமே. 96

செய்ததெல்லாங் குற்றஞ் சிறியேன் றனக்கிரங்கிக்
கைதூக்கிக் கொண்டருளென் கண்ணே பராபரமே. 97

மானா மயக்கறுத்து மனக்கறையைத் தான்கழுவி
ஆளாக்கிக் கொள்வாயென் னையா பராபரமே. 98

நாட்டமங்கு மிங்கிருக்க நாதாந்த முத்திநிலை
காட்டா யணைந்தருளென் கண்ணே பராபரமே. 99

சிந்தை தனைத்தெளிந்து சித்திமுத்தி பெற்றுயர்ந்த
உன்றன் குணங்குடியார்க் குயிரே பராபரமே. 100

பராபரக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல் — 663.



# றகுமான்கண்ணி.

பார்க்கப் பலவிதமாய்ப் பல்லகண்டந் தன்னையடை
காக்குந் திருக்கருணைக் கண்ணே றகுமானே. 1

ஈறு முதலுமற்றே யியங்குகின்ற முச்சுடராய்க்
காரணிக்கும் பூரணமே கண்ணே றகுமானே. 2

பாணிக்க வொண்ணாப் பதம்பெறுதற் கென்சிரசைக்
காணிக்கை வைத்தேனென் கண்ணே றகுமானே. 3

பொய்யடிமை யாயினுமுன் பொன்னடிக்கா ளாக்கியெனைக்
கையைக் கொடுத்தணைத்தாள் கண்ணே றகுமானே. 4

பெண்பிள்ளை யென்றே பிதற்றுதல்பொய் யல்லாமற்
கண்டபல னொன்றுமில்லை கண்ணே றகுமானே. 5

பேதலித்தே னுன்னடிமை பேதகமில் லாமலுனைக்
காதலித்தே னாண்டருளசெய் கணணே றகுமானே. 6

எகப் பெருவெளியி லிருட்கடலிற் கம்பமற்ற
காகமதா வானேனென் கண்ணே றகுமானே. 7

ஐயோ வுனதருளி லாசையற்ற பாவியென்னைக்
கையைநெகிழ்த் தாதருளென் கண்ணே றகுமானே. 8

போதமய மாகவெங்கும் பூரணித்த காரணத்தைக்
காதலித்து நின்றேனென் கண்ணே றகுமானே. 9

எல்லார்க் கமுதளிக்கு மியல்புபோற் றேரைகட்குங்
கல்லுள் ளமுதளிக்குங் கண்ணே றகுமானே. 10

சொல்லுட் பதர்நீக்கிச் சும்மா விருந்தருளைக்
கல்லாருங் கல்லேயென் கண்ணே றகுமானே. 11

வெட்டவெறும் பாவியென்ன வீணிலெனைத் தள்ளாமற்
கட்டியணைத் தாண்டருள்செய் கண்ணே றகுமானே. 12

யானைரத மேறு மரசர்பெரு வாழ்வுமுதற்
கானற் சலமென்றோ கண்ணே றகுமானே. 13

எவருடைமை யும்மெடுத்திட் டென்னுடைமை யென்பவர்க்குக்
கபறில் வருந்துணையே கண்ணே றகுமானே. 14

ஊனெடுத்த நாண்முதலா வுபயோக மற்றயான்
கானினில வானேனென் கண்ணே றகுமானே. 15

வாசிதனி லேறி மனமகிழ்ந்து வாழாமற்
காசாசை கொண்டேனென் கண்ணே றகுமானே. 16

வீடோவென் றேகம் விழுமிடந்தான் வீதிகளோ
காடோ செடியோவென் கண்ணே றகுமானே. 17

பாகமுடன் வளர்ந்த பாழுடற் றுயக்கிரையோ
காகங் கழுக்கிரையோ கண்ணே றகுமானே. 18

ஏகங்காம லங்குமிங்கு மேகாந்த மாகவுனைக்
காண்கவந்து பாங்கருள்செய் கண்ணே றகுமானே. 19

தொண்டுசெய்ய நின்ற துறவியர்க ளோயருளைக்
கண்டுகொள்ளக் கண்டாயென் கண்ணே றகுமானே. 20

அல்லும் பகலு மடிமைமனந் தேம்புதற்குக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே றகுமானே. 21

வேட்டை பெரிதென்றே வெறிநாயைக் கைப்பிடித்துக்
காட்டிற் புகலாமோ கண்ணே றகுமானே. 22

அடைத்த மனக்காட்டை யாளுமைந்து கள்வரையுங்
கடத்த முடிவதில்லை கண்ணே றகுமானே. 23

மடம்புகு நாய்போல மயங்குமென்னை யுன்னைவிடக்
கடத்துவாரைக் காணேனென் கண்ணே றகுமானே. 24

வையம்பொய் யென்றே மறையோல மிட்டதெல்லாங்
கையுமெய்யு மாச்சுதென்றன் கண்ணே றகுமானே. 25

சொல்லறு மெய்ஞ்ஞானச் சுடரொளிகண் டாலென்மனக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே றகுமானே. 26

மாதா பிதாவுமென்னை மயக்கி மயக்கியுன்னைக்
காதலிக்க வொட்டாரென் கண்ணே றகுமானே. 27

வெற்றிதரு மெய்ப்பொருளை வேதாந்தத் துட்கருவைக்
கற்றோர்க் கருள்புரியுங் கண்ணே றகுமானே. 28

உடையா பரணமென வுன்னியுன்னிப் பாவிமனங்
கடையா விடலாமோ கண்ணே றகுமானே. 29

ஓயாக் கவலையினா லுள்ளுடைந்து வாடுதற்கோ
காய மெடுத்தேனென் கண்ணே றகுமானே. 30

நேசம்வைத்த துன்னடிமை ரின்பதத்திற் கல்லாது
காசுதனக் கோவென் கண்ணே றகுமானே. 31

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணியெண்ணி யுன்னடிமை
கண்ணிக்குட் சிட்டானேன் கண்ணேன் றகுமானே. 32

பொய்யெடுத்தா னென்று புறக்கணித் தாயாகிலெனைக்
கையணைப்பா ருண்டோவென கண்ணே றகுமானே. 33

விண்ணாடர் காணா விரிகருணை செஞ்சுடரைக்
கண்குளிரத் தந்தருள்செய கண்ணே றகுமானே. 34

தங்குபே ரின்பமதைச் சார்ந்தகுரு நாதனுக்கே
கங்குல்பகற் றானறுமென் கண்ணே றகுமானே. 35

தூங்காமற் றூங்கித் தொழுதுதொழு துன்னருளைக்
காணக வெனக்கருள்செய கண்ணே றகுமானே. 36

இன்றுள்ளோர் நாளைக் கிருப்பதுபொய் யென்பதையான்
கண்டுகொண்டே னையாவென் கண்ணே றகுமானே. 37

பீற்றற் றுருத்தினைப் பீக்குழியைச் சாக்கடையைக்
காததேன் வளர்த்தேனென் கண்ணே றகுமானே. 38

போதத் தனம்படைத்த புல்லர்க் கிருப்பூசி
காதற் றதும்வருமோ கண்ணே றகுமானே. 39

பாடிப் படித்தறிந்தும் பற்றற்றார் பாசவலைக்
காடுகொண்டு போவாரென் கண்ணே றகுமானே. 40

நிறைந்தபடி பூரணமே நிர்க்குணமே நிர்மலமே
கருணைக் கடலேயென் கண்ணே றகுமானே. 41

பார்ப்பாயோ வென்றன்முகம் பாவியா காமலெனைக்
காப்பாயோ வையாவென் கண்ணே றகுமானே. 42

மெயயெடுத்த நாண்முதலா மெய்யறியாப் பாவியெனைக்
கைவிடவும் வேண்டாமென் கண்ணே றகுமானே. 43

சோற்றுப் பொதியைச் சுமந்தே யலைநதுசுழற்
காற்றுத் துரும்பானேன் கண்ணே றகுமானே. 44

சேர்நதசுற்றந தன்னைச் சிதறவிட்ட சிநதையர்க்குக்
காந்த மலையேயென் கண்ணே றகுமானே. 45

உலையி லிடுமெழுகி னொப்பாக வென்றனுள்ளங்
கலைதலது காரியமோ கண்ணே றகுமானே. 46

ஆவிந னைக்குரங்கா வாட்டுகின்ற வையறிவைக்
காவ லிடவருள்செய் கண்ணே றகுமானே. 47

வேஷந தனைப்போட்டு மெய்ம்மயக்கும் பொய்க்குருவாய்க்
காசு பணம்பறித்தேன் கண்ணே றகுமானே. 48

எட்டிப் பிடிக்கு மிதமறிந்தா லுன்பதத்தைக்
கட்டிப் பிடித்திடுவேன் கண்ணே றகுமானே. 49

அவியா மனமவிய வாயுங்கலை யோர்கடமைக்
கவியுந திருக்கருணைக் கண்ணே றகுமானே. 50

சித்திதரும் வேதாந்தச் செழுஞ்சுடரைச் சின்மயத்தைக்
கற்றவர்க்கு முத்திதருங் கண்ணே றகுமானே. 51

அருவி சொரியும்படிக் கம்பரத்தி லன் புவைத்தாற்
கருவி பிரியாதென் கண்ணே றகுமானே. 52

மாராயவெள்ள மருங்கமிழ்ந்த நின்கருணைக்
காரார் மழைபொழியுங் கண்ணே றகுமானே. 53

எண்படா தென்னமெல்லா மெண்ணியெண்ணி நெஞ்சமொரு
கண்படா தலங்குவதோ கண்ணே றகுமானே. 54

கோலங் குறியில்லாக் குருவடிதொ ழார்கண்மனங்
கால லிருப்பிடமோ கண்ணே றகுமானே. 55

உள்ளுயிரி னுள்ளே யுறைந்தபரஞ் சோதிவரிற்
கள்ளமனந் துள்ளாதென் கண்ணே றகுமானே. 56

சேர்க்குந் திரவியமுஞ் சித்ரமணி மண்டபமும்
காக்குந் துணையோவென் கண்ணே றகுமானே. 57

பட்டுடையு மொப்பனையும் பாதகமு மென்னைவிட்டுக்
கட்டோ டொழிவதில்லை கண்ணே றகுமானே. 58

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணு திருக்குமனங்
கண்ணுடிக் குண்டுமகமாங் கண்ணே றகுமானே. 59

மண்டபமுந் தண்டிகையு மாளிகையுஞ் சாரணமுங்
கண்டு களிக்கவருள் கண்ணே றகுமானே. 60

மன்னுங் கருவி மவுனமணிப் பெட்டகத்தைக்
கன்னமிடப் போமோவென் கண்ணே றகுமானே. 61

என்றுமன்னை சுற்றமுத லெற்குப்பழி காரனெனக்
கண்டறிந்து கொண்டேனென் கண்ணே றகுமானே. 62

கொடிய மனத்துயரைக் கூடா திருப்பவர்க்குக்
கடுகெ முடுகிவருங் கண்ணே றகுமானே. 63

எச்சு மதிமயக்குமில்லார்க ளாலுடைதேங்
காய்ச்சிறட்டை யானேனென் கண்ணே றகுமானே. 64

விள்ளரியு வேதம் விளுவுதலை யுங்கடிந்து
கள்ளமனந் துள்ளுவதென் கண்ணே றகுமானே. 65

வேதக் கருவை விளைகருணைக் குஞ்சரத்தைக்
காதலித்தே ஞதரித்தாள் கண்ணே றகுமானே. 66

அரும்பே மலரேயென் ருசைதரும் வாசனையே
கரும்பே ரசமேயென் கணணே றகுமானே. 67

பூரணமே வற்புதமே பொஙகுகரு ணைக்கடலே
காரணமே யென்றனருட் கண்ணே றகுமானே. 68

ஓயாதோ வென்கவலை யுன்னருளா லென்கருவி
காயாதோ வையாவென் கண்ணே றகுமானே. 69

ராஜாஙகம் வேண்டி ரதகஜங்க ளேறுதற்குக்
காசெங்குங கேளேனென் கண்ணே றகுமானே. 70

தஙகைதா யென்றே தயங்குகின்ற பாழ்மனத்தைக்
கண்டிறக்க வநதருள்செய் கணணே றகுமானே. 71

அச்சமெமக் கில்லையென வைம்புலனும் பாழ்மனத்தைக்
கைச்சூறை யாட்டி விடென் கண்ணே றகுமானே. 72

இனியவமிர் தம்பொங்கி யெங்குஙகரை தத்திவரக்
கனிவாய திறந்தருள்செய் கண்ணே றகுமானே. 73

ஆணையிட்டே ஞணையிட்டே னையனே யுன்னருளைக்
காண வெனக்கருள்செய் கண்ணே றகுமானே. 74

அல்லும் பகலு மறிவில்லய மாவோர்க்குக்
கல்லும் பிளநதிடுமென் கண்ணே றகுமானே. 75

புவியு மெழுவானும் பொன்னுலகும் பல்லுயிருங்
கவியுந் திருக்கருணைக் கண்ணே றகுமானே. 76

எண்ணரிய தாக விருந்திடுஞ் சூத்திரமோ
கண்ணிலொளி பாய்ந்ததுவோ கண்ணே றகுமானே. 77

உழையோ வழுக்கோவென் னுள்ளங்கழு வக்கழுவக்
கழுவாத் தொடக்கோவென் கண்ணே றகுமானே. 78

உற்ற கிளைத்திறை முறவின் முறைத்திரையுங்
கத்தரித்து விட்டருள்செய் கண்ணே றகுமானே. 79

நற்பவளக் கொம்பே நவமணிக்கு மற்புதமே
கைப்பொருட்கு மெய்ப்பொருளே கண்ணே றகுமானே. 80

ஒப்புரவுதப்பி யுணர்வற் றுனைக்கை விட்டுக்
கப்பரைகைக் கொண்டேனென் கண்ணே றகுமானே. 81

பசப்பிப் பணம்பறிக்கும் பாவிக் குருமுகத்தைக்
கசப்பாகக் கண்டேனென் கண்ணே றகுமானே. 82

வேதியர்க்கு மாதவர்க்கு மெய்யடியார் கட்குமுனைக
காதலிப்போ ருக்குமருள் கண்ணே றகுமானே. 83

வேரைவே ரோடறுத்து மெயயடிமை யாக்குதற்கென்
காரியத்திற் ரூமதமென் கண்ணே றகுமானே. 84

பழகப் பழகிவரும் பாக்கியத்தைப் பைமுதலைக்
களவு கொடுக்கேனென் கண்ணே றகுமானே. 85

நாமாண்மை கண்முழுது நாசமாக் கார்தமக்குங்
காமவினை போமோவென் கண்ணே றகுமானே. 86

அடிமை யுனதபய மாகா திருக்கினுமென்
கடைவழிக்குங் கட்டமுதே கண்ணே றகுமானே. 87

வேதாந்த வேதமெல்லாம் விட்டேறியே கடந்து
காதலித்து நின்றேனென் கண்ணே றகுமானே. 88

இனமுஞ் சனமுமென வெண்ணியெண்ணி யுன்னடிமை
கனசழக்குப் பட்டேனென் கண்ணே றகுமானே. 89

நவுகுத்தி ரத்தைவிட்டு நன்னினைவெண் ணாதுமனங்
தவலைப் படுவதென்ன கண்ணே றகுமானே. 90

மடிப்புஞ் சோலைகளவும் வஞ்சமுமென் னெஞ்சைவிட்டுக்
சடக்க நடப்பதில்லை கண்ணே றகுமானே. 91

பலவிடத்தைச் சுற்றிப் பரதவித்துப் பாவிமனங்
கலங்கி மலங்குவதென் கண்ணே றகுமானே. 92

உள்ளக் கருத்தா லுவந்துறவு கொள்ளாமற்
கள்ளமனந் துள்ளுவதென் கண்ணே றகுமானே. 93

மண் ணுமுதன் மற்ற மயக்கமறக் கல்லாரைக்
கண்ணெடுத்துப் பாரேனென் கண்ணே றகுமானே. 94

தேசிகனு னென்னுந் திருட்டுக்குருக் கள்சொல்லோர்
காசாய மதியேனென் கண்ணே றகுமானே. 95

தன்னை யறிந்து தவமபுரியாத் தன்மையினுற்
கன்னெஞ்ச னேனென் கண்ணே றகுமானே. 96

மாடகூ டங்கண்மணி மண்டபமு மன்றுகளுங்
காடுகொள்ளக் கண்டேனென் கண்ணே றகுமானே. 97

குரனெரிய வேகதறிக் கூப்பிட்டுங் காணுக்
கருவே குருவேயென் கண்ணே றகுமானே. 98

மருளாத் தவத்தான் மறப்புகினைப் பற்றவர்க்குக்
கருணைக் குணங்குடியாங் கணணே றகுமானே. 99

உதிக்குமுணர் வன்றி யுணர்வோ டுணர்வொன்றிற்
கதிக்குங் குணங்குடியென் கணணே றகுமானே. 100

றகுமான்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆ பாடல் – 763.



# எக்காலக்கண்ணி.

முத்திதரும் வித்தை முனையில்வைத்துச சீராட்டி
நித்த மறவாம னினைப்பதினி யெக்காலம். 1

ஆதியின்மே லாசை யடர்ந்தெரித்த வக்கினியின்
சோதியினால் வெந்து சுகம்பெறுவ தெக்காலம். 2

காமக் கடல்கடக்கக் கர்த்தவியக் கப்பல்வைத்து
நேமநிஷ்டை தம்ப நிறுத்துவது மெக்காலம். 3

பங்கப் பழிப்பேய்ந்த பையனயான் றையலர்கள்
கொங்கையைநான் பாராக் குருடாவ தெக்காலம். 4

கொங்கைதனைப் பாராக் குருடா யிருப்பதுடன்
அங்கமுமிழ் மோக மழிவதினி யெக்காலம். 5

அங்கமுமிழ் மோக மழிந்தே யறமெலிந்து
வன்கிளடு போல வறண்டுணர்வ தெக்காலம். 6

வாசியினா னேறி வலமிடந்தி ருப்பாமற்
றேசிநடை போலத் திடப்படுவ தெககாலம். 7

தேசிநடை போலத் தியங்காச் சுழிமுனையை
நாசி நுனியிலதை நான்மறிப்ப தெக்காலம். 8

நாசி நுனிகடந்து நாசமாய்ப் போகாமல்
வாசியுமென் கையில் வசப்படுவ தெக்காலம். 9

மையலென்னு மாலை மார்புநிறை யப்பூண்ட
தையலர்க ளெல்லாமென் றாயாவ தெக்காலம். 10

கஞ்சா வபினரக்குங் கற்பமென வுண்ணாமல்
எண்சாண் பனங்கள் ளிறக்கியுண்ப தெக்காலம். 11

பொய்யே மிகுத்த புதர்ப்பாவிப் பையல்யான்
அய்யோவென் றேயழுதுன் னடிபணிவ தெக்காலம். 12

அய்யோகூ வென்றே யலறவடி யுண்டவென்றன்
பொய்யான மெய்யின் பிழையறுவ தெக்காலம். 13

மருவு தகைமறந்து மனமு மதமிறந்து
இருகையு மேந்தி யிரந்துண்ப தெக்காலம். 14

இருகையு மேந்தி யிரந்து குடித்தேநான்
சருகா யுலர்ந்து சலிப்பறுவ தெக்காலம். 15

ஆசானற் காலே யணைத்திருந்து மோகதுகலந்
தூசாடிப் பேசி யுணர்வருள்வ தெக்காலம். 16

வாசிவா வென்று வருநதென் னமுதமுண்டு
பேசிநான் வாழ்ந்தே பிழைதீர்வ தெக்காலம். 17

எக்காலசகண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல்-780.



# கண்மணிமாலைக்கண்ணி.



அத்துவிதமே யறிவகண்டி தாகாரக்
கர்த்தவியமேயென் கண்ணே பராபரமே. 1

தற்பரமே சிற்பரமே தானென்று நின்றுதவுங்
கற்பகமே யற்புதமே கண்ணே பராபரமே. 2

உடலே யுயிரே யுளங்குளிர்ந்த செந்தேனே
கடலே நிறையமுதே கண்ணே பராபரமே. 3

கொட்டிவைத்த முத்தே குவித்தநவ ரத்தினமே
கட்டிப்பசும் பொன்னேயென் கண்ணே பராபரமே. 4

சட்டரச வர்க்கமே சார்ந்ததோர் குஞ்சரமே
கட்டழகுப் பெண்ணேயென் கண்ணே பராபரமே. 5

செல்வப் பெருக்கே திரண்டமணிப் பொக்கிஷமே
கல்விக் களஞ்சியமே கண்ணே பராபரமே. 6

இன்னமுதே கண்டே யெனக்கேற்ற முக்கனியே
கன்னலரும் பாகேயென் கண்ணே பராபரமே. 7

பீச்சாத் திரண்டமுதே பிரியாப் பெருவாழ்வே
காய்ச்சாச்செம் பொன்னேயென் கண்ணே பராபரமே. 8

நற்பவளக் கொம்பே நவின்றமணிப் பெட்டகமே
கைப்பொருட்கு மெய்ப்பொருளே கண்ணே பராபரமே. 9

பட்டைக் கருப்புவட்டே பானைகொண்ட சர்க்கரையே
கட்டிக் கரும்பேயென் கண்ணே பராபரமே. 10

துன்பக் கடலைத் தொலைத்தோர் துயர்தீர்க்குங்
கம்பமற்ற பாற்கடலே கண்ணே பராபரமே. 11

பொய்ப்பொருள்க ளெல்லாம் புறக்கணித்த புண்ணியர்தங்
கைப்பொருட்சித் தேயென்றன் கண்ணே பராபரமே. 12

பவக்கடலை நீக்கிப் பரிவாய்க் கரையேற்றும்
கவிழா மரக்கலமே கண்ணே பராபரமே. 13

தம்பனங் கொண்டே தரித்துநின்ற வோங்காரக்
கம்பத்தடி யானேயென் கண்ணே பராபரமே. 14

மலிகாதல் கொண்டகையான் மண்ணிற் கவிழ்ப்பதற்கோ
கலகம் விளைத்துவிட்டாய் கண்ணே பராபரமே. 15

தெள்ளிய வான்சோதி தெளிந்துமெல்ல வந்தவையுங்
கள்ளப் படுத்திவிட்டாய் கண்ணே பராபரமே. 16

புண்ணீ ரொழுகிப் புழுங்கு மனத்தினர்போற்
கண்ணீர் கலங்கவிட்டாய் கண்ணே பராபரமே. 17

பித்தர்கள் போலும் பிதற்றிக்கா கம்போலுங்
கத்திகத்திச் சாகவிட்டாய் கண்ணே பராபரமே. 18

போற்றுமற் சிந்தை பொருதுசமர்க் காற்றுமற்
காற்றாய்ப் பறக்கவிட்டாய் கண்ணே பராபரமே. 19

நெற்பதர்க்கே யொப்பாக நிற்பதற்கோ வென்றலையில்
கற்பித்து விட்டுவிட்டாய் கண்ணே பராபரமே. 20

சொல்லாச் சுயஞ்சோதிச் சுடர்கொழித்த நெஞ்சுகருங்
கல்லாகச்செய் துவிட்டாய் கண்ணே பராபரமே. 21

அவிழ்ந்தவிழ்ந்து சிந்தையுன்மீ தாசைவைத்ததத்தனையுங்
கவிழ்த்துப்பா ழாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 22

ஓசைமணி மண்டபத்தி னுட்புகா வண்ணமெனைக்
காசினியிற் சுற்றவிட்டாய் கண்ணே பராபரமே. 23

வீண்காத றந்ததல்லால் வேற்றிலுனைக் கண்ணுலுக்
காண்கவரி தாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 24

சேத்துமத்தினிப்போலென் சிந்தைதனைத் தேங்கவுனைக்
காட்டி மறைத்துவிட்டாய் கண்ணே பராபரமே. 25

துட்டமா மாயையினிற் சுட்டெரிந்த கொள்ளிக்
கட்டைவிற காக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 26

வேல்விழியார் காம வேட்கை யளற்றிலெனைக்
கால்மாற்ற விட்டுவிட்டாய கண்ணே பராபரமே. 27

வீடொ டென்று விதித்ததுவு மல்லாமற்
காடுவீ டாகவிட்டாய் கண்ணே பராபரமே. 28

ஓடாம லோடி யுலகைவலஞ் சுற்றுதற்கோ
காடோட வாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 29

ஈடோயா னுன்றனக்கு மெண்மீதி லேனுவிக்
காடிநயஞ் செய்துவிட்டாய் கண்ணே பராபரமே. 30

அச்சமில்லாப் புல்வேட ரைவருக்கு மென்னறிவைக்
கைச்சூறை யாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 31

வில்லங்க மற்று விளககொளிபோ னின்றநெஞ்சைக்
கல்லங்க மாக்கிவிட்டாய் கண்ணே பராபரமே. 32

மண்ணாதி மூவாசை மாமாயை முக்கூட்டுக்
கண்ணியுட்சிட் டாக்கிவிட்டாய கண்ணே பராபரமே. 33

கொண்டணைத்துக் கொள்ளுங் குணங்குடியான் சீரடியைக்
கண்டணைக்க நீயருளாய் கண்ணே பராபரமே. 34

எட்டி லெழுதவொண்ணு விறையேயுன் றன்வடிவைக்
காட்டிக் கொடுத்தருளாய் கண்ணே பராபரமே. 35

மைச்சினிசசி போலு மணக்கோலப் பெண்போலுங்
கைச்சரசஞ் செய்தருளாய் கண்ணே பராபரமே. 36

நிதியாசை யற்று நிரஞ்சனமாய் நின்றிடநற்
றுதியாசை தந்தருளாய் கண்ணே பராபரமே. 37

நாதவிந்தால் நின்றதுவு நானென் றுபதேசங்
காலி லுரைத்தருளாய் கண்ணே பராபரமே. 38

மாதவசி யாகி மலைமுழைபிற் புக்கவன்மேற்
காதலொன் று தந்தருளாய் கண்ணே பராபரமே. 39

நிர்க்குணத்தைக் கொண்டு நிருவிகற்பஞ் சாதிக்கக்
கற்குணத்தைத் தீர்த்தருளென் கண்ணே பராபரமே. 40

சென்மந் தொலைத்தடிமை சின்மயமாய் நின்றிடவுங்
கன்மந் தொலைத்தருளாய் கண்ணே பராபரமே. 41

சிந்தை யொளிபரப்பிச் சிதறுவன் கண்டாயோ
கந்தனையுந் தந்தருளாய் கண்ணே பராபரமே. 42

அஷ்டாங்க யோகமதி லாசையற வேயெனது
கட்டைவெட்டி முன்னருளாய் கண்ணே பராபரமே. 43

விற்புருவத் தூடு விளங்குமொளி பந்தாடக்
கற்பித் தருளாயென் கண்ணே பராபரமே. 44

ஒப்பி லருளாழி யோடவடி யேற்குமொரு
கப்பலாய வந்தருளாய் கண்ணே பராபரமே. 45

உனையாள்வே னென்றடிமை யுள்ளங் குளிர்ந்திடநின்
கனிவாய் திறந்தருளாய் கண்ணே பராபரமே. 46

பொய்கோத்த மெய்யதனைப் போட்டுவிடு முன்னமெனைக்
கைகோத் தணைத்தருளாய் கண்ணே பராபரமே. 47

வாய்ச்சதெனக் கென்று மகிழ்ச்சிகொண்டு நின்றிடநின்
காட்சி யளித்தருளாய் கண்ணே பராபரமே. 48

மலைக்கு மலைதிரிந்து மனுவாக வேழைமனக்
கலக்கந் தவிர்த்தருளாய் கண்ணே பராபரமே. 49

நாணு மடவாரை நான்கைதழு வக்கனவுங்
காணுது காத்தருளாய் கண்ணே பராபரமே. 50

தொண்டரிடஞ் சென்றிடவுந் தொண்டுசெய்து நின்றிடவுங்
கண்டித்து வைத்தருளாய் கண்ணே பராபரமே. 51

மூலவர்க்க மாக முழுமதிப்பா லுங்கொடுத்துக்
காலபயந் தீர்த்தருளாய் கண்ணே பராபரமே. 52

சோற்று லெடுத்த சுவரிடியா மற்பாது
காத்துமுகம் பார்த்தருளாய் கண்ணே பராபரமே. 53

மூலக் கனன்மூட்டி மூட்டிவரு காலரையுங்
காலா லுதைததருளாய் கண்ணே பராபரமே. 54

சிட்டனென வும்பூசை செய்தேனு மிப்பாவிக்
கட்டைகடைத் தேறவைத்தாள் கண்ணே பராபரமே. 55

எட்டுமோ ரெட்டையுமெட் டெட்டுக் கயிறதனுற்
கட்டவுநல் விஷ்டம்வைத்தாள் கணணே பராபரமே. 56

ஆதார மாறு மடுக்கடுக்கா கக்கடததிக்
காதுக்குமே லேற்றிவைததாள கணணே பராபரமே. 57

கும்பித்தி ரேசித்துட் கொள்ளும் படிக்குதவிக்
கம்பமுனைக் காட்டிவைத்தாள கணணே பராபரமே. 58

பட்டிப் பசும்பாலைப் பக்குவத் துடன்காலைக்
கட்டிக் கறநதளித்தாள் கண்ணே பராபரமே. 59

நில்லா வுடற்கு நிலையுங் கொடுக்குமொரு
கல்லாவின் பாலளித்தாள் கண்ணே பராபரமே. 60

சோமப்பா லூட்டிச் சுரந்தவா மப்பாலுங்
காமப்பா லுகொடுத்தாள் கண்ணே பராபரமே. 61

மண்டைநடு மண்டலத்துண் மண்டியமு துண்டிடவுங்
கண்டவ கடத்திவைத்தாள் கண்ணே பராபரமே. 62

மூலாதா ரத்துண் மூளைகொண் டெயர்நதெழுந்த
காலாற் கனலெரித்தாள் கண்ணே பராபரமே. 63

ஆயுங் கலையிரண்டு மாயா தடக்கியென்றன்
காய நிலைக்கவைத்தான் கண்ணே பராபரமே. 64

அற்ப வுடலா லருந்தவமே புரிந்திடவுங்
கற்பமுறை கைக்களித்தான் கண்ணே பராபரமே. 65

அண்டபிண்ட மென்றுநின் றூடுந் திருக்கூத்தைக்
கண்டுகளி கூரவைத்தாள் கண்ணே பராபரமே. 66

எண்ணாத வெண்ணமெல்லா மெண்ணு மெலன்றன் மனக்
கண்ணுடிக் குள்ளளித்தாள் கண்ணே பராபரமே. 67

எவ்வுலகுந் தானு யிருந்தவனை யான்றொழவுங்
கவ்வுமலக் கட்டறுத்தாள் கண்ணே பராபரமே. 68

அற்ப வுடல மழிந்திடுமுன் றீபமிட்ட
கர்ப்பூர மாக்கிவைத்தாள் கண்ணே பராபரமே. 69

விலங்கினங்க ளோடு வீற்றிடவு மேழைநெஞ்சு
கலங்காத வண்ணம்வைத்தாள் கண்ணே பராபரமே. 70

அடுத்தாக் கெடுக்கு மரிவையர்க்கா ளாகாமல்
கடக்கக் கடத்தி வைத்தாள் கண்ணே பராபரமே. 71

நாற்றந் தொலைய நறவணையு நாரியர்தங்
காற்றும் படாதுவைத்தாள் கண்ணே பராபரமே. 72

ஆணிப்பொன் மேரு வாமுனையு முன்னடிமை
காணுங் கருணைவைத்தாள் கண்ணே பராபரமே. 73

வனவாச மேக வரமளித்துன் பொற்பதத்தைக்
கனமா யிறைஞ்ச வைத்தாள் கண்ணே பராபரமே. 74

எட்டிப் பிடித்தாலு மெட்டாது நின்றவனைக்
கட்டிப் பிடிக்கவைத்தாள் கண்ணே பராபரமே. 75

மதபேத மோதி மறைக்குமறை சொல்வதெல்லாங்
கதையாய் முடித்துவைத்தாள் கண்ணே பராபரமே. 76

அண்டபிண்ட மாயுமதற் கப்பாலு நின்றுவெளி
கண்டவனைக் காட்டிவைத்தாள் கண்ணே பராபரமே. 77

உலையி லிடுமெழுகா யுள்ளம்பதைத் துருகிக்
கலங்கியதுங் கண்டிலையோ கண்ணே பராபரமே. 78

வெம்பிமிக நொந்தேன் மெலிந்தேனென் கண்ணீருங்
கம்பலையுங் கண்டிலையே கண்ணே பராபரமே. 79

மெத்த மயலுற்று விருப்பமொடு பன்னூலுங்
கற்றும்பாழாக்கி விட்டேன் கண்ணே பராபரமே. 80

பாலங்கடந்து பெரும் பாதைநட வாமலும்வீண்
காலங் கடத்திவிட்டேன் கண்ணே பராபரமே. 81

பூத்த மலரெடுத்துன் பொன்னடியை யானுமென்றுங்
காத்திருந்து பூசைசெயவேன் கண்ணே பராபரமே. 82

விண்கொண்டு நின்று விளங்குமுனை யெக்காலங்
கண்கொண்டு காண்பேனென் கணணே பராபரமே. 83

ஐயோவென் செய்கிற்பே னொருமற்ற பாவியைநீ
கையைவிட லாமோவென் கண்ணே பராபரமே. 84

நட்டநடு வீடுசென்று நானொளித்தி ருந்துனையுங்
கட்டித் தழுவேனோ கண்ணே பராபரமே. 85

அல்லும் பகலு மடியேன் படுந்துயர்க்குக்
கல்லுங் கரைந்திடுமென் கண்ணே பராபரமே. 86

பொன்னைப்பு தைத்துவைத்துப் போவா ருளந்தோறுங்
கன்னங் கருநிறங்காண் கண்ணே பராபரமே. 87

பணத்தைப் பணமெனவும் பார்த்ததுண்டோ வுன்றனுக்கென்
கணக்குத் தெரியாதோ கண்ணே பராபரமே. 88

நிற்கும் பொழுதாடை நெகிழ்ந்தா லுபசாரங்
கைக்குஞ் சொலுவதுண்டோ கண்ணே பராபரமே. 89

ஆடையி லுலகனைத்துந் தாறா யிருந்துமாறு
கடுகெடையு மாறாயென் கண்ணே பராபரமே. 90

உனக்குள்ளே மறந்தோ ருள்ளக் கருத்தினுண்மாங்
கனிக்குளூறு வண்டாறாய கண்ணே பராபரமே. 91

நெக்குருகி நின்ற நிலைதோன்றா நிர்க்குணத்தார்
கைக்குட்பந் தாடிநின்றாய கண்ணே பராபரமே. 92

பதித்த மனம்வாழி பரமார்த்த மும்வாழி
கதித்த நிலைவாழி கண்ணே பராபரமே. 93

அத்துவிதம் வாழி யறிவகண்டி தம்வாழி
கர்த்தனே நீவாழி கண்ணே பராபரமே. 94

தற்பர மேவாழி தாராதுந தந்துதவுங
கற்பகமே வாழியென் கண்ணே பராபரமே. 95

சிற்பரமே வாழி சிவயோ கியர்வாழி
கற்பனையெல் லாமவாழி கண்ணே பராபரமே. 96

நற்பதவி யும்வாழி நவிறான் மறைவாழி
கற்பதா ரிகளவாழி கண்ணே பராபரமே. 97

சித்தர் கணம்வாழி சின்மயந் தான்வாழி
கர்த்தவியம் வாழியென் கண்ணே பராபரமே. 98

மாதவத்தோ ரும்வாழி மவுனமுததிரையும்வாழி
காதலித்தோ ரும்வாழி கண்ணே பராபரமே. 99

குவலயத்தோ ரும்வாழி குணங்குடியா ரும்வாழி
கவலையற்றோ ரும்வாழி கண்ணே பராபரமே. 100

கண்மணிமாலைக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல்-480.



# மனோன்மணிக்கண்ணி.



மெய்தொழவு மேலு மேலுநதி கேஸ்வரனைக்
கைதொழ வுஙகனவு கணடேன் மனோனமணியே. 1
கோப்பா கவுமுனையான் கொண்டாடப் பாடவுநீ
காப்பாக வுஙகனவு கண்டேன மனோன்மணியே. 2
பெண்கணிர்த்தத் தோடுனையான பிரியா மணம்புணரக்
கண்களுறங காககனவு கண்டேன் மனோனமணியே. 3
மலர்ந்திருக்கும் பொற்கமல மணவறையி லிருவருங்கை
கலந்திருக்க வுஙகனவு கண்டேன் மனோன்மணியே. 4
மெய்ம்மஞ்சட் குளிர்ப்புஙகண விழிபபுமெக் களிப்புமெனைக்
கைமிஞ்ச வுங்கனவு கண்டேன் மனோன்மணியே. 5
மைதீட்ட வுஙகயற்கண் மலரின் மலர்முலையிற்
கைபூட்ட வுஙகனவு கண்டேன் மனோன்மணியே. 6
மெய்தழுவ வும்மிருவர் மெயயோடு மெயநெருங்கக்
கைதழுவ வுங்கனவு கணடேன் மனோன்மணியே. 7
வாமப்பா லைப்பெருக மறுவாலி பம்வருக
காமப்பா லுண்ணக் கனவுகணடேன் மனோன்மணியே. 8
பாலனு கவுங்கான்ற பாலுணவு மென்னைவிட்டுக்
காலனே கவுஙகனவு கணடேன் மனோன்மணியே. 9
வடியா வருளமிர்தம் வடியவடி யக்குணங்
குடியா ரொடுகனவிற் குடிததேன் மனோன்மணியே. 10
கோடி பெருமதிகள் கூடு மொருமதிபோல்
வாடியெம் மானேபெம் மானே மனோன்மணியே. 11

கண்ணேயென் கண்மணியே கண்குளிர்ந்த கட்டழகுப்
பெண்ணே யமிர்தப் பிழம்பே மனோன்மணியே. 12

பெண்ணே மயிலினமே பேரனமே யென்றுனையென்
கண்ணிற் கிடக்கவென்று காண்பேன் மனோன்மணியே. 13

வன்ன வுடைக்குமுன்றன் வால வயதினுக்கும்
அன்ன நடைக்குமென்ற னாசை மனோன்மணியே. 14

கூந்த லிலங்கக் குரும்பைத் தனங்குலுங்க
நேர்ந்து நடம்புரிந்து நிற்பாய மனோன்மணியே. 15

துவளுந் துடியிடையுந் தோகை மயினடையும்
பவள விதழுமென்று பார்ப்பேன் மனோன்மணியே. 16

மலர்மாலை கள்கிடந்து மார்பிற்பின்ன லாடுமுன்றன்
அலர்முலையும யானென் றணைவேன் மனோன்மணியே. 17

வெயயிற்பட் டாலும் வெதும்புமுட லாயுனது
மெயயிற்றொட்டா லுங்காதம வீசுமமனோன் மணியே. 18

காற்றுப்பட் டாலுங் கலங்குமென்றன் மேனியினீ
யார்ந்துத் தொடவின்பம் படைப்பேன் மனோன்மணியே. 19

பிடியாரைப் போலும் பிடிப்பேன் முலையைக்குணங்
குடியாரைப் போலுங் குடிப்பேன் மனோன்மணியே. 20

கூந்தலுக்கு நெய்தோய்த்துக் குளிமஞ்ச ணீராட்டி
வார்ந்துசிங் காரித்து வைப்பேன மனோன்மனியே. 21

காலிற்பனி நீர்விட்டுக் கழுவிமடி மீதுவைப்பேன்
மேவிலத்த ருமபூசி விடுவேன் மனோன் மணியே. 22

காதம் பரிமளிக்குங் கஸ்தூரிப் பொட்டிடுவேன்
போதுஞ் சவாதணிந்து புணர்வேன் மனோன் மணியே. 23

தலைக்குமினுக் கெண்ணெய் தடவிச்சடை பின்னிவைப்பேன்
முலைக்குவன்னக் கச்சிறுக்கிமுடிப்பேன் மனோன்மணியே. 24

கட்டாடை வர்க்கமெல்லாங் கண்டு களித்துயர்ந்த
பட்டாடை வர்க்கம் வைத்துப் படைப்பேனா மனோன்மணியே 25

மூக்குகுத்திக் காதுகுத்தி முழுவயிரந் தூக்கிவைப்பேன்
நோக்குமுத்துந் தூக்குமுதலுங் குவிப்பேன் மனோன்மணியே. 26

கைக்குஞ் சுரிகடகங் கல்லுமிழைத் தாக்கொடுப்பேன்
மொய்குழற்குஞ் சடைப்பில்லை முடிப்பேன் மனோன்மணியே. 27

தங்கக்கொலுசுஞ்சிலம்புந் தண்டைரத்ந பாடகமுங்
கொங்கைக்கு மோகனமாலை கொடுப்பேன் மனோன்மணியே. 28

காலாழி பீலிமுதற் கன்னகையும் பொன்னகையும்
நாலாட் சுமைவேண்டி னடக்கு மனோன் மணியே. 29

முடிமீ தினுமகுட முழுசூட்டு வேனற்குணங்
குடிமா தவர்கள்குலக் கொழுந்தே மனோன் மணியே. 30

சன்னிதா னத்திற் சரணஞ் சரணமென்று
சொன்ன மலர்தூவித் தொழுவேன் மனோன் மணியே. 31

கர்ப்பூர மேற்றிக் கரத்தீப வாலாத்தி
எப்பாரும் போற்ற வெடுப்பேன் மனோன் மணியே. 32

முக்கால மும்பூசை முடிப்பேன்முக் காலமல்லால்
எக்கால மும்பொங்க லிடுவேன் மனோன் மணியே. 33

சாதந்தளி கைசமைத்துச் சாம்பிராணித் தூபமிட்டுப்
பாதந் தொழுதிட்டுப் படைப்பேன் மனோன்மணியே. 34

பசைசைப் பருப்புமுதற் பருப்பிற்பத்து வகைகடைவேன்
வச்சநறு நெய்யுருக்கி வார்ப்பேன் மனோன்மணியே. 35

முட்டை பொரிப்பேன் முழுக்கோழி யும்பொரிப்பேன்
றட்டைப்பீங் கானிற் றருவேன் மனோன் மணியே. 36

ஆட்டுக்கறி யுங்கொள்வே னதிலனந்தம் வகைசமைப்பேன்
கூட்டுக்கறி யும்பண்ணிக் கொடுப்பேன் மனோன்மணியே. 37

குட்டிக் கறிசாறுங் குழம்புபண்ணித் தாளித்தோர்
சட்டிக் கறியேனுந் தருவேன் மனோன் மணியே. 38

பால்பழமுந் தேனும் பலகார வர்க்கங்களும்
மேலுமே லும்பரப்பி விடுவேன் மனோன்மணியே. 39

அடிக்கா யிரம்பொன்விலை யானாலு மீந்துகுணங்
குடிக்குண்மா ளிகைகட்டிக் கொடுப்பேன் மனோன்மணியே. 40

ஆணிப்பொன் மதிளுயர்ந்த வரண்மனையுந் தீர்ப்பாக
மாணிக்க மேவிளக்காய வைப்பேன் மனோன்மணியே. 41

துலங்குமணி மண்டபமுஞ் சொர்க்கமென வும்மிலங்கா
திலங்குமலங் காரஞ்செய் திடுவேன் மனோன்மணியே. 42

ரத்தினங்கள் வைத்திழைத்தி ராவைப்பக லாக்குஞ்
சித்திரங்கள் வகைவகையாய்ச் செயவேன் மனோன்மணியே. 43

மண்ணா யமுநதாமன் மனமே முழுவதினுங்
கண்ணாடி யாயிருக்கக் காண்பேன் மனோன்மணியே. 44

மங்கா தொளிபரப்பும் மவுனமணி யாலுமொரு
சிங்கா சனமேடை செய்வேன் மனோன்மணியே. 45

நாற்காலி கட்டில்பல நற்பவள வாசனங்கள்
நீக்கமறச் சுற்றும் நிறைப்பேன் மனோன்மணியே. 46

பாதம்பூ சித்துப் பணிவிடைகள் செய்துநிற்க
மாதர்க ளோவனந்தம வைப்பேன் மனோன்மணியே. 47

புவனத் தரசரெல்லாம் போற்றிப் பணியவென் றன்
மவுன மலரணைமேல் வாழ்வாய மனோன்மணியே. 48

கட்டிலிலுங் கூடி களிகூர்ந்து கொண்டிருப்போம்
தொட்டிலினு மாடிச் சுகிப்போ மனோன்மணியே. 49

முடிமன்னர் தம்வாழ்வு முதலெவையு மெங்கள்குணங்
குடிமன்னர் தம்வாழ்வுங் கொடுப்பேன் மனோன்மணியே. 50

சொர்ன மலைமலையாய்த் தொகைவகையி லாதளிக்குங்
கர்ன னெனவுமெனைக் காணபாய மனோன்மணியே. 51

போதத் தனம்புதைத்த பொக்கிஷமுங் கைகுவிப்பேன்
பாததி னும்வீழ்ந்து பணிவேன் மனோன்மணியே. 52

கிடையாப் பொருள்களெல்லாங் கிடைக்குமுன்ன நீயுமென்றாற்
படையாப பொருள்களெல்லாம் படைப்பாய மனோன்மணியே.

தானா சமுத்திரம்போற் சான்றோர்க்கெல் லாமளிப்பாய்
சேனா சமுத்திரமுஞ் சேர்ப்பாய மனோன்மணியே. 54

முடிதூக்கு மன்னர் முதலெவரு முன்வாயிற்
படிகாக்கும் வாழ்க்கை படைப்பாய மனோன்மணியே. 55

கவிராஜ ரும்விருது கட்டியங்கள் கூறிநிற்பார்
தவராஜ ருமபோற்றத் தவறார் மனோன்ம்ணியே. 56

உன்மீதி லாசித் துயிர்பொருளுன் றாட்களிப்ப
என்மீதி லாசையுனக் கிலையேன் மனோன்மணியே. 57

உள்ள துரியதெல்லா மொப்புக்கொண்ட பின்னலவோ
கள்ள மனம்படைக்கக் கற்றாய் மனோன்மணியே. 58

வேசைக் குணத்தை விரும்புவா யென்றறிந்தாற்
காசைப் பணத்தைநான் காட்டேன் மனோன்மணியே. 59

படையாதெல் லாமென்றாற் படைத்துப்பர தேசிகுணங்
குடியாரை யோதேடிக் கொண்டாய் மனோன்மணியே. 60

உத்தமிப் பெண்ணென் றுவந்தேனிப் போதுன்றன்
பத்தினித் தனத்தைநன் றாய்ப் பார்த்தேன் மனோன்மணியே. 61

என்பத் துனக்கிருந்தா லிராஜ ராஜேஸ்வரியாய்
ஐம்பத் தறுதேசமுநீ யாள்வாய் மனோன்மணியே. 62

உள்ள மணவாள னுனக்கெவனோ வென்னைவிடக்
கள்ளமண வாளனிச்சை கடிதோ மனோன்மணியே. 63

வேசியென்ற பேர்படைத்து வெளியிற்புறப் பட்டவளைத்
தாசியென்று சொல்லத் தகாதோ மனோன்மணியே. 64

ஆடாது மாடி யவிசாரி யானவளைப்
பாடாதும் பாடியென்ன பயமோ மனோன்மணியே. 65

மூக்கு முனைக்குமுழம் மூன்றேனோ பத்தினிபோல்
நாக்கு முனைக்குமுழ நாலேன் மனோன்மணியே. 66

பானைசசோ றெல்லாம் பதம்பார்த்துத் தின்றவினி
மான மழியிலுயிர் மயிர்தான் மனோன்மணியே. 67

இனிக்கண் டறிந்துகொள விவளோண் பிளையாளாற்
றனிக்கண்ட போதுபுத்தி தருவான் மனோன்மணியே. 68

பல்லை யிதழ்கடிக்கப் பானை தடியொடிக்கக்
கல்லைத்தேவ காயுடைக்கக் காண்பாய மனோன்மணியே. 69

தடிபோ விருந்துனையான் சாதிகெட்ட பாழுங்குணங்
குடியார்கெப் படிகூட்டிக கொடுப்பேன் மனோன்மணியே. 70

போனதெல் லாமபோசசு பொழுதும் விடிந்ததினி
யானதெல் லாமனத்தி னோடேன் மனோன்மணியே. 71

மல்லாந்து நான்படுத்து மார்பிற்றுப்பிக் கொண்டபினும்
பல்லைக்குத்தி முகந்தோ பார்ப்பேன் மனோன்மணியே. 72

என்னைவிட்டால் மாப்பிள்ளைமா ரெதனையோ வுன்றனுக்கே
உன்னைவிட்டாற் பெண்ணெனக்கு முண்டோ மனோன்மணியே.

தடித்தனமே செயதாலுஞ் சமுசாரத் திற்படிந்து
குடித்தனஞ்செய் தாலென்மனக் குறையோ மனோன்மணியே.

தொடுத்தணைத்துக் கொண்டே துயில்வன்மற்ற நேரமெல்லாம்
எடுத்தணைத்துக் கொண்டே யிருப்பேன் மனோன்மணியே. 75

படுத்துப் படுத்துநெஞ்சிற் பளிச்சுபளிச் சென்றுமுத்தங்
கொடுத்துக் கொடுத்துநான் கொள்வேன் மனோன்மணியே. 76

வன்னச் செழும்பவள வாயிதழூ றற்சுவைதான்
கன்னத்தில் வீழ்ந்து கடிப்பேன் மனோன்மணியே. 77

கச்சிறுக்கு மாதரின்பங் கைச்சிறுக்கும் போதவின்பம்
வைச்சிறுக்குக் கொங்கையிற்கை வைப்பேன் மனோன்மணியே.

இத்தித் தொழுகுகாமதேனமிர்த வூறலுண்பேன்
முத்திதழு விததழுவி முகப்பேன் மனோன் மணியே. 79

படியோர்க்கெல் லாமுயன்ற படியோர்க ளானகுணங்
குடியோர்கள் போலுமின்பங் கொள்வேன் மனோன்மணியே. 80

சேயாயு மென்மடியிற் செங்கீரை யாடியருட்
டாயாயு மங்கை தருவாய் மனோன் மணியே. 81

அங்கைதந்து தந்தே யணைததா யருளமிர்தங்
கொங்கைதந்து தந்தே கொடுப்பாய மனோன் மணியே. 82

தாவி யணைத்தென் ருயேயுனை யென்றிந்தப்
பாவி முடியில்வைத்துப் பார்ப்பேன் மனோன் மணியே. 83

ஏங்கியழு வேனோவுன் னிணையடியைக் காணாமற்
றூங்கிவிழு வேனோவென் றோழி மனோன் மணியே. 84

உலைபோ லெரியுமென்ற னுளங்குளிர மேல்வளர்ந்த
மலைபோ லெழுந்தருளி வருவாய மனோனமணியே. 85

கன்ம மறுவதெந்தக் காலமோ யானறியேன்
நன்மை தருவதெந்த நாளோ மனோன மணியே. 86

பன்னீ ரொழுகுமுன்றன் பாத மலரையென்றன்
சென்னிமீ தென்றுமருள் செய்வாய் மனோன்மணியே. 87

தாயினுமிக் காங்கருணை தயாநிதியே யிவ்வுரையை
நாயினுமிக் காங்கடையே னவின்றேன் மனோன் மணியே. 88

கால்பிடித்துக் கண்ணில்வைத்துக் கைகுவித்து மெய்ம்மயங்கி
மால்பிடித்துச் சொன்னதெல்லா மகிழ்வாய் மனோன்மணியே. 89

அடியானை யுன்னடியார்க் கடியானு மாக்கிகுணங்
குடியா னெனப்பிரியங் கொடுப்பாய் மனோன்மணியே. 90

உச்சிதவச் சிரமலையே யொப்பில்லா மாணிக்கமே
கச்சிதப் பசசைமர கதமே மனோன்மணியே. 91

செப்புறா வாணிமுத்தே சிறந்தபவ ளக்கொடியே
புட்பரா கக்கமலப் பூவே மனோன் மணியே. 92

கோமே தகமே குளிர்ந்தவயி ரியமே
மாமேரு வேநீல மலையே மனோன் மணியே. 93

வற்றா வருட்செல்வ வாழ்வேகரு ணாநிதியே
பொற்றா மரைக்கமலப் பொகுட்டே மனோன்மணியே. 94

அல்லி மலரே யலர் செங்கழு நீர்மலரே
மல்லிகைக் கொத்து மலரே மனோன் மணியே. 95

பொன்மலரே பன்மலரே புகழ்தருபன் னீர்மலரே
மன்மத பாணமா மலரே மனோன் மணியே. 96

குடலை நிறைந்ததொரு கொததலரிச செம்மலரே
மடலவிழ்ந்த செந்தாழை மலரே மனோன் மணியே. 97

பூக்கு மருண்மலரே புளிக்காத மாமலரே
வாக்கு மலரேகண் மலரே மனோன் மணியே. 98

வஞ்சியர்செய் மோசமுடன் மறலிசெயு நாசத்திற்கு
மஞ்சி யுனக்கடிமை யானேன் மனோன்மணியே. 99

அடியாரும் வாழியிக்க வடியேனும் வாழிகுணங்
குடியாரும் வாழிகுணக் குன்றே மனோன்மணியே. 100

உமையாள் பாத முன்னிற்க.

ஆதியந்தங் கடந்தவுமை யாடன் பாதம்
அகண்டபரி பூரணமா மையர் பாதஞ்

சோதியந்தங் கடந்தகண பதியின் பாதந்
தொழுதிறைஞ்சிக் கரங்குவித்துப் போற்றிசெய்து
வாதியந்தங் கடந்தநந்தி பாத மென்றும்
வாலமனோன் மணியம்மை பாத மென்றும்
ஓதியந்தங் கடந்தண்ட மிரண்ட தாக
ஒன்றுமறி யாவறிஞ ருரைசெய் தானே.

மனோன்மணிக்கண்ணி முற்றுப்பெற்றது.

ஆக பாடல் – 980.



# நந்தீஸ்வரக்கண்ணி.

ஆதியந்தங் கடந்தவுமை யாளருணு தாநதச்
சோதியநதங் கடநதசெழுஞ் சுடரேநந தீஸ்வரனே. 1

முடியடியாய் நின்றநடு மூல மணிவிளக்கே
அடிமுடியாய் நின்றநடு வணையேநந தீஸ்வரனே. 2

கர்த்தனே யானுன் கருணைத் திருவடிக்கே
எத்தனைதான் றெண்ட னிடுவேனந் தீஸ்வரனே. 3

தீர்க்கதெண்ட னிட்டேன் றிருவடியைப் போற்றிசெயதேன்
வாக்கு நடக்க வரமருணந் தீஸ்வரனே. 4

மாசில் பரவெளியே மவுனமணி மாளிகையில்
வாயிற் பெருவழியே மகததேநந தீஸ்வரனே. 5

மகத்தோனே ஞான மழையே யருள்வெள்ள
முகததோனே மோன முளையேநந தீஸ்வரனே. 6

ஞானம் விளைவேற்று நல்லசமு சாரிகட்கு
மோன மழையூற்று முகிலேநந தீஸ்வரனே. 7

மும்மூல யோக முழுதுஞ்சித்தி செய்துதர
உன்னாலே யாகு முயிரேநந தீஸ்வரனே. 8

சமர்கொடுத்து வென்றேங்கு சாம்பவியைக் கைப்படுத்தித்
தமர்விடுத்து நீக்கித் தருவாய்நந் தீஸ்வரனே. 9

நல்லோர்க்கு நீகாட்ட நல்குங் குணங்குடிவாழ்
வெல்லோர்க்கு நேர்காட்ட வெளிதோநந தீஸ்வரனே. 10

இல்லி னிடங்காட்டி யிதழ்விரியுஞ் செங்கமல
வல்லி னிடங்காட்டி வைப்பாய்நந் தீஸ்வரனே. 11

சாமிதனை யுஞ்சுத்த சைதந்ய மானசிவ
காமிதனை யும்மென்று காண்பேனந் தீஸ்வரனே. 12

உமையாளு மெய்யா யுவந்தடிமை கொள்ளும்வண்ணம்
எமையாளு மையா விறையேநந் தீஸ்வரனே. 13

கேசரத்தைக் காட்டி கௌரொளியா டன்னருட்பால்
ஆசரித்தே பூட்ட வருள்வாய்நந் தீஸ்வரனே. 14

சத்தி சிவமுதலாச சாம்பவியம் பாளருளிற்
செத்த சிவமுதலாச் சிததாநந் தீஸ்வரனே. 15

சித்தானை யீன்ற சிறுபெண்ணுந் தாளிரண்டு
பொற்றூளை யென்றோ புணர்வேனந் தீஸ்வரனே. 16

பத்து வயதுடைய பாவையரை யன்றோநீ
சித்தர்க்கெல் லாநதாயாய்ச செயதாயநந் தீஸ்வரனே. 17

காமரூபி யைநிதய கல்யாண சுநதரியை
ஓமரூபி யையெற்கு மூதவுநந் தீஸ்வரனே. 18

கேசரியா டன்கருணை கிட்டினன்றோ வாசாம
கோசரவாழ் வெல்லாங் கொடுப்பாய்நந் தீஸ்வரனே. 19

மூலவொளி சூட்டி மோனக் குணங்குடிக்கும்
மேலைவழி காட்டி விடுவாய்நந் தீஸ்வரனே. 20

கண்டப்பா லங்கடத்தி கமலாசனத் தேற்றி
அண்டப்பா லுங்கொடுத்தே யருள்வாய்நந் தீஸ்வரனே. 21

செங்கமல பீடச் செல்வியர்தாஞ் சித்தம்வைத்தாற்
றங்கமலை கூடத் தருவானந் தீஸ்வரனே. 22

போதகத்தைப் பூட்டிப் புருவமையத் தாயுமேற்கும்
வாதவித்தை காட்ட வருவாய்நந் தீஸ்வரனே. 23

ரசயோக சித்து நயனருளி னுலடிமை
நிசயோக மூற்று நிலைப்பேனந் தீஸ்வரனே. 24

மகாவித்தை காய்ப்பதற்கு மதியமிர்த ஊறலுண்டே
லகிரியுற்று நிற்பதற்கு லபிப்பாய்நந் தீஸ்வரனே. 25

குப்பை வழலையெனுங் கோழையெல்லாங் கக்கவைத்துக்
கற்ப வழலைவரக் காட்டுநந் தீஸ்வரனே. 26

கற்ப வழலைவரக் காட்டிகற்ப முண்ட தற்பின்
பற்ப வழலைமுறை பகர்வாய்நந் தீஸ்வரனே. 27

சூதமுத னீற்றிற் சொன்னமதி யமிர்தப்ர
சாதமதி லூற்றித் தருவாயநந் தீஸ்வரனே. 23

அற்பமாநதே கமதா யடியே னெடுத்தவுடல்
கற்பதேக மாகக் கணிப்பாயநந் தீஸ்வரனே. 29

உமைநம்பி னோர்வாழு மோங்கு குணகுடியார்க்
கெமனும் பிணையாரு மெதிரோநந் தீஸ்வரனே. 30

முநீஸ்வரரி லொன்றாய முடித்தருள்வா யாகிலெனைச்
சநீஸ்வரர் கூடச சாட்டாயநந் தீஸ்வரனே. 31

காலனும் போய்விடுவான் காலங் கடந்துசிறு
பாலனும் மாய்விடுவேன் பரமேநந் தீஸ்வரனே. 32

கவன மணிமுதலாய்க் கட்டியென் கைக்களிக்க
மவுன மணித்தாய்க்கு வகுப்பாயநந் தீஸ்வரனே. 33

மாயை வலைவீசி மயக்காம லென்றன்மேல்
நேய வலைவீச நிகழ்த்துநந் தீஸ்வரனே. 34

தோகை யிளமின்னார் சுகபோக மும்பசியும்
போக வழிசொன்னாற் போதும்நந் தீஸ்வரனே. 35

பெண்ணா யுலகமெல்லாம் பிணக்காடதாக்கியையோ
மண்ணாய மடிவதென்ன மாயமநந் தீஸ்வரனே. 36

சையோகப் பித்தைவெல்லச் சமர்த்தோடு கச்சைகட்டு
மெய்யோகப் புத்திசொல்ல வேண்டும்நந் தீஸ்வரனே. 37

பாஷாண் டிகடோறும் பலனென்று மின்றிவெறும்
வேஷாண்டி யாக்கி விடுகோணர் தீஸ்வரனே. 38

பிணம்பிடுங்கித் தின்னும் பேய்போற் சிலநூளையர்
பணம்பிடுங்கித் தின்பதென்ன பாவம்நந் தீஸ்வரனே. 39

பணமுடியா னென்றும் பவம்பிடியா னென்றுமெனைக்
குணஙகுடியா னென்றுங் குறிப்பாய்நந் தீஸ்வரனே. 40

உன்னையன்றி யேழை யோரே ருவரையும்
அன்னையென்று மாளா வருள்வாயநந் தீஸ்வரனே. 41

ஆத்தாளைத் தேடி யலைந்தலைந்து விண்பறக்குங்
காற்றூடி யானேனென் கண்ணேநந் தீஸ்வரனே. 42

மான்பிரிந்த கன்றாய் மயஙகுதற்கென ஞயவயிற்றி
லேன்பிறந்த கன்றே யிருந்தேனந் தீஸ்வரனே. 43

வனே வெனையீன்ற ளொ:தாயிவ் வாறுசெயத்
தானே வினுமென்செயத் தானேநந் தீஸ்வரனே. 44

தாய்தாயே யென்றே தலைப்புரட்டக் கொண்டுவெறு
வாய்வாயை மென்றே மடிவேனந் தீஸ்வரனே. 45

தாயைவிட்டுப் பிள்ளை தவிப்ப தறிந்தவுடன்
சேயையிட்டம் வைத்தணைக்கச் செயவாயநந் தீஸ்வரனே. 46

கன்றினுக் கேயிரஙகுங் காலியென வென்னைதான்
என்று மெனக்கிரஙக விசைப்பாய்நந் தீஸ்வரனே. 47

மாயை மணமுடித்து மயக்கா தெனையீன்ற
தாயை மணமுடித்துத் தருவாய்நந் தீஸ்வரனே. 48

தற்பரத்தி னல்வெளியே சர்வபரி பூரணமே
சிற்பரத்தி னேரொளியே சிவமேநந் தீஸ்வரனே. 49

முத்தரெலாம் வாழியெங்கண் மோனமணித் தாயருளுஞ்
சித்தரெலாம் வாழிசுத்த சிவமேநந் தீஸ்வரனே. 50

குற்றம் பலநீக்கிக் குணங்குடியென் றேமேவுஞ்
சிற்றம் பலவாழ் சிவமேகந் தீஸ்வரனே. 51

கட்டளைக் கலித்துறை.

மடக்கி மடக்கி வருமா யினுஞ்சொல்லு மாண் பொருளும்
அடுக்கி யடக்கிக் கிடக்குங்கண் டீர்பலனுய்ந்து கொள்வார்
நடக்கினு மாமன வுண்மையி னுள்ளி நடையொழிந்து
கிடக்கினு மாமென் றறிதரநாடிக கிளத்தியதே.

ஆக பாடல் – 1033.



பிசுமில்லாஹி.

## மஸ்தான்சாகிபு அவர்கள்பாடிய

# கீர்த்தனைகள்.



இராகம்-புன்னுகவராளி-தாளம்-அடசாப்பு.

பல்லவி.

பரமுத்தன் குணங்குடி தெருவில் வரும்பவனி
பார்த்து வருவோம வாருங்கள.

அநுபல்லவி.

வரமுத்தர் சுரகணங் தரமுற்றவர்களிரு
பரமொய்த் தினியதுதி தரமுத்தி யருளுநம் (பரமுத்)

சரணங்கள்.

1 சாத்திரவேதஞ் சலாம்-சலாம் சலாமென்ன
ஜகஜோதி மின்னல் பளீர்-பளீர் பளீரென்ன
பேர்த்துளம் போற்றும் றகீம்-றகீம் றகீமென்ன
பிசுமில்லா ஹீர்றஹ்மா னிற்றஹீமென் றுள்
அசையாம லொருநிலை விசுவாச மருளுநம் (பர)

2 கருமமத்தள தாளங் திடீல்-திடீல் திடீலென்ன
கைம்மணியோசை கணீல்-கணீல் கணீலென்ன
திருவருளாட்டங் திமெ்-திமெ் திமெமென்ன [ம்
தினத்தங்தோங்தினத்தங்தோம்மனத்தொங்தோமனத்தொங்தோ
உனத்தாளனைத்தையு நினைத்தபடியாகநம் (பர)

3 நாசச் சரீரம் நரேல்-நரேல் நரேனென்ன
நஞ்சவினைகள் சரேல்-சரேல் சரேலென்ன
வீசு மருட்கள் விறீல்-விறீல் விறீலென்ன
வேதவாளெடுத்தேந்தி சோதிவா சியிலேறி
ஆதி பிசுமிலுட ஞேதிக் கலிமாவைநம் (பர)

4 நாடாத பேர்கள் பயம்-பயம் பயமென்ன
நம்பிய பேர்கள் ஜயம்-ஜயம் ஜயமென்ன
தேடிய பேர்கள் நயம்-நயம் நயமென்ன
திகருத் திசைகளெங்கு-மிக்க வொளிபரப்பி
ஒக்க வுலகமொரு கைகருள் ளடங்குநம் (பர)

இராகம்-சௌராஷ்டிரம்-தாளம்-சாப்பு.

பல்லவி.

இல்லல் லாகூவென் றென்னை மறந்துகொண்
டிருப்பா யென் னெஞ்சமே.

அநுபல்லவி.

அல்லல்லா கூவென்ற வகண்டிதா கண்டமா
நல்லா யிருக்குது காணும்-ஒரு
சொல்லாலே இப்படித் தோணும்-வெகு
உல்லாச மாலாயிலாக (இல்)

சரணங்கள்.

1 அண்ட புவனங்க ளென்று மிருப்பதை
யாரென் றறியாது தானே-எங்கும்
நின்று நிறைந்து மறைந்து சிறந்த
நெடிய நிராமயந் தானே-முதல்

பண்டு பழகிய நாட்டத்துக் கேயது
பாவைக்கூத்தானது தானே-நீ
கண்டு களித்துச் சகலமும்விட்டுக்
கரையேறி ஞல்நலந் தானே-தான்
சென்றவிடஞ்செயந் தானே-தன்னைக்
கண்டுகொண்டு லாயிலாக (இல்)

2 கெட்ட மனத்தை யுடையவெருமைக
கிடாவினைப் போலவு முண்டோ-காசைக்
கட்டிப் புதைத்துக் கடைசியிற் சாகின்ற
கழுதைகட் கும்பல ஞுண்டோ-சுத்த
மட்டிப் பயல்கள் மனதைக் கரைக்க
மருநதுகள் மாத்திரை யுணடோ-வெகு
சட்டம தாகிய நிட்டையிராத
சண்டாளர்க்குச் சாஸ்திர முண்டோ-இநதத்
துட்டரைப் போலவு முணடோ-நீ
கெட்டியுடன் லாயிலாக (இல்)

3 இல்லல்லா கூடவென் றெநாளிராமல்
இணைபடவு மிருந் தேனே-மெத்த
நல்ல நோன்புடன் றொழுகையும்விட்டு
நலஙகளையுமறந் தேனே-தன்னை
வெல்லுங் குருபரன் சொல்லியதீக்ஷை
வினவாமல் விட்டிருந் தேனே-அதை
அல்லும் பகலு மறியாமலென் னுள்ளே
ஆபாச மாக்குவித் தேனே-இது
எல்லா மறிநதிடுந் தானே-சொல்லுஞ்
சொல்லுஞ் சொல்லும் லாயிலாக (இல்)

4 பூசைகள் செய்கிறே | னென்று திரிந்து
புலம்பிய பாவமும் | போக்கி-பெண்கள்
ஆசையி னாலே | யனேகந் தாரங்கள்
அடிபட்ட தும்லகு | வாக்கி-எங்கள
ஈசன் றிருவடி | யாசையுள் ளானபின்
என்னைக்கை யாலவர் | தூக்கி-அந்தத்
தோஷித் தனங்க | டொலையத் தொழுத
றுரைகளைப் போதனை | யாக்கி-கெட்ட
பாசங்க ளைவிட்டு | நீக்கி-தந்த
வாசியுடன் | லாயிலாக(இல்)

5 என்சா னுயரத் | திருக்கும் பனங்க
ளிறக்கி யுண்ணேன் | மனக் கண்ணே-கெட்ட
கஞ்சாவுநகள்ளு | மரக்கு மபினுங்
கலப்பதை விடுவெறு | மண்ணே-நீ
தஞ்சா வூரானு | மகராஜன்பாதந்
தணிந்து நமஸ்காரம் | பண்ணே-என்றன்
கொஞ்சப் பெலனுள்ள | காயா புரியென்ற
கோட்டை யிடித்திடு | மெண்ணே-அவர்
அஞ்சா திடிப்பரென் | றெண்ணே-இனிக்
கொஞ்சிக் கொஞ்சி | லாயிலாக(இல்)

6 என்ன விதமென்று | சொல்வேன் முழக்க
முழங்குவ தென்னுக்குள் | ளாலே-ஒரு
அன்ன மிருந்தே | யழகுபிறக்க
அசைந்தசைந் தாடுவ | தாலே-அதன்
முன்னாலே யான்செயத | பாக்கியங் கண்டு
மூன்றுசை யில்லாத | தாலே-அது

தன் ஞானலயானந்த வெள்ளம் பெருகித்
தடையறப் பாய்வத ஞலே-பயிர்
அன்னம் பிடிப்பத ஞலே-உனக்
கென்ன குறை லாயிலாக(இல்)

7 வாசனை யாகிய மாசற்ற வஸ்துவும்
வாக்கு மனத்துக் கெட்டாதே-அதில்
ஆசைக் கடல்பொங்கி யோசை யுடனலே
ஆடிடு மொன்றுங் கட்டாதே-இந்த
நாசச் சரீரத்தை வாசியிற் றீட்டிடில்
நாசத்தை யண்ட வொட்டாதே-நல்ல
யோசனை செய்யுங் குணங்குடி வந்திடில்
யோக முனக்குக் குன்றாதே-ஒரு
மாசற்றகூ டென் றேறுதே-காசில்
ஆசைவிட்டே லாயிலாக(இல்)

---

இராகம்-பந்துவராளி-தாளம்-சாப்பு.

பல்லவி.

பெண்கொண்ட பேர்பட்டபாட்டையுங் கேட்டையும்
பேசுவோமே நெஞ்சமே

அநுபல்லவி.

சங்கையும் போக்கிச் சதிமான மாகச்
சகசண்டி யாக்குவித் திடுவாள்-வெகு
பங்கப்படுத்திவிட் டிடுவாள்-அந்த
மங்கையராசைவைத் தையையோவையத்தில்(பெ)

சரணங்கள்.

1 தங்க நகையு முகப்பணிச் சேலையுந
தாவென வேகுரங் காட்டுவாள்-என்றன்
செங்கை வளையுந தலைக்கெண்ணெய் சீப்புஞ்
சிறப்பொடு தாவென மாட்டுவாள்-வன்னக்
கொஙகைக் கிசைந்த ரவிக்கையுங் கோலப்
பணியுங் கொடுவென மூட்டுவாள்-அட
வெஙகப் பயனீயென் றுமக கஞேவென்று
வீட்டில் வாராதேயென் ரோட்டுவாள்-வெகு
பஙகப் பழிப்பினி ஞட்டுவாள்-அநத
மங்கைய ராசைவைத் தையையோ வையத்தில்(பெ)

2 ஆதியைத் தேடி யருள்பெற நாடி
அழுதழுதுமடி பிடிப்பாள்-நீதான்
ஏதென்னை விட்டுப் பிரிவதுமென்றவள்
ஏஙகியேஙகித்துடி துடிப்பாள்-இன்னும்
வாதாசீ செய்யுந தவம்பலி யாதென
வாழ்த்தி வசைகொடை கொடுப்பாள்-கெட்ட
மூதேவி புத்தி படைத்தவளாகி
முரணுக்கு மாரடி துடிப்பாள்-வெகு
வேதனையாயமட மடப்பாள்-அந்த
வாதிகளாசைவைத் தையையோவையத்தில்(பெ)

3 நாடிக் குருவடி தேடி நடக்கின்ற
நற்செயலைக்கசப் பாகுவாள்-எங்கும்
ஓடித் திரிநதே யலைந்து பணங்கள்
ஒருக்காலே தேடென்று தாக்குவாள்-அவன்

தேடும் பொருடனைக் காணிலுமக்கெதிர்
தேசத்தி லாரென்று தூக்குவாள்-இன்னும்
ஆடென்றும் மாடென்றும் வீடென்றுந்தேடென்றும்
ஆண்டவனைமறப் பாக்குவாள்-பின்பு
ஈடொன் றிலாநினை வாக்குவாள்-அந்த
கேடிகளாசைவைத் தையையோவையத்தில் (பெ)

4 நீராட்ட மாடிமை யிட்டுப்பொட்டிட்டு
நிரம்ப வுடைமைக ளிடுவாள்-வந்து
போராட்டமாகவே சீராட்டஞ்செய்துன் றன்
புத்தியைப் போக்கடித் திடுவாள்-பின்பு
பாராட்டம் பண்ணியுன் றன்னையும்விட்டுப்
பலர்முகம் பார்த்தவன் கெடுவாள்-சுத்த
மாராட்ட மாகு மனந்தெளியார்க்கு
மருண்மழை யேபொழிந் திடுவாள்-கெட்ட
சீராட்டி யாய்வந்து முடிவாள்-அந்த
நாரிகளாசைவைத்தையை யோவையத்தில் (பெ)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பாடையிலே துறவடைந்து பரமடைந்த குணங்குடியார்
பகர்ந்த ஞானம்
யாடையிலே துறவடைந்து பரமடைந்தானந்தசுகம்
படைத்தி டாரைப்
பாடையிலே போட்டுமிடு காட்டிலிடப் படுமுனையும்
பலரு மந்தப்
பாடையிலே போட்டெடுக்க நாள்வருமென் றறிந்திலையே
பாவி நெஞ்சே.

இராகம்-கல்யாணி-தாளம்-சாப்பு.

பல்லவி.

எத்தனை யாட்டநீ யாடினும் பதைப்பற்
றிருந்திடுவாய் நெஞ்சமே. (எத்தனை)

அநுபல்லவி.

புத்திசற்றேனும் படைத்தா யெனிலந்தப்
போதனை யேயுனைத் தோற்றும் மூன்று
வாதனை யும்மற மாற்றும்-யோக
சாதனை மீதினு மேற்றும்(எத்)

சரணங்கள்.

1 நற்றவஞ் சித்திக்கு முத்தி தருந்தச
நாதத்தை யுஞ்சுருதி யாக்கும்-கட்டிச்
சுற்று மறுதலைக் கட்டு மவிழ்ந்திடச்
சோடசப் பின்னலை நீக்கும்-பாயும்
பததோ டிரண்டு கலையுமெட் டாகப்
பராபர மும்முகம் பார்க்கும்-நல்ல
சுத்த மயப்படி கசசுயஞ் சோதிச்
சுழிமுனை யுந்தலை காக்கும்-எமன்
உத்தியோகந் தனைப் போக்கும்-வந்து
வெற்றிக் குணகுடி வாய்க்கும் (எத்)

2 காற்பசு தன்னை வெளியில் விடாமலுங்
கட்டித் தொழுவினின் மாட்டும்-வீட்டில்
பாற்பசு வைப்பக்கு வத்துடன் வைத்ததன்
பாலைக் கறந்துணக் கூட்டும்-ஏழை
போற்பசி தன்னையும் போக்கித் தயசுக்குப்
போவென்ன நேர்வழி காட்டும்-அதன்

மேற்படக் காலா லுதைத்து முதைத்தின்னும்
விட்டேனோ வென்றுகை நீட்டும்-உன்றன்
மாற்படியாவையுஞ் சாட்டும்-மாட்டை
மேய்ப்பக் குணங்குடி யோட்டும் (எத்த)

3 வஞ்ச மறலி வரவிடு தூதான
வஞ்சிய ராசைவிட் டோடும்-மெத்தப்
பிஞ்ச பழங்கந்தை யானபுன் மாயையைப்
பேயர் தலையினிற் போடும்-நாளும்
தஞ்சமென் றென்குரு நாதன் றிருவடி
தன்னைத் தொழுதிட நாடும்-இனி
என்செய லேது மிலையென் றவரிடம்
ஏங்கியேங்கிநையப் பாடும்-நின்று
அஞ்சாம லஞ்சியே வாடும்-மிக்க
கெஞ்சிக் குணங்குடி தேடும் (எத்த)

4 இடைபிங் கலைக்கிடை யில்லடை யுஞ்சுழி
எளிதிற் றடையற மீறும்-பாயும
மடைகண்டு வருமதி யமுதமுட் கொண்டு
வரவாக் காயமுந் தேறும்-இந்த
உடலோ டிருந்து தபஞ்செய்ய வுங்கற்பம்
உண்டேம கண்டமும் மாறும்-பின்பு
குடங்கவிழ் நீரென்ன நீசெய்பவங்களுங
கொட்டுண்டு மண்மீது சாறும்-முன்னைத்
தொடரிரு வினைவெந்து நீறும்-அருள்
படருங குணங்குடி யேறும் (எத்த)

5 ஆதார மாறினுஞ் சேதாரம் வாரா
தடுக்கடுக்காகவே விடுக்கும்-எமன்

பாதை பார்த்து நிற்குங் கண்டமெனுமயிர்ப்
பாலத்தையு மெள்ளக் கடக்கும்-பின்பு
காதுகண் ணுக்கொடு மூக்குமொன் றூகக்
கவிந்துமங் நாளத்தை யடக்கும்-என்றுஞ்
சூதானமாகிய வெட்டவெளி சென்று
சொக்கி மயக்குண்டு படுக்கும்-குரு
நாத னருளடை கிடக்கும்-பாஞ்
சோதிகுணங்குடி யடுக்கும் (எத்த)

6. உந்தியின் கீழ்நின் றுதித்த சுழுமுனை
ஓங்காரக் கோதண்டம் பிடிக்கும-வருஞ்
சந்திரன் சூரியன் மேல்வைதது தாக்கிச்
சமர்பொருது ஜெயம் படைக்கும்-சற்றே
குந்தி யிருநதிளைப் பாறித்தெளிந்து
குசாலாகச சாய்ந்தங்கே படுக்கும்-அதற்
கந்தியுஞ் சந்தியு முச்சிமுக் காலமும்
ஆதரித்துப் பூசை நடக்கும்-தேவ
இந்திரன் போனின்று நடக்கும்-இங்கே
வந்து குணங்குடி கொடுக்கும் (எத்த)

7. சொல்லித் திரிதற் கறிவுகற்றதோஷ
தோஷத்தை நாசத்தி லாக்குங்-கற்றும்
நல்ல வறிவற்ற புலையரைக் காண்கி
னடுங்கி யுடலெங்கும் வேர்க்கும்-மலை
கெல்லி யெலிபிடித்த கதைபோற் காசுக்
கேயலை யாதுனைக் காக்கும்-பாயும்
வல்லயம் போல்வரு மாயை யரஞ்சண்டி
மாட்டுக்கும் மாசண்டி யாக்கும்-கரு

நெல்லிக் கனிகைக்குள் வாய்க்கும்-அருள்
மூல்லைக் குணங்குடி பூக்கும் (எத்த)

8. காமக்கு ரோதக் களையைக் களைந்து
கடுஞ்சுழிக் காற்றிலே தூற்றும்-யோக
பூமிக்குள் மோன வித்தைப் பதித்துப்பரி
பூரண மாய்ப்பயி ரேற்றும்-மேற்
சோமன் மதிவட்ட மீது சுழுமுனைச்
சொக்கித் தெளிந்திடத் தேற்றும்—தாயை
வாமம் வைத்துப்பூசை பண்ணிப் பணிந்திட
வாரி யமிர்தத்தை யூற்றும்-நல்ல
நேமத் துடனுனைப் போற்றும்-என் றுஞ்
சேமக் குணங்குடி யேற்றும்(எத்த)

9. இல்லந் துறந்து வரும்பல தொல்லைகள்
எல்லா மெடுத்தெடுத் தெறியும்-மூடும்
வல்லிரு ளாகிய மாமாயை தந்த
மயக்கும் விட்டுவிட்டுப் புரியும்—ஒரு
எல்லையிற் பேரின்ப வெள்ளப் பெருக்கில்
எடுத்துண்டு தன்வயி ணிறையும்-பின்பு
அல்லும்பகலுஞ் சுகானந்த நிஷ்டையில்
அண்டமும் பிண்டமுந் தெரியும்-எங்கும்
சொல்லு மருண்மழை சொரியும்-மெத்த
நல்ல குணங்குடி புரியும்(எத்த)

10. கூடிக் குலாவு மடவாரைக் கொஞ்சிக்
குலவார மூங்கையை விடுக்கும்-வன
வாசத்துக் கேகித் தவம்புரி தற்கிச்சை
வைத்து வைத்துத்துடி துடிக்கும்-கெட்ட

ஆசைப் பசாசைத் தூரத்தித் தூரத்திவந்
தண்டவொட் டாமலே யடிக்கும்-ஞான
தேசிகன் பாதார விந்தத்தை யேமோனச்
சின்முத் திரையாகப் பிடிக்கும்-உப
தேசத்துக் காரைப்பந் தடிக்கும்-நமக்
கீசன் குணங்குடி கிடைக்கும் (எத்த)

11 செத்தாலும் வைத்தடி வாங்காம னிற்கின்ற
தீரத்தை யேதிர மாக்கும்-சற்றும்
மெத்தாதி புத்திவந் தெற்றும னுன்றனை
மேவி விழுந்துதை தூக்கும்-எங்கள்
சித்தாதி கட்கருள் செய்தநன் முத்தியுஞ்
சித்தியும் வெற்றியும் வாய்க்கும்-கின்று
எத்தா லினிப்பிழைப் போமெனவெண்ணுமல்
எங்கோ னருட்பாது காக்கும்-ஒரு
மித்த பவங்களைப் போக்கும்-மோன
வித்தைக் குணங்குடி வாய்க்கும் (எத்த)

12 எண்ணாத வெண்ணத்தி னூடே படர்ந்தெழும்
இன்ப விநோதத்தை வீட்டும்-கெட்ட
மண்ணான மூவாசை மண்ணாகவு நல்ல
மானுபி மானத்தை யோட்டும்-என்றன்
கண்ணே மணியேயென் கண்ணுத லேயெனக்
கண்ணீரு முண்ணீரு மூட்டும்-பின்பு
தண்ணீரு மண்ணுங் கலந்ததுபோற் சிந்தை
தத்தளிக்க நிலை நாட்டும்-நடம்
பண்ணும் பரவெளி சூட்டும்-உய்யும்
வண்ணக் குணங்குடி காட்டும் (எத்த)

13 வித்தக ஞர்சொன்ன புத்திபுன் மாயை
வேங்கைப் புலியெனச் சாடும்-நம்மை
வெற்றிகொண் மாதர் முயக்களற் கேணி
விரிவோ டவுங்காயப் போடும்-உன்னைப்
பெற்றார் பிறந்தார் சுற்றத்தார் முதலான
பித்தர்க் கெல்லாமுகம் வாடும்-நல்ல
பத்தரை மாற்றுப் பசும்பொன்னை யொத்த
பரவெளி பம்பர மாடும்-மேலுங்
கத்த னருளுங்கை கூடும்-நாளுஞ்
சித்துக் குணங்குடி யாடும் (எத்த)

14 எங்கு நிறைந்த பெரும்பொருளென்னு
இருந்துகொண் டேவினை யாடும்—ஒரு
கங்கு கரையறப் பொங்கிப் பரவிக்
கருணைக் கடல்வந்து மூடும்-அருள்
வங்கமுந தஙகாம விஙகுவந தென்னை
மகிழ்ந்தடுத் தேற்றிக்கொண் டோடும்-நாளும்
மங்காத தங்க மவுனப்பொருளு
மலைமலை யாகக்கை கூடும் இன்னும்
பங்கு கொடுக்கவு நாடும்-யோகந
தங்குங் குணஙகுடி சூடும் (எத்த)

15 வாசாம கோசர வான்பொரு ளென்றன்
மடிமீது செங்கீரை யாடும்-மோன
தேசிகன் பாதார விநதந்தத் தெய்தத்தத்
தெய்யெனக் கூத்துகள் போடும்-எங்கள்
ஈசன் திருவரு டாளுணை கொட்டிப்போர்
இன்பக் கோலாகலம் பாடும்-எம

பாச மறுத்துக்கொண் டென்னச் சுமட்டமும்
பாய்ந்து மடமடென் றேடும்-கோட்டை
வாசற் கடந்துட்சென் றூடும்-மேலே
பேசுங் குணங்குடி கூடும் (எத்த)

கொச்சகக்கலிப்பா.

ஐயையோ வென்விதியை யாரிடத்திற் சொன்னாலும்
ஐயையோ வென்றே யழுங்கவலை கொள்வார்தாம்
ஐயையோ வையகத்தி லாருமிலை யுன்னையன்றி
ஐயையோ வடிமையைக்கை யணைப்பாய குருபரனே.

இராகம்-பைரவி-தாளம்-சாப்பு.

பல்லவி.

ஐயையோ நானென் செய்வேன் என்விதிவசம்
ஆருடனே சொல்லி யழுவேன்.

அநுபல்லவி.

மெய்யெடுத்ததும்பொய்யாய் வீணாள்கழிந்துபோச்சு
பொய்யி லாதவென்னையனருளது
கையு மெய்யுமாக் கண்ணிற்காணேனே (ஐயை)

சரணங்கள்.

1 பார்க்கப்பலவித மறைவாய் சமையலான
பதினாலு லோகமு நிறைவாய்
வாக்கு மனமுமதி னேக்க மதுவாய்நின்றுந்
தீர்க்க மாயறி யாமற் றேடியே
பார்க்குள்ளே யலைந் தலைந்துங் காணேனே (ஐயை)

2 முன்னோர்செய்திடுபாவ லாபமோ பாதகமோவென்
மூதேவித் தனங்கொள்பிர தாபமோ

என்ன கொடுமைகளோ வென்றலை விதிதானோ
இன்ன பேதமில் லாதசோதியை
இன்ன மென்னுட் கண்ணிற்காணேனே (ஐ)

3 ஆசாபா சங்களைவற்றையும் விட்டும் அனுதினம்
ஆனந்த வெள்ளத்து ளகப்பட்டும்
ஓசைமணி பூரகத் துள்ளெங்குநதேடியும்
வாச மொய்த்த குணங்குடிப்பர
தேசி யெய்த்து மினைத்துங்காணேனே (ஐ)



இராகம்-கேதாரகௌளம்-தாளம்-ஆதி.

பல்லவி.

சூத்திரப் பாவைக் கயிறற்று வீழுமுன்
சூக்ஷக் கயிற்றினைப் பாரடா-அதி
சூக்ஷக் கயிற்றினைப் பாரடா.

அநுபல்லவி.

நேத்திரம் ரண்டினும் நேரே யிலங்கிய
நீடொளி போன்றது தேடரி தாகிய
காத்திர முள்ளது யாவும் பொதிந்தது
கையினுங் காலினு மெட்டப் படாததோர் (சூ)

சரணங்கள்.

1 சாத்திர வேதஞ் சதகோடி கற்றாலும்
சமய நெறிகளி னாசாரம் பெற்றாலும்
பாத்திர மேந்திப் புறத்தி லலைந்தாலும்
பாவனை யாலுட லுள்ள முலைந்தாலும்

மாத்திரைப் போது மெமன் வரு மப்போது
மற்றொன் றுதவா துதவா துதவாது
சூத்திரமாகிய தோணி கவிழுமுன்
சுக்கானைநேர்படுத் திக்கணமே சொன்னேன் (சூ)

2 உற்றுற வின்முறை யார்சூழ்ந் திருந்தென்ன
ஊருட் சனங்களெல் லாரும் பணிந்தென்ன
பெற்றாரும் பெண்டிரும் பிள்ளை யிருந்தென்ன
பேணும் பெருஞ்செல்வ வாணவத் தாலென்ன
கத்தன் பிரிந்திடச் செத்த சவமாசசு
காணாது காணாது கண்டதெல் லாம்போசசு
எத்தனைபேர்கின று கூக்குர லிட்டாலும்
எட்டாமற் போய்விடுங் கட்டையல்லோவிந்தச (சூ)

3 மாயப் பிறவி வலையை யடைத்திட
மாறுத்தி யான மனத்தி னினைத்திட
காயா புரிககோட்டை கைக்கு வசப்பட
காணு மணிச்சுடர் தானே விளங்கிட
ஆயு மறிவுடன் யோகத்தி ஞலெழும்
ஆனந்தத் தவனையுண் டன்புடனே தொழும்
தாயா யுலகத்தை யீன்ற குணங்குடித்
தற்பரனைக்கொண்டு வப்புடனே சென்று (சூ)



அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வஞ்கனுமோர் மொழியாதி பீடமியோ கத்தினது
மகிமை பெற்றோர்
வஞ்குசொறியுங் கொடுக்கும்பெண் களால்கூற் புண்களுக்குண்
மடிய மாட்டார்

வங்கெனுப தேசமெங்கள் பெண்களல்குற் கண்களுக்குண்
மடியா வண்ணம்
வங்கெனுப தேசமெங்கள் குணங்குடிமா தவனெனக்கும்
வைத்திடானே.

இராகம்-சாவேரி-தாளம்-சாப்பு.

பல்லவி.

வங்கெனு மூபதேச மெங்கள் குணங்குடி
வள்ளலென் றோதுவனே.

அநுபல்லவி.

அங்கென்றெ னுட்சரங் கும்பித் தடங்கவும்
ஐம்பததோ ரட்சரந் தம்பித்தொடுங்கவும் (வங்)

சரணங்கள்.

1 உடல்பொரு ளாவியோ டெவையுங்கைக்கொள்ளவும்
உவந்தென்னையு முய்யக் கொள்ளவும்
நொடிக்குமுன் மனவாசி மேலேற்றிக்கொள்ளவும்
நூலேணிமேலேறிக் கொள்ளவும்
படிமுடிச்சானவா ருதாரம் விள்ளவும்
படிக்குப்படி கடந்து கொள்ளவும்
கடினத்துடன்கண் டதையுங்கீழ் தள்ளவும்
காதளவுக்குமேற் கொள்ளவும்
நடனமிடும்பரி துள்ளாட்ட மெடுக்கவும்
நடித்துநடித்துக்கொண்டாட்டங் கொடுக்கவும்
இடைபிங்கலைகண்டத் தாட்ட மொடுக்கவும்
எனக்குப்பயந்தெம னோட்டம் பிடிக்கவும் (வங்)

2 கம்பமற்றவருட் கடலுள்வாய் மடுக்கவும்
களகளென நேசமமா குடிக்கவும்
செம்பொற் கமலா சனமீதிற் படுக்கவும்
செங்கீரையாடித் துடிக்கவும்
வம்பரைப்போல்விளையாட்டுவ் படிக்கவும்
வாசியிலேறி நடிக்கவும்
ஒன்பது வாயிலி னிலையைப் பிடிக்கவும்
ஒளியினோடுகொலை மடிக்கவும்
தமபிரானொனு மெல்லை சூட்டவும்
சாகருக்சுழி முனைவில்லைப் பூட்டவும்
எமபிரானென னுங கல்லை யோட்டவும்
எனககுப்பயங தெமன்பல்லைக் காட்டவும (வ)

3 தொட்டுபேரசித்த வுடன்சோதி தட்டவுந்
தொடுமுன்னே சிவயோகங் கிட்டவும்
எட்டுகையிற றிலெண் காலிரண்டுங் கட்டவும்
எட்டியவென்காலைக் கட்டவும்
கட்டைபபனை தனி லுங்கள்ளுக் கட்டவும்
கள்ளுக்கள்ளாகச சும்மா கொட்டவும்
கொட்டியகள்ளுணடபின்போதை மூட்டவும்
குதிகொலைடுகெக்கரி கொட்டவம்
கிஷ்டைபடைத்தனுபூதி மிஞ்சவும்
நிருவிகற்பசமாதி துஞ்சவும்
இஷ்டப்படிக்கரு ணின்று கொஞ்சவும்
எனக்குப்பயநதெமனின்று கெஞ்சவும் (வ)

4 கத்தன்றிருவடி பெற்றவ ளுகவும்
கட்டைகடைததேற லாகவும்

நற்றவமுற்றவுஞ் சித்தனு மாகவும்
நாவுமங்நாளத்து ளேகவும்
பத்துவகைநாத முஞ்சுத்த மாகவும்
பத்தோடிருகலை சாகவும்
ஒற்றைக்காலாங்மயிர்ப் பாலத்தி லேகவும்
ஒருபாய்ச்சலிற்றுணைடிப் போகவும்
வைத்ததீக்ஷையுத் திருத்த மாகவும்
வாலையம்பிகை பொருத்த மாகவும்
எய்த்தவெருத்த மெருதத மாகவும்
எனக்குப்பயங தெமனொருத்தன் சாகவும் (வங)

இராகம்-புன்னாகவராளி-தாளம்-ஆதி.

பல்லவி.

யானேயுனைநம்பினேன்-குணங்குடி
யானேயென்னாண்டவனே.

அநுபல்லவி.

யானேயுனைநம்பினேன்சாகச் செய்வையோ
யானைகனின்றென்னை நான்சாகச் செய்வையோ
பேய்நாய்கண்டசிறு மானைகச் செய்வையோ
பெருமானுமெமபெரு மானைகச் செய்வையோ (யா)

சரணங்கள்.

பாவையரைப்பாவி கூடிடச் செய்வையோ
பாவையர்க்குப்பயங தோடிடச் செய்வையோ
பாவங்கள்வந்தென்னை மூடிடச் செய்வையோ
பாவமெல்லாம்விட்டுச் சாடிடச் செய்வையோ

பாவிகள்போன்முகம் வாடிடச் செய்வையோ
பரஞ்சோதியம்பர மாடிடச் செய்வையோ
பாவாணர்போல்வீணிற் பாடிடச் செய்வையோ
பரிபூரணானந்தம்பாடிடச் செய்வையோ (யா)

2 சண்டாளரைவாழ்த்திக் கொண்டாடச் செய்வையோ
சற்குருவைப்போற்றிக்கொண்டாடச் செய்வையோ
தொண்டாசையென்னையுந்துண்டாடச செய்வையோ
தொண்டாசைதன்னையுந் துண்டாடச் செய்வையோ
முண்டரைப்போற்றிரண்டு முண்டாடச் செய்வையோ
முத்திதந்துதுதி கொண்டாடச் செய்வையோ
வண்டாய்த்துவண்டு துவண்டாடச செய்வையோ
வந்தருடந்தேனைப் பந்தாடச செய்வையோ (யா)

3 வெட்டவெளியிலென்னை விட்டிடச் செய்வையோ
வித்தகன்பாதத்தைக் கட்டிடச செய்வையோ
பட்டதெல்லாங்கேடு கெட்டிடச் செய்வையோ
பட்டதற்குமபலன் கிட்டிடச் செய்வையோ
நெட்டைமரம்போலப் பட்டிடச செய்வையோ
நீசனுக்குமருடெட்டிடச செய்வையோ
மட்டியென்றென்கையை விட்டிடச் செய்வையோ
வாசியும்பாவிக்குக் கிட்டிடச செய்வையோ (யா)

4 மதபேதமோதப் படித்திடச் செய்வையோ
மதமற்றஞானம் படித்திடச் செய்வையோ
வீதியற்றுப்பிசசை யெடுத்திடச செய்வையோ
வேதாந்ததீக்ஷை யெடுத்திடச செய்வையோ
விதிவந்தென்னுயிரைப் பிடித்திடச் செய்வையோ
விதியென்றுகாலைப் பிடித்திடச் செய்வையோ

மதுவென்றுகள்ளைக் குடித்திடச் செய்வையோ
மதியமிர்தத்தைக் குடித்திடச் செய்வையோ (யா)

---

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

எல்லாரு மானிடரோ வெங்கள்குணங் குடியானை
யிறைஞ்சினோர்கள்
எல்லாரு மானிடரா மெங்கள்குணங் குடியானை
யிறைஞ்ச வேண்டும்
எல்லாரு மானிடரே யெங்கள்குணங்குடியானை
யிறையேயென்றே
எல்லாருமிறைஞ்சுமெங்கள்குணங்குடியான்பொற்பதமெற்
கெய்திடாதோ.

இராகம்-அசாவேரி-தாளம்-சாப்பு.

பல்லவி.

எங்கள் குணங்குடி யாண்டவன்பாதத்தை
என்றிந்தப்பாவிக் கண்கண்டிடுமோ

அநுபல்லவி.

பொங்குந்திருவருளும் தங்கும்படிக்கருளும்
பூரணமயமாகின்ற காரணக்கடவுளான (எங்)

சரணங்கள்.

1 கூட்டிக்கருணைவிழி காட்டிக்காட்டிக் கையைக்
கொடுத்துக்கொடுத்தணைத்துப்பிடித்துப்பிடித்துமெய்யைப்
பூட்டிப்பூட்டியருள் சூட்டிச்சூட்டித்தரும்
பூரணமயமாகின்ற காரணக்கடவுளான(எங)

2 முத்திவித்தாய்ப்பதிந்தும் மொய்த்தபயிராயெழுந்தும்
மூன்றுமண்டலத்தைமுட்டிமூடியொளியால்விளைந்தும்
புத்தியுமெற்றுதுபூத்த பொற்பையற்புதத்தருளும்
பூரணமயமாகின்ற காரணக்கடவுளான (எங்)

3 வாதனை மாற்றியோக சாதனையேற்றியேற்றி
வாக்குமனமணுகா வாழ்வினைவாழ்த்தியேத்தப்
போதம்போதமெனப் போதித்தருள்புரியப்
பூரணமயமாகின்ற காரணக்கடவுளான (எங்)

4 சிற்பரத்துக்குட்சிறந்த தற்பரத்துக்குட்பிறந்த
சிற்பரத்துக்குட்பிறந்து சொற்படிகம்போற்சிறந்து
பொற்பிரபைக்கொப்பளிக்கும் அற்புதகர்ப்பூரமாகி
பூரணமயமாகின்ற காரணக்கடவுளான (எங்)



அறுசீர்க்கழி நெடிலடி யாசிரியவிருத்தம்.

அன்றெழுதி னவனெவர்க்கு மெங்கள்குணங் குடியானு
மவன்கை யாலே
அன்றெழுது மெழுததையழித் தெழுதிடவல் லபமெவர்க்குண்
டார்கரு மிலலே
அன்றெழுது மவனே தா னழித்தெழுத வல்லவன்கா
ணுத லாலே
அன்றெழுதுமெழுத்தழிதநென் மண்டையிற்றுனல்லெழுத்தொ
ன் றழுதநி டாளே.

இராகம்-பியாகடை—அட-தாளம்—சாப்பு.

பல்லவி.

ஆண்டவ னென் செய்வனோ-குணங்குடி
ஆண்டவ னென் செய்வனோ

அநுபல்லவி.

ஆண்டவனைத் தென்னை யருகில்லைவைத்திடுவேனோ
நீண்டியும் பார்க்காமற் றெருவில்விட்டிடுவேனோ (ஆண்)

சரணங்கள்.

1 தேனைப்பழித்தபே ரின்பங் கொடுப்பனோ
தேவடியார்கள்சிற் றின்பங் கொடுப்பனோ
மோனவருட்பரி வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும்பட்டங் கொடுப்பனோ (ஆண்)

2 உச்சிக்குள் வைத்த பொருளைக் கொடுப்பனோ
உச்சந்தலையில்ரண்டு குட்டுக் கொடுப்பனோ
முச்சுடரொடுசோம வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆண்)

3 வற்றாவருட்செல்வங் கொள்ளை கொடுப்பனோ
மண்ணைத்தானள்ளிக்கை கொள்ளக் கொடுப்பனோ
முத்திதருமோன வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும்பட்டங் கொடுப்பனோ (ஆண்)

4 நாக்கந் நாளவாயிற் காக்கக் கொடுப்பனோ
நாய்போல் வாயில்தோறுங் காக்கக் கொடுப்பனோ
மூக்குமுனையில்வன்னி வட்டங் கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆண்)

5 கிட்டனுகவும்வாசி கட்டிக் கொடுப்பனோ
செட்டையிற்று னிரண்டுதட்டுக் கொடுப்பனோ
முட்டமுட்டச்சட்ட திட்டங் கொடுப்பனோ
முற்றுமுட்டாளெனும் பட்டங் கொடுப்பனோ (ஆண்)

